# நெய்தற் கன்னி

புலவர் கா. கோவிந்தன், எம். ஏ.
முன்னாள் தலைவர்
தமிழ்நாடு சட்டப் பேரவை

தமிழ்த்தாய் பதிப்பகம்
8, மத்துவர் தெரு
சிட்லபாக்கம், சென்னை–600 064.

## நூல் விவரக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | நெய்தற் கன்னி |
| ஆசிரியர் | : | புலவர் கா. கோவிந்தன், எம். |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | இலக்கியம் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு : 2001 |
| நூலின் உரிமை | : | பதிப்பகத்தாருக்கு |
| நூலின் அளவு | : | கிரவுன் 1 × 8 |
| பயன்படுத்திய தாள் | : | 10.5 கிலோ வெள்ளைத் தாள் |
| பக்கங்கள் | : | 288 |
| அச்சுப் புள்ளிகள் | : | 11 புள்ளிகள் |
| ஒளி அச்சு | : | எல். கே. எம். கம்ப்யூட்டர் பிரிண்டர்ஸ், சென்னை–17. |
| அச்சகத்தார் | : | பாரி ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை. |
| நூல் கட்டு | : | சாதா அட்டை |
| விலை | : | ரூ. 75–00 |
| பதிப்பாளர் | : | தமிழ்த்தாய் பதிப்பகம் சென்னை - 64 |

---

**NEYDAR KANNI : PULAVAR K. GOVINDAN, M. A. : PRICE Rs. 75-00**

---

**PUBLISHER : TAMIZHTHAI PATHIPPAGAM, CHENNAI - 64**

# பதிப்புரை

நெய்தல் நிலத்திலே காதல் கொண்டு, அதே நினைவாக அலைமோதும் காதலரைப் பற்றிய செய்திகளைக் கொண்டது இந்நூல். கற்று அறிந்தோர் போற்றும் கலித்தொகையுள் ஐந்தாவது நூல் இது. சுவை கனிந்த காதற் காட்சிகள் மிகுந்த வளமான தமிழிலே மிளிர்கின்றன. புலவர் கோவிந்தன் மிக்க சுவையுடன் அமைத்துள்ளனர். தமிழகம் ஏற்றுப் பயன் பெறுக.

—பதிப்பகத்தார்.

# முன்னுரை

'ஆற்றுதல் என்பது, ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்;
போற்றுதல் என்பது, புணர்ந்தாரைப் பிரியாமை.
பண்பு எனப்படுவது, பாடறிந்து ஒழுகுதல்,
அன்பு எனப்படுவது, தன்கிளை செறாஅமை
அறிவு எனப்படுவது, பேதையார் சொல் நோன்றல்;
செறிவு எனப்படுவது, கூறியது மறாஅமை
நிறை எனப்படுவது, மறைபிறர் அறியாமை
முறை எனப்படுவது, கண் ஓடாது உயிர் வெளவல்;
பொறை எனப்படுவது, போற்றாரைப் பொறுத்தல்.

(நெய்தற்கலி 16, 6 —14)

*தமிழ் நூல்களிலே ஓரளவுக்கேனும் பயிற்சி யுடையவர், மேலே கூறப்பட்ட உள்ளப் பண்புகளின் சிறந்த விளக்கங்களைக் கேட்டிருப்பர். உளவியல் நெறியை மேற்கண்டவாறு செப்பமுறச் சொல்லிய தமிழ்ச் சான்றோர் நெய்தற் கலியினைப் பாடிய* **நல்லந்துவனார்** *ஆவர்.*

*இப் புலவர் பாண்டிய நாட்டுக் கோநகரான மதுரைப் பேரூரிலே வாழ்ந்து புலமைச் செங்கோல் நடாத்தியவர். தம் காலத்துப் புலவர் பெருமக்களால் உள்ளங் கலந்து உயர்த்துப் பேசப்பட்ட பேரறிவும் பெருந்திறனும் நல்லொழுக்கமும் உடையராயிருந்தனர் மருதனிளநாகனார் 'தண்பரங்குரன்றத்து அந்துவன்' என இவரை உயர்த்துப் போற்றுவர். 'மதுரையாசிரியர் நல்லந்துவனார்' என்று பெருமக்கள் அனைவரும் இவரைப் பெரிதும் பாராட்டிப் பேசுவர். நெய்தற்கலியின்*

முப்பத்து மூன்று பாடல்களையும் செய்ததோடன்றிக் கலியின் பிற பாடல்களைத் தொகுத்து அமைத்தவரும் இவரே என்பர். பரிபாடல், நற்றிணை, அகநானூறு என்னும் பிற சங்க நூற்களிலும் இவர் பாடல்கள் வந்துள்ளன.

நெய்தற்கலியின்கண் இவர் எடுத்துக் கொண்ட பொருளின் அமைதியைத், தலைவனைப் பிரிந்த தலைவி மாலையைக் கண்டு புலம்புதல், தலைவியின் துயர்கண்டு பொறாத தோழி தலைவனை விரைந்து மணந்து கொள்ளுமாறு வற்புறுத்துதல், தலைவியை அடைய வியலாத தலைவன் மடல் ஏறி ஊரைக் கூட்டித் தன் ஆற்றாமையை உரைத்து வேண்டுதல், தலைவியின் பிரிவாற்றாமை கண்டு பிற பெண்கள் கொண்ட உள்ள வேதனையும், அவன் வரத் தலைவியின்பால் ஏற்பட்ட தெளிவினை அவர்கள் உரைத்தலும் என்ற நான்கு பெரும் பகுப்பினுள் அடக்கி விடலாம்.

இந்த நிலைகளில், அவரவர் வாயிலாகப் புலவர் தரும் கருத்துக்களும், உவமைகளும், பிறவும் எண்ணி எண்ணி இன்புறத் தக்கன. அரசின் தன்மைகளையும், இயல்பையும், மன்னனுக்கும் மக்களுக்கும் உள்ள ஈடுபாட்டையும், காதலன் காதலி நிலையிலே வைத்து இவர் காட்டும் நயம் மிகவும் சிறப்பாக விளங்குகின்றது.

‘ஞாயிறு மறைந்தது; நிலவும் வந்தது; சிறந்த பேரரசன் மறைந்தான்; அவனுக்குப் பின் இளவரசன் ஒருவன் வந்தான். ஞாயிற்றுக்கும் நிலவுக்கும் இடைப்பட்ட மாலைக் காலமோ பேரரசன் மறைந்தவுடன் மக்கள் அரசிழந்து பட்ட அல்லைப் போன்றிருந்தது.”

*"கணவன் வந்தான்; அவள் துயரம் தீர்ந்தாள். படை வலியற்ற நாட்டைப் பகைவன் கைப்பற்றிக் கொடுங்கோல் நடத்தினான்; படை வலியுடன் அரசன் மீண்டு வந்து பகையைப் போக்கியதும் நாடு நல்வாழ்வு பெற்றது. இது போலிருந்தது அத் தலைவியின் உள்ள மகிழ்ச்சி."*

*இவ்வாறு, பிரிவின் நிலையைக் காட்டிப் பேசுகிறார் புலவர். அரசியலில் அவர் கொண்டிருந்த ஈடுபாடு இதற்குக் காரணமாயிற்று என்று சொல்லலாமல்லவா?*

"நயனும் வாய்மையும் நன்னர் நடுவும்
இவனின் தோன்றிய இவைஎன இரங்கப்
புரைதவநாடிப் பொய்தபுத்து இனிதாண்ட
அரைசனோடு உடன்மாய்ந்த நல்லூழிச் செல்வம் போல்
நிரை கதிர்க் கனலி பாடொடு பகல்செலக்
கல்லாது முதிர்ந்தவன் கண்இல்லா நெஞ்சம் போல்
புல்இருள் பரத்தரூஉம், புலம்புகொள் மருள்மாலை.'

*மாலையின் வரவில்தான் எவ்வளவு அரசியல் தத்துவத்தைப் புலவர் உருவாக்கிக் காட்டுகிறார் பாருங்கள்!*

*இனித் தலைவியின் உள்ளத்து வேதனையை அவர் எடுத்துக் காட்டும் நயமோ பெரிது உருக்கந் தருவதாகும்.*

'புல்லி அவன் சிறுது அளித்தக் கால்என்
அல்லல் நெஞ்சம் அடங்கலும் காண்பல்'

**(5—18—19)**

ஐயர் அவிர் அழல் எடுப்ப அரோ, என்
கையறு நெஞ்சம் கனன்று தீ மடுக்கும்!

**(18—9—10)**

வழிபட்ட தெய்வம்தான் வலி எனச் சார்ந்தார்கண்
கழியும் நோய் கைம்மிக அணங்கியது போல

(15—12—22)

குடிமைக் கண் பெரியதோர் குற்றமாய்க் கிடவாதோ?
வாய்ம்மைக்கண் பெரியதோர் வஞ்சமாய்க் கிடவாதோ?
புகழ்மைக் கண் பெரியதோர் புகராகிக் கிடவாதோ?

(18)

அழகிலாகின்று அவர் நக்கதன் பயனே
வில்லினும் கடிதவர் சொல்லினுள் பிறந்த நோய்!
பகைமையிற் கடிதவர் தகைமையின் நலியுநோய்!
தீயினும் கடிதவர் சாயலின் கனலும்நோய்!

*தலைவியைப் போலவே, தலைவன் படும் வேதனைகளும் சற்றும் குறைந்திருக்கவில்லை.*

உப்பியல் பாவை உறையுற்றது போல
உக்குவிடும் என் உயிர்.

நெய்யுள் மெழுகின் நிலையாநு பைபயத்
தேயும் அளித்தென் உயிர்.

*என்றெல்லாம், அதனையும் சுவைபடக் கூறுகிறார் புலவர்.*

*காமத்தால் உழன்ற ஒரு பெண் 'ஹிஸ்டீரியா' என்ற நோயினால் வருந்தவும் நேரலாம் என்பார்களே, இக்காலத்து அறிவியல் அறிஞர்; அது நம் புலவர் பார்வைக்குந் தப்பவில்லை. அவர் சொல்லுகிறார்:-*

'—தெருவில் பட்டு
ஊண் யாதும் இலள்ஆகி, உயிரினும் சிறந்ததன்

நாண் யாதும் இலள்ஆகி, நகுதலும் நகூஉம்; ஆங்கே
பெண்மையும் இலள்ஆகி, அழுதலும் அழூஉம்;'

*இதனினும் காமப் பித்தை எங்ஙனம் வருணிக்க முடியும்?*

*இவ்வாறாக, இணை நோக்க உணர்வு எழுந்த காதலன் காதலியர் பிரிவினால் படும் வேதனைகளை உள்ளத்தைப் பிணிக்கும் வகையிலே மிக நன்றாகக் காட்டியிருக்கிறார் நல்லந்துவனார். அம் முப்பது மூன்று பாடல்களுக்கும் மிகவும் விரிவான விளக்கத்தை அமைத்து, அனைவரும் அந்த இலக்கியக் காதலரின் உள்ளத்தோடு ஒன்றிக் கலந்து விடுமாறு, திறனுடன் இந்நூலினை அமைத்துத் தருகிறார்,* **புலவர் கா. கோவிந்தன்** *அவர்கள்.*

*உண்ண உண்ணத் தெவிட்டாத தமிழ்த் தேன்; உண்டு களித்துத் தமிழர் எல்லாம் சிந்தனைச் செல்வராகி உயர்க.*

**புலியூர்க் கேசிகன்**

# பொருளடக்கம்

# 1

## பகை மிக்க நெஞ்சத்தேம்

அரசிழந்து வருந்திய நாட்டில் வாழ்ந்து, நல்லரசு அற்ற காலத்தில் ஒரு நாடு படும் கேடு எத்தகையது என்பதைக் கண்ணெதிர் கண்டு துயர் உற்றவள் அவள். அந்நாட்டைப் பண்டு ஆண்டிருந்த அரசன் ஆண்மையிற் சிறந்தவன்; அறநெறி அறிந்தவன்; ஒழுக்க நெறி நின்றவன்; தன் ஆண்மையால் பகையரசுகளை அழித்துப் பேரரசு அமைத்தான்; அதனால் பகைவர் பயம் அற்றிருந்த அந்நாட்டு மக்களை ஆளும் அறநெறி அறிந்து ஆண்டு வந்தான். அவன் ஒழுக்கத்திற் சிறந்த உரவோனாய் விளங்கினமையால் அவன் கீழ்ப் பணிபுரியும் ஏனைய அலுவலர்களும், அவன் நாட்டு மக்களும், ஒழுக்கத்தைத் தம் உயிர் என ஓம்பி வந்தனர்; அதனால் அந்நாட்டு மக்கள் பசியும் பிணியும் பகையும் காணாது, வளமும் வனப்பும் மிக்க வளமார் வாழ்வு பெற்று மகிழ்ந்தனர். இத்தகைய நல்லாட்சியை அந்நாடு நனிமிக நீண்ட காலம் பெற்றுப் பெருமையுற்றது. அரசன் முதுமையுற்றான்;

இறுதியில் ஒரு நாள் அவன் இறந்து விட்டான்; நாடு நல்ல அரசனை இழந்துவிட்டது; பல்லாண்டு காலமாகப் பண்பு மிக்க நல்லாட்சியில் பயம் என்பது இன்னது என அறியாது வாழ்ந்து பழகிய மக்கள் உள்ளத்தில் கவலை குடிகொண்டது. 'இனிவரும் அரசன் இயல்பு யாதாமோ? அவன் ஆட்சியில் தம் நிலை என்னாமோ?' என்ற கலக்கம் அவர் உள்ளத்தைப் பற்றி அலைக் கழித்தது. அந்நிலையில் அரசு இழந்துபோன அந்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு, அறநெறி கைவிட்டு மறநெறியில் ஊறிய மனம் வாய்க்கப் பெற்ற கொடியார் சிலர், தம் ஆணவத்தைக் காட்டத் தலைப்பட்டனர். வல்லான் வகுத்தே வாய்க்கால் என்ற நிலை வந்து சேர்ந்தது. வலியோரை வாழ்வித்தனர்; மெலியோரைத் துன்புறுத்தினர். நாடு அமைதி இழந்து விட்டது. அந்நிலை ஒரு சிறிது காலமே. ஆயினும், அம்மம்ம! அச்சிறு பொழுதில் அவர் விளைத்த கேட்டினை, அவரால் அந்நாடு பட்ட துன்பத்தை அள விட்டுக் கூறல் இயலாது. அத்துணைப் பெருங்கேடுற்றது அந்நாடு; அவ்வளவு துன்புற்றனர் அந்நாட்டு மக்கள். அந்நிலை மாறிற்று. நாடு அரசிழந்து அல்லல் உறுகிறது என்பதறிந்த இறந்த அரசனின் இளவல் விரைந்து வந்து ஆட்சிப் பொறுப் பேற்றுக் கொண்டான். அரசியல் குழப்பங்கள் அடங்கின; நாடு மீண்டும் அமைதி பெற்றது. அவன் முன்னோன் ஆட்சிபோல், அவன் ஆட்சி நனிமிகச் சிறப்பு வாய்ந்து விளங்கவில்லை. என்றாலும், அவ்வாட்சி யில் மக்கள் கேடின்றியாவது வாழலாம் என்ற நம்பிக்கை கொண்டனர்.

அத்தகைய நாட்டில் வாழ்பவள் அவள்; அவள் கணவன் பொருள் ஈட்டிவர வெளிநாடு போயிருந்தான்.

போனவன் நெடு நாட்களாகியும் வீடு திரும்பவில்லை. அவன் குறித்துச் சென்ற காலமும் கடந்து விட்டது; அப்போதும் அவன் வரவில்லை. அதனால் அவள் வருத்தம் மிகுந்தது. ஒருநாள் ஞாயிறு மறைந்தபின்னர்த் தன் மனையின் முன்னிடத்தே வந்து காதலன் வருகையை எதிர்நோக்கி நின்றாள். அப்போது கண்ட அம்மாலைக் காட்சி அவள் துயரை மேலும் தூண்டிவிட்டது. அக்காலம் ஞாயிறு காயும் பகற் காலமும் அன்று; நிலவொளி வீசும் இராக் காலமும் அன்று; அவ்விரண்டிற்கும் இடைப் பட்டது அக்காலம். ஞாயிறு மலை வாயில் வீழ்ந்து விட்டான்; திங்கள் இன்னமும் தோன்றவில்லை. இருளை ஒழித்து, உயிர்களுக்கு உணவும் உணர்வும் ஊட்டிய ஞாயிற்றின் ஒளி இழப்புக் கண்டு, மக்கள் மருண்டனர். ஞாயிறுபோல் பேரொளியும், உயிர் வளர்க்கும் பெரும் பயனும் தாராதாயினும், தண்ணொளியேனும் தரும் அன்றே எனும் நினைவால், அத் திங்களின் வருகையை ஆர்வத்தோடு எதிர்நோக்கியிருக்கும் காலம், அம் மாலைக் காலம்.

இயல்பாகவே மக்கள் உள்ளத்தின் அமைதியை அழித்து விட்ட அம்மாலை, அவள் மனத் துயரை மேலும் மிகுவித்தது. மனை வாயிற்கண் வந்து நின்ற அவள் கண்முன் ஒரு பொய்கை தோன்றிற்று. மலர் நிறை மரம் செடி கொடிகள் மண்டி வளர்ந்த கரைகள் சூழ இருந்த அக் குளத்தில் அன்று காலை மலர்ந்த மலர்கள் மாலை வரவால் வாடி வனப்பிழந்து போனதைக் கண்டாள். அம் மலர்களையே பார்த்திருந்தவள் கருத்தைக் கரையி னின்றும் எழுந்த வண்டுகளின் ரீங்கார ஒலி ஈர்த்தது. அவள் பார்வை கரையை நோக்கிச் சென்றது. ஆங்கே

அழகிய வண்டுகள் வட்டமிட வாய் அவிழும் மலர்களின் மாட்சிமிகு காட்சியைக் கண்டாள். ஒரு மலரை வாடவிடுத்து ஒரு மலரை மலர்விக்கும் இம்மாலையின் கொடுமைக்கு ஓர் எல்லை யில்லையோ என எண்ணி னாள். அந்நிலையில், கணவனும் மனைவியுமாய்க் கூடி மாலையின்பத்தை நுகரச் செல்லும் காதற் சோடிகள் சில அவ்வழியே செல்லக் கண்டாள். கணவர் அருகில் உள்ளார் எனும் அமைதி நிறைந்த உள்ளம் உடைமையால் அம் மகளிரின் தோற்றம் மனதை மருட்டும் பேரழகு பெற்று விளங்குவதைக் கண்டாள். அம் மகளிரின் மேனி நலத்தைக் கண்ட அதே கண்களால் தன் மேனியை ஒரு முறை நோக்கினாள். கணவன் பிரிவால் சேர்ந்த கலக்கத்தால் தன் மேனி பொலிவிழந்திருந்தது; கணவன் பிரிவால் இயல்பாகவே கலங்கியிருந்த அவள் உள்ளம், தன் கண் முன், தன்னைப் போலும் மகளிர் தத்தம் கணவரோடு கூடிக் களித்துத் திரிவதைக் கண்டமையால் மேலும் கலங்கிற்று. ஒருவர் வாட ஒருவரை வாழ்விக்கும் கேட்டினை அம்மாலை மலர்களுக்கு மட்டும் செய்ய வில்லை, தனக்கும் செய்ததை உணர்ந்தாள். காலையில் மலர்ந்து மாலையில் வாடிய கயத்து மலர்போல் தன் மேனி அழகிழக்கவும், மாலையில் மலர்ந்து மணந்து மாண்புறும் கொடிப் பூக்கள் போல் கணவரோடு கூடிக் களிக்கும் மகளிரின் மேனி அழகு மேலும் அழகு பெருகவும் கண்டு, அக்கொடுமைக்குக் காரணமாய மாலையைப் பழித்தாள்.

காதலர் காட்சியைக் கண்டு கலங்கி நிற்பாள் காது களுள் காலையில் சென்று மாலையில் மனை திரும்பும் ஆனிரையின் பின் வரும் ஆயர் ஊதும் குழலோசை வந்து

புகுந்தது. நாற்புறமும் பிரிந்து போய்ப் புல் மேயும் ஆனிரைகளை ஒன்று சேர்க்க உதவுவது அக்குழலோசை. "மக்கள்போல் ஆறறிவு வாய்க்கப் பெறாது, ஐந்து அறிவும், அதனினும் குறைந்த அறிவும் பெற்ற ஆவின், மாவினங் களின் உணர்வுகளையும் நெகிழப் பண்ணி ஒன்று கூட்டும் அக்குழலோசை, என் காதலன் நெஞ்சை நெகிழப்பண்ணி என் நெஞ்சோடு ஒன்று கலக்கச் செய்யவில்லையே! ஒன்று கலந்து உறவாட மாட்டாது, தனித்துக் கிடந்து துயருறும் என் நெஞ்சின் துயரை மேலும் மிகுவிக்கின்றதே இக் குழலோசை என எண்ணி நெட்டுயிர்த்தாள். அந்நிலையில் அக்குழலின் இனிமையால் மகிழ்ந்து, செவ்வழிப்பண் எழுந்தாற் போலும் தன் மொழிகளால் தன் காதல் நலங்களைப் பாராட்டி இன்புறும் ஓர் இளநங்கையையும், அவள் இன்பம் மேலும் மிகுமாறு, அவளைப் பிரியாது, பின் தொடர்ந்து திரியும் அவள் காதலனாம் கட்டிளங் காளையையும் கண்டாள். அவள் கலக்கம் பெரிதாயிற்று; கூடியிருப்பார் இன்பத்தை மேலும் மிகுவித்துத், தனித்துக் கிடந்து துயர் உறுவார் துன்பத்தை மேலும் மிகுவிக்கும் குழலோசை முழங்கும் அம்மாலை நேரத்தை அவள் நெஞ்சு நொந்து பழித்தாள்.

குழலோசை கேட்டும், காதலர்களின் சிரிப்போசை கேட்டும் கலங்கி நிற்பாள் கருத்தை, எதிரே காட்சி அளித்த சோலை மரக் கிளைகளில் சேவலும் பெடையுமாய்ப் பிரியாதிருந்து களிக்கும் பறவைகளின் பேரொலி ஈர்த்தது. அவ்வொலி வந்த திசையை நோக்கினாள்; ஆங்கு அவள் கண்ட காட்சி, அவள் காதல் நோயை மேலும் வளர்த்தது. அந்நினைவால் நெஞ்சு நெகிழ்ந்து இருப்பாள் அச்சோலை யில் இளங்காதலர் இருவர் களித்திருக்கக் கண்டாள்;

வண்டுகள் வந்து மொய்க்க வாய் திறக்கும் மலர்கள்போல், காதலன் வரவு கண்டு அவள் வாய்க்கடையில் அரும்பும் இள முறுவலைக் கண்டாள். அவள் காதல் நோய் துயர் எல்லையை எட்டிவிட்டது. பறவைகளின் பிரிவறியா வாழ்வைக் கண்டு ஒருத்தி கண்ணீர் சொரிந்து கலங்க, அவள் கண்முன் காதலன் வரவு கண்டு, ஒருத்தி களித்து நகைக்கும் காட்சியைக் காட்டித் துயர்செய்யும் மாலையை, "ஏ மாலையே! நீ நனிமிகக் கொடியை. அரசிழந்து அல்லல் உறும் நாட்டில் வலியோரை மேலும் வாழ்வித்து, மெலியோரை மேலும் துயர்ப்படுத்தும் கொடியோர் போல், காதலனைப் புணர்ந்து கிடப்பாரை மேலும் இன்பத்தில் ஆழ்ந்துகின்றனை. காதலனைக் காணாது கலங்கும் என்னை மேலும் துன்பத்தில் ஆழ்த்துகின்றனை; ஆற்றவும் கொடியோய் நீ. அரசிழந்து அல்லல் உறும் காலம்போல், பகலிற்கும் இரவிற்கும் இடைப்பட்ட நீ நல்லோரால் நாவலிக்கப் பழிக்கத் தக்காய்!" என மாலை யைப் பழிப்பாள் போல், மாலைக் காட்சிகளால் தன் மனம் படும் துன்பத்தைப் புலப்படுத்திப் புலம்பினாள்.

மாலையைப் பழித்தவள் மனத்தில் மீண்டும் ஒரு மருட்சி! "பிழை மாலையிடத்து இல்லை. எல்லோரும் இன்புற்றிருக்கும் இம்மாலையில் நான் மட்டும் துன்புற் றிருப்பது இம்மாலையால் அன்று. பிற மகளிரைப்போல் நான் என் காதலனைப் பெறாது தனித்து நிற்பதே துயர்க்குக் காரணமாம். ஆகவே, கொடுமை செய்தவர், பிரிந்து போய்ப் பன்னெடும் நாட்களாகியும் என்னை நினைந்து வாராது, என்னை அறவே மறந்து கைவிட்ட என் காதலனே ஆவார். ஆகவே, பழிக்கத் தக்கவர் அவரே;

செவ்வழியாழ் நாம் பண்ண கிளவியார் பாராட்டும்
பொய்தீர்ந்த புணர்ச்சியுள் புதுநலம் கடிகல்லாய்;
மாலை நீ, நகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள் ஆர்ப்பப்
பகைமிக்க நெஞ்சத்தேம் புன்மை பாராட்டுவாய்;
தகைமிக்க புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை
முகைமுகம் திறந்தன்ன முறுவலும் கடிகல்லாய்;
என வாங்கு,
மாலையும் அலரும் நோனாது எம்வயின்
நெஞ்சமும் எஞ்சும் மன்தில்ல; எஞ்சி
உள்ளாது அமைந்தோர் உள்ளும்;
உள்இல் உள்ளம் உள்உள் உவந்தே."

*தலைவன் பிரியத் தனித்திருக்கும் தலைவி மாலை கண்டு புலம்பியது.*

2. நடுக்கற—தீவினையால் உளதாகும் மன நடுக்கம் இன்றி 3. துறக்கம்—வீட்டுலக வாழ்வு; வேட்டு—விரும்பி, 4. ஆற்றி—செய்து; 5.ஆனாது-அமை காணாது, கலுழ் கொண்ட - வருந்திய அவன்—அந்த அரசன். 6. ஏனையான்—இளவல்; 8. இறுத்தந்த—தங்கிய; 9. தூ—துயர் தாங்கும் வன்மை; கயம்—குளம். 10. குவிந்த—ஆழிந்த. 11. ஆய்சிறை—அழகிய சிறகு; தளைவிட்ட—மலர்ந்த. 12. காரிகை—அழகு; கடிகல்லாய்—போக்க மாட்டாய். 14. பை என்ற—துயர் மிகுதியால் வலியிழந்த. 19. தகை—அழகு; சினை—கிளை; பதி—கூடு. 20. முகை—அரும்பு; முகம் திறத்தல்—மலர்தல்; முறுவல்—நகை. 23. எஞ்சும்—நீங்கும். 24. உள்ளாது—நினையாது; உள்ளும்-நினைக்கும் 25. உள் இல்-உள்ளே தெளிவு இல்லாத; உள்ளம்—உள்ளத்தால், எஞ்சி உள்இல் உள்ளத்தால் உள்ளாது அமைந்தோரை, உள் உள் உவந்து உள்ளும் எம்பயன் நெஞ்சமும் மாலையும் அலரும் நோனாது எஞ்சும் மன் எனக் கூட்டுக.

*இம்மாலையன்று! உண்மை இதுவாகவும் அதை உணரும் தெளிவு வாய்க்கப் பெறாத என் நெஞ்சு, கொடுமை செய் தறியாத இம் மாலையைப் பழிக்கிறது; கொடுமையை வித்திட்டு வளர்த்து விட்ட காதலன் பின் திரிகிறது; மாலைக் காட்சியும், அம் மாலைக் காலத்தில் என்னைக் காண்பவர் என் நிலை கண்டு கூறும் அலரும் வருத்துமாறு, என்னைத் தனியே விடுத்து அக் கொடியோர் பின் சென்று விட்டது என் நெஞ்சு; அந் நெஞ்சின் கொடுமையை நான் என்னென்பேன்!" எனக் கூறிக் காதலன் நினைவால் தன் நெஞ்சு நெகிழ்ந்து அனுபவிக் கும் நீள்துயரைப் புறங்காட்டிப் புலம்பினாள்.*

"வெல்புகழ் மன்னவன் விளங்கிய ஒழுக்கத்தால்
நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கு அறத் தான்செய்த
தொல்வினைப் பயன் துய்ப்பத் துறக்கம் வேட்டு எழுந்தாற்போல்

பல்கதிர் ஞாயிறு பகல் ஆற்றி மலைசேர
ஆனாது கலுழ்கொண்ட உலகத்து மற்றவன்
ஏனையான் அளிப்பான்போல் இகல் இருள் மதிசீப்பக்
குடைநிழல் ஆண்டாற்கும் ஆளிய வருவாற்கும்
இடைநின்ற காலம்போல் இறுத்தந்த மருண்மாலை!

மாலை நீ; தூஅறத் துறந்தாரை நினைத்தலின், கயம்பூத்த
போதுபோல் குவிந்த என் எழில்நலம் எள்ளுவாய்;
ஆய்சிறை வண்டு ஆர்ப்பச் சினைப்பூப்போல் தலைவிட்ட
காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்;

மாலை நீ, தை எனக் கோவலர் தனிக்குழல் இசைகேட்டுப்
பை என்ற நெஞ்சத்தேம் பக்கம் பாராட்டுவாய்;

## 2

# உயிர் வாங்கும் மாலை

இயற்கை வளத்தால் எழில் மிக்க ஒரு பேரூரில் இளங்காதலர் இருவர் வாழ்ந்திருந்தனர். நில வளத்தாலும் நீர் வளத்தாலும் நிகரற்று விளங்கிய அப்பேரூர் மக்களின் மன வளத்தாலும் மாண்புற்றுத் திகழ்ந்தது. ஊரின் மேற்கில் வானளாவ உயர்ந்த மலையொன்றைப் பெற்று மாட்சிமையுற்றிருந்தது. நேமிப் படையேந்திய நெடுமால் நிற்கும் கோயில் ஊரின் இடையே விளங்கி விழுப்பயன் அளித்தது. அல்லியும் தாமரையும் அலரும் அழகிய பொய்கைகள் ஆங்காங்கே இடம் பெற்றுப் பெருவனப் பளித்தன. முல்லை முதலாம் நல்ல மலர்க் கொடிகள் பல மண்டிக் கிடந்தன. மா, பலா, வாழை போலும் வகை வகையான மரங்கள் செறிந்த சோலைகள் அவ்வூருக்குச் சிறப்பளித்தன. புகழ் கேட்கவும் நாணும் பேருள்ளம் வாய்ந்த பெரியோர்களும், அந்திக் காலத்தில் செந்தழல் ஓம்பி அறநெறி காட்டும் அந்தணர் முதலாம் ஆன்றோர்களும் வாழ்ந்து அந்நகரின் அறவாழ்விற்கு

ஆக்கம் அளித்தனர்; அமைதி குலைக்கும் கருத்தோடு அமர் மேற்கொண்டு வரும் பகையரசர்களை வென்று புறங்கண்டு நின்று காக்கும் அரசன் ஆட்சியால் அமைதியில் திகழ்ந்தது அப்பேரூர். குழல் முதலாம் இசைக் கருவிகளை இயக்க வல்லார் பலரும் ஒன்றுகூடி, அவ்வூர் மக்களின் கலை நுகர் ஆர்வத்தை வளர்த்தனர். பார்ப்பு களை மறந்த பறவைகளையும், கன்றுகளை நினைந்து கடிது ஓடி மீளும் கறவைகளையும் நிறையக் கொண்ட அவ்வூரில் வாழுநர் அனைவரும் தாம் பெற்ற மக்களிடத்தில் பேரன்பு காட்டிப் பேணி வளர்ப்பதில் பெருமை கண்டனர்.

இவ்வாறு எல்லா வகையாலும் சிறந்து விளங்கிய அப்பேரூரில் வாழ்ந்திருந்த அவ்விளங் காதலர்களுள் கணவன், தன் இல்வாழ்க்கை நல்வாழ்க்கையாக விளங்க வேண்டுமெனும் வேட்கைகொண்டு, அதற்குத் துணைபுரிய வல்ல பெரும் பொருளைச் சேர்ந்து வர வேண்டும் என்ற சிறந்த சிந்தையுடையனாய், அது கிடைக்கும் வெளி நாட்டிற்குச் சென்றிருந்தான். சென்றவன், செல்லுங்கால் விரைந்து வந்து விடுவேன், வருந்தற்க எனத் தன் மனைவிக்கு ஆறுதல் உரைத்துச் சென்றிருந்தான். அவள், அவன் வாக்குறுதியை நம்பி, அவன் சென்றிருக்கும் வினையின் சிறப்பினை உணர்ந்து, சில நாள் அப் பிரிவுத் துயரைத் தாங்கிக் கொண்டாள். ஆனால், சென்றவன் விரைவில் வந்திலன். அவன் வரவை ஒவ்வொரு நாளும் எதிர் நோக்கியிருந்து ஏமாந்து துயர் உற்றாள். அதனால் அந்நிலையில் அவள் கண்ட ஒவ்வொரு காட்சியும் கேட்ட ஒவ்வொரு ஒலியும் அவள் அகத் துயரைத் தூண்டி விட்டன.

இவ்வாறு துயர் உறுவாளை அவள் தோழி கண்டாள். 'இவள் இவ்வாறே கிடந்து துயர் உற்றால், இவள் உடல் நலம் கேட்டு உயிரிழந்து போகவும் நேரும். ஆகவே இவள் மனத்துயரை எவ்வாறேனும் மாற்ற வேண்டும்!' எனக் கருதினாள். மனம் மகிழும் காட்சி களைக் கண்டால் மனநிலை மாறும் என நம்பினாள். அந்நிலையில் மாலையும் வந்தது. அவளை அழைத்துக் கொண்டு உலாவச் சென்றாள். சென்று கொண்டே, "பெண்ணே! ஒளி தரும் தன் கதிர்களால் உலகிற்கு ஒளியூட்டி அதன்கண் உள்ள ஒவ்வொரு பொருளையும் உள்ளவாறே காட்டவல்ல பகற் காலத்தை ஆக்கி அளித்த ஞாயிறு, அவ்வொளிக் கதிர்களைத் தன்பால் மீட்டுக் கொண்டு, பகற்காலத்தை அழித்துவிட்டு மேலைத் திசை மலையில் சென்று மறைந்து விட்டான். தன் ஒளிக் கதிராகிய வாய் கக்கிய பகற்காலத்தை மீண்டும் அவ் வாயே விழுங்கியதுபோல் உலகை மறைத்துவிட்டு ஒளிந்து கொண்ட ஞாயிற்றின் செய்திறம்காண். ஞாயிற்றின் மறைவை எதிர்நோக்கியிருந்தது போல் ஈண்டு வந்து சூழ்ந்து கொண்டது இருள். நேமிப் படையேந்தி நிற்கும் நெடுமாலின் நீலநிறம் போல் எங்கும் நிறைந்துவிட்ட இவ்விருளைக் காண். பரவிய இருளைப் பாழ் செய்து விட்டு நிலவின் ஒளி எழுந்துவிட்டது. நாட்டுள் புகுந்து விட்ட பகைவர் படையை வென்று புறங்காணும் வேந்தன் போல், இருளைப் புறங்கண்டு நிலாவொளி வீசும் வெண்திங்கள் வருகையைக் காண். இத் தாமரைப் பொய்கையைப் பார். காலையில் மலர்ந்த மலர்கள் மாலையில் வாடி வாய் மூடிக் கிடக்கின்றன. இரவு வந்துற்றதும் தத்தம் கணவன்மாரோடு களித்திருக்கும்

காரிகையரின் கண்கள் மூடிக் கிடப்பதுபோல் காட்சி அளிக்கும் அவற்றின் கவினைக் காண். சோர்ந்து நிற்கும் இச்சோலை மரங்களைப் பார். தம்மைப் புகழ்ந்துரைக்கக் கேட்ட சான்றோர் தம் தலை வணங்கிப் பணிந்து நிற்கும் பெருநிலை போல், காலையில் நிமிர்ந்து நின்ற இம்மரத்து இலைகள், மாலை வரவே, மடிப்புண்டு தலை சாய்த்து நிற்கும் இத்தனிச் சிறப்பைக் காண். இம் மலர்க் கொடிகளின் மாண்புமிகு காட்சியைக்காண்; அகம் மலர முகம் மலரும் மங்கையரின் வாயிற்கடையில் அரும்பும் இளநகைபோல் முகை அவிழ்ந்து மணக்கும் மாட்சியை என்னென்பேன்! மலரும் மலர்களைச் சூழ்ந்து அவற்றில் உள்ள தேனைக் குடிக்கப் பறந்து திரியும் இவ்வண்டுகள் எழுப்பும் இனிய பேர் ஒலியைக் கேள்! இசை வல்லார் தம் குழலினின்றும் எழுப்பும் இனிய இசையை நினைப்பூட்டும் அவ் வொலியின் இனிமையைக் காண்! கூடுகளில் விட்டுச் சென்ற பார்ப்புகளை நினைந்து, அவற்றிற்கு வேண்டும் இரையேடு விரைந்து பறந்தோடி வரும் இப் பறவைகளைப் பார். காலையில் காடு சென்ற இக்கறவைகள், மன்றுகளில் விட்டுச் சென்ற தம் கன்று களுக்கு மடி நிறையக் கொண்ட பாலோடு விரைந்தோடி வரும் விந்தையைக் காண். இவைபோல் அழகிய காட்சிகளாலும், இனிய நிகழ்ச்சிகளாலும் மாண்புற்றுத் திகழும் இம் மாலைக் காலத்தை, அந்தணர் செந்தழல் வளர்த்து வரவேற்கும் வனப்பைக் காண்!'' என ஆங்காங்கே காணும் அம்மாலைக் காட்சிகளை அவள் மனங் கொள்ளும் வகையில் விளக்கிக் காட்டிக் கொண்டே வந்தாள்.

கணவன் பிரிவால் கவலை கொண்டிருப்பவளின் மனத்துயரை மாய்க்கவேண்டும் என்ற நல்லெண்ணத்தால் தோழி மாலைக் காட்சிகளைக் காட்டி வந்தாள். ஆனால் அவள் கண்ட பயன் வேறு. மாலையோ மற்ற இன்பக் காட்சிகளோ மகளிர்க்கு, அவர்கள் தத்தம் கணவரோடு கூடிக் களித்திருக்கும் பொழுது மட்டுமே இன்பம் அளிக்கும். ஏனைய காலங்களில் அவை அவர்க்கு இன்பம் அளிக்கா. மாறாகக் கணவனைப் பிரிந்து தனித்திருக்கும் காலத்தில், கூடியிருந்த காலத்தில் இன்பம் அளித்த அதே பொருள்கள், அவர்க்குப் பெருந்துன்பம் தரும் பெற்றியவாம். அதை உணர்ந்திலள் தோழி; உணர்ந்திலள் என்பதினும், அவ்விளையாளின் மனத்துயரைப் போக்க வேண்டும் எனும் ஆர்வ மிகுதியால் அதை மறந்து விட்டாள் என்பதே பொருந்தும். அதனால் மாலைக் காட்சிகளை அவ்வாறு காட்டிக் கொண்டே வந்தாள்.

மாலைக் காட்சிகளைத் தோழி காட்டக் காட்ட, அப் பெண்ணின் உள்ளத்தில் படிப்படியாகத் துயர் வளர்ந்து கொண்டே வந்தது. மனைப்புறமாதலின் அம் மனத்துயரை ஒருவாறு அடக்கிக் கொண்டாள். இறுதியாக வீடு வந்து சேர்ந்ததும், கண்ட மாலைக் காட்சிகளின் மாண்பினை உணர்ந்தாயோ என்று தோழி கேட்கவே, அவள் அகத்தில் அடைப்பட்டுக் கிடந்த அத்தனை துயரும் அவ்வகத்தைப் பிளந்து கொண்டு வெளியே பாய்ந்து விட்டன. "தோழி! நீ காட்ட நான் கண்டது மாலைக் காலத்தை அன்று; என் உயிர் போக்கும் கொலைக்களத்தை! தோழி! நீ காட்டிய இக் காட்சிகளும் நிகழ்ச்சிகளும் கணவனைப் பிரிந்து கலங்கியிருக்கும் என் போலும் மகளிரின் உயிரை, அன்னார் உடலினின்றும்

*பிரித்துப் போக்கும் பொல்லாங்கு நிறைந்தவை அல்லவோ? இவற்றிற்கு மாலைக் காலம் என ஒரு பெயர் சூட்டி, இதையும் வாழ்நாளின் ஒரு பிரிவாகக் கருதிக் கால வரம்பு காணுவார் அறிவுடையர் ஆவரோ?" எனக் கேட்டு விட்டு, மனையகத்தே விரைந்து புகுந்து, படுக்கையில் வீழ்ந்து புரண்டு, விம்மி விம்மி அழத் தொடங்கி விட்டாள்.*

"அகல் ஞாலம் விளக்கும் தன்பல்கதிர் வாயாகப்
பகல் நுங்கியதுபோலப் படுசுடர் கல்சேர;
இகல்மிகு நேமியான் நிறம் போல இருள் இவர;
நிலவுக் காண்பது போல அணிமதி ஏர்தரக்,

கண்பாயல் பெற்றபோல் கணைக்கால மலர் கூம்பத்,
தம்புகழ் கேட்டார் போல் தலைசாய்த்து மரம்துஞ்ச,
முறுவல்கொள் பவைபோல முகை அவிழ்பு புதல் நந்தச்
சிறு வெதிர்ங் குழல்போலச் சுரும்பு இமிர்ந்து இம்மெனப்
பறவை தம் பார்ப்பு உள்ளக், கறவை தம் பதிவயின்

கன்று அமர் விருப்பொடு மன்று நிறை புகுதர,
மா வதிசேர, மாலை வாள் கொள
அந்தி அந்தணர் எதிர்கொள அயர்ந்து
செந்தீச் செவ்வழல் தொடங்க வந்ததை
வால் இழை மகளிர் உயிர் பொதி அவிழ்க்கும்

காலை ஆவது அறியார்;
மாலை என்மனளளார் மயங்கியோரே."

*தலைவன் பிரியத் தனித்திருக்கும் தலைவி மாலைப் பொழுது கண்டு ஆற்றாது தோழிக்கு உரைத்தது.*

1. ஞாலம் — உலகத்தை. 2. நுங்கிய — விழுங்கியது; படுசுடர் — மறையும் ஞாயிறு; கல் — மலை. 3. இகல்மிகு — போரில் வல்ல;

நேமி – சக்கரப் படை; இவர – பரவ. 4. ஏர்தர – தோன்ற. 5. பாயல் பெற்ற போல் – உறக்கம் கொண்டது போல்; கணைக்கால – திரண்ட தண்டுகளைக் கொண்ட. 6. துஞ்ச – துயில, 7. முறுவல் – சிறுநகை; முகை – அரும்பு; புதல் – புதர்; நந்த – விளங்க. 8. வெதிர் – மூங்கில்; இமிர்ந்து – ஒலித்து. 9. பார்ப்பு – குஞ்சு; கறவை – கன்று ஈன்ற பசு. 11. வாள்கொள – ஒளி பெற்று விளங்க. 12. அயர்ந்து – தம் கடன் ஆற்றி. 13. வந்ததை – வந்த இதனை 14. பொதி - அடங்கியிருந்த உடலினின்றும் அவிழ்க்கும் – போக்கும். 15. காலை – காலத்தின் திருவிளையாடல். 16. மயங்கியோர் – அறிவிழந்தோர்.

# 3

## வந்தான் மறந்தான்

வளம் கொழிக்கும் ஒரு நாட்டிற்கு வேந்தனாய் வந்து வாய்த்திருந்தான் ஆண்மை யிழந்த ஓர் அரசிளங் குமரன். ஆற்றலில் குறைந்திருந்த அவனுக்கு நாற்படையும் நன்கு வாய்க்கவில்லை. படைவன்மையோ, போர்த் திறனோ வாய்க்கப் பெறாத இளைஞன் அந்நாட்டு அரியணையில் அமர்ந்துள்ளான் என்பதை அறிந்து கொண்ட பகைநாட்டு மன்னன் ஒருவன், தன் படைத் துணையால் அவனைப் போரில் தொலைத்து, அந்நாட்டில் தன் ஆட்சியை நிலை நாட்டி விட்டான். படைவன்மை வாய்க்கப் பெற்றிருந்த அப்பகை மன்னன்பால் பண்பு வாய்க்கவில்லை. பண்பற்றவனாதலின், அவன் உள்ளத்தில் அருளோ, அவன் செயலில் அறமோ தலைகாட்ட அஞ்சின. அரசன் எவ்வழி, அவ்வழிக் குடிகள் என்பது உலகியல்பு. ஆதலின், அவன் ஆட்சிக் கீழ்ப் பணிபுரியும் அரசியல் அலுவலாளர்களும்,

அவனைப் போன்றே, அருளையும் அறத்தையும் மதியாது அழிவுத் தொழில் மேற்கொள்ளத் தலைப் பட்டனர்.

மக்கள் தம் வாழ்நாளைப் பயனின்றி வறிதே கழித்துப் பாழாக்கினர். அதனால் நாடு வறுமையுற்றது. நாடு வறுமையுறவே, நாட்டு மக்கள் தலை வணங்காத் தம் தருக்கினை இழந்து, எவரைக் காணினும், அவர் முன் பல்லிளித்து இரந்து நிற்கும் பழிமிகு வாழ்வுடையராயினர். நாட்டின் நால்வகை வளங்களும் மறைந்து போன அப்போதே நாட்டு மக்களின் மன வளமும் மாண்டு போயினமையால், செல்வச் செருக்கால் சிறப்புற்று வாழும் ஒரு சிலரும், ஈத்துவக்கும் இன்பத்தை அறியாராயினர். அதனால், தன் முன் வந்து, தம் வயிற்றினைக் காட்டி, வறுமையைக் கூறி இரப்பார்க்கு இல்லை எனக் கூசாது கூறி அனுப்பும் கொடியவராகிவிட்டனர்.

அரசனும், அமைச்சர் முதலாம் அரசியல் பணியாளரும் இவ்வாறு பண்பற்றவராகி விடவே, நாட்டில் அறம் அழிந்து போக, மறம் தலைவிரித் தாடிற்று. வம்பர்களும் வன்னெஞ்சர்களும் வாழும் வன்னிலமாக மாறிவிட்டது. விலங்கினங்களுள் மிக மிகப் பயந்த விலங்கு மான். மருண்டு நோக்கும் மானினத்தைக் காண்பவர் எத்தகையராயினும், அவர் உள்ளம் அதன்பால் நெகிழ்ந்து விடும். ஆனால், அவ்விரக்க உள்ளம் அந்நாட்டு மக்களை விட்டு மறைந்து விட்டது. ஒரு மான் வெள்ளத்தில் வீழ்ந்து கரை ஏற மாட்டாது கலங்கி வருந்துவதைக் காணும் அவர் உள்ளம், அதை அவ் வெள்ளத்தினின்றும் கரையேற்றிக் காப்பாற்ற வேண்டும் எனக் கருதாது, வேட்டைக்குத் தப்பி விரைந்தோடி மறையும் அதை அம்பெய்து கொல்வதற்கு

அதுவே ஏற்ற வாய்ப்பாகக் கொண்டு, அவ்வாறே அம்பேவி அழிக்கும் அரக்கர்களாயினர். பகைவனே ஆயினும், படைக்கலம் இழந்தவனாயின், அவன்பால் பரிவு காட்ட வேண்டும் என்பது அறநெறி கண்ட போர் நெறி. நெறி மிக்க போர் முறை அறியாது வெறி மிக்க போர் முறையிலேயே பழகிய அந்நாட்டு வீரர்கள், தம்மோடு போரிட ஆற்றாது தோற்ற வீரர்கள்பால் பரிவு காட்டு வதற்கு மாறாக, அவரை அந்நிலை கண்டு எள்ளி நகைக்கும் இழிந்தோராயினர். போரில் புண் பெற்றுப் பகை வீரர்கள் வீழ்ந்து விட்டால், அவரைத் தம் பாசறைக்கு விரைந்து கொண்டு சென்று, அப் புண்களுக்கு மருந்திட்டு ஆற்றி, அவர் நாட்டிற்கு அனுப்பி வைக்க வேண்டும் என்பது அறநெறி, அவ்வற நெறியை மதிக்கும் மன வளம் அந் நாட்டு வீரர்கள்பால் அழிந்து விட்டமையால், அவர்கள் வீழ்ந்த பகைவர்களின் புண்களில் தம் கைவேலை நுழைத்து உயிரிழக்கப் பண்ணும் பொல்லாங்குடையராயினர்.

இத்தகைய அழிவு ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது அந்நாட்டில்; நாட்கள் சில சென்றன. அந்நாட்டு அரச குடியில் ஆற்றல் மிக்க ஓர் அரசன் தோன்றினான். தன் அறிவின் பெருமையால், தன் ஆண்மைச் சிறப்பால் அக்கொடுங்கோலனை அழித்தான். நாட்டில் மீண்டும் நல்லாட்சியை நிறுவினான். அறம் பிறழா அவன் ஆட்சி நலத்தால் மக்கள் மனநிறை வாழ்வு பெற்று மகிழ்ந்தனர்.

அப்போது ஆங்கு வாழ்ந்திருந்த ஓர் இளைஞன், பாடுபட்டுப் பொருள் தேடித், தேடிய பொருளைப் பலர்க்கும் பகிர்ந்தளித்து வாழும் பயனிறை வாழ்வால்

உண்டாம் விழுப்புகழை விரும்பிப் பொருள் தேடும் முயற்சி மேற்கொண்டான். அண்மையில் மணங் கொண்டவன் அவன். அவன் மனைவி அழகின் திரு வுருவம், அன்புப் பிழம்பு. அத்தகையாளை வீட்டில் விட்டுப் போயிருந்தான். கடமைச் சிறப்பில் கருத்தைச் செலுத்திக் கணவனைப் போக விடுத்த அவள், அவன் வருகையை ஒவ்வொரு நாளும் எதிர் நோக்கியிருந்தாள். ஆனால், வெளியூர் சென்ற அவனால் விரைவில் வீடு திரும்ப முடியவில்லை. அதனால் அவள் மிக மிக வருந்தினாள்; கண்ணிற் படும் ஒவ்வொரு பொருளும் அவளுக்குத் துயர் தருவதாகத் தோன்றிற்று.

ஒருநாள் மாலை மனைப்புறம் சென்று நின்றாள். பேரொளி வீசிக் காய்ந்த ஞாயிறு மேலைத் திசையில் சென்று மறைந்து கொண்டிருந்தான். இருள் பரவத் தொடங்கி விட்டது; ஒலியெல்லாம் அடங்கி விட்டது; தனிமையுணர்ச்சி மேலிட்டது. அச்சூழ்நிலை, அறிவிருந்து அகத்தில் அருள் உணர்ச்சி அற்றுப் போனமையால், அறநெறியை அறிய மாட்டாப் பண்பிலி யொருவன், தனக்கோ, உலகிற்கோ பயன் அளிக்கும் பெருஞ் செயல் எதையும் புரியாது, வாணாளை வீணாளாக்கிக் கிடக்குங் கால், அவன் உள்ளமும் உணர்விழந்து கிடப்பதுபோல் தோன்றி, அவளைத் துயர் உறச் செய்தது. ஞாயிற்றின் ஒளி வெள்ளத்தில் மூழ்கிப் பேரழகுக் காட்சியளித்திருந்த மரங்களெல்லாம், அவ்வொளி மறைந்து போகவே, அப் பொலிவு இழந்து போயின. ஊக்கம் இழந்து, உறுதொழில் அறியாது, பிறர் முன் சென்று இரந்து நிற்பவன் உள்ளத்தில் உணர்வற்றுப் போனது போலும், அம்மரக் காட்சியைக் கண்டு கலங்கியவள், அம்மரத்து இலைகளின் கூம்பிய

நிலை, இரந்து நிற்பார்க்கு இல்லையெனக் கூறும் கொடி யோர்களின் உள்ளத்துக் குறுகிய நிலையை நினைப்பூட்ட, நின்று வருந்தினாள்.

மேற்குத் திசையை நோக்கினாள். உயிர்களெல்லாம் ஒடுங்க, ஒலியெல்லாம் அடங்க நின்ற அவ்வந்திக் காலத்தில், செக்கச் செவேலெனச் சிவந்து தோன்றும் அச்செவ்வானத்தில், வெண்பிறை தோன்றும் காட்சியைக் கண்டாள். உலகெலாம் ஒருங்கு அழியும் ஊழிக்காலத்தில், உலகத்து உயிர்களை யெல்லாம் கொன்று வெல்லும் கூற்றுவன், அவ்வுயிர்களின் இரத்தக் கறை படிந்த தன் வாய்க் கோடியில், உயிர்களைத் தின்று தின்று ஒளி பெற்ற எயிறுகள் தோன்ற நகைப்பது போன்ற நினைவு அவள் நெஞ்சில் எழவே, நெடிது நின்று புலம்பினாள்.

கணவன் உடன் இருந்தால், உள்ளத்திற்குக் களிப்பூட்ட வேண்டிய இம்மாலைக் காட்சிகள், அவன் இல்லாமையால் கலக்கம் தருகின்றனவே! இது கணவன் இல்லாக் குறையன்றோ? இதை அறியாது கொடுமை செய்யும் இம்மாலையின் கொடுஞ் செயலை என்னென் பேன் என, எண்ணி வருந்தினாள். துணையாய் இருந்து துயர் போக்க வேண்டிய என் கணவர், என்னைத் தனியே விட்டுப் போய்விட்டார்; அது மட்டுமன்றே. எனக்கு உற்ற ஒரே துணையாய் இருந்த என் உள்ளத்தையும் உடன் கொண்டு போய்விட்டார். அதனால் அல்லற்பட்டு அழுது நிற்பேனை, ஏ மாலைக் காலமே! மேலும் துன்புறுத்த நீ வந்து சேர்ந்தாய். வெள்ளத்தில் வீழ்ந்து, கரை ஏறும் வழி காணாது கலங்கும் மானின் மார்பு நோக்கி அம்பெய்யும் கொடியான் போலும், உன் செயல் கண்டு நீ நாணிலையோ? அன்பால் என்னை வாழ்விக்க வேண்டிய

என் காதலர், அவ்வன்பை மறந்து வாழ்கிறார்; அதனால் கடுந்துயர் உற்றுக் கலங்கியிருக்கிறேன் நான். துயர் உறும் என் நிலை அறிந்து வந்து, என்னைப் பெருந்துயர்க்கு உள்ளாக்குகின்ற ஏ மாலைக் காலமே! படை யிழந்து போனமையால் போரில் தோற்று இருப்பாரை எள்ளி நகையாடும் இழிசினர்போல், கணவன் அன்பிழந்து கலங்கி யிருக்கும் என்னைத் துன்புறுத்தும் உன் இழிசெயலை என்னென்பேன்? பற்றுக் கோடாய் இருந்து என்னை வாழ்விக்க வேண்டிய என் கணவர், என் உடன் இருந்து என் துயர் போக்கிலர். அதனால் பெருந்துயர் உறுகிறேன் நான். இவ்வாறு வருந்தும் இந்நிலையில் வந்து என்னை மேலும் வருத்துகின்ற மாலைக் காலமே! வெந்த புண்ணில் வேல் நுழைக்கும் கொடியோன் போலும், உன் கொடுமையை என்னென்பேன்!" எனப் பலப்பல கூறிப் புலம்பினாள்.

இவ்வாறு கலங்கிக் கண்ணீர் விடுவாளை அவ்வூர்ப் பெரியோர் சிலர் கண்டனர்; அவள் நிலைக்குப் பெரிதும் வருந்தினர். அந்நிலையில் மாலை மறைய, இரவு வரத் தொடங்கி விட்டது. அப்பொழுது மேலைத் திசையி லிருந்து விரைந்து வந்தது ஒரு தேர்; வந்த தேர் அப் பெண்ணின் மனைமுன் நின்றது; நின்ற தேரினின்றும் அவள் கணவன் இறங்கி அவளை அணுகினான். கணவனைக் கண்டாளோ இல்லையோ, அவள் கலக்க மெல்லாம் எங்கோ சென்று மறைந்தன. அவள் கண்ணில் நீர் நீங்க, அது புத்தொளி வீசிற்று. தம் ஊரில் பண்டு நிலவிய பாழாட்சி, இன்று நாடாளும் நல்லோன் வரவால் விரைந்து அழிந்ததுபோல், அவள் துயர் கணவன் வரவால் கணப் பொழுதில் மறைந்து போனதைக் கண்டு, அவ்வூர்ப் பெரியோர் அகம் மகிழ்ந்தனர். அம்மட்டோ? தாம் கண்டு

மகிழ்ந்த அக்காட்சியை வழியில் வருவார்க்கெல்லாம் உரைத்து, அவள் அன்பின் பெருமையை வாழ்த்திப் புகழ்ந்து பாராட்டிக் கொண்டே சென்றனர்.

“அருள் தீர்ந்த காட்சியான், அறன் நோக்கான், நயம் செய்யான்
வெருவுற உய்த்தவன் நெஞ்சம் போல், பையய
இருள் தூர்பு புலம்பூரக், கனை சுடர் கல்சேர,
வரவுத்தகை மழுங்கித் தன்இடும் பையால் ஒருவனை
இரப்பவன் நெஞ்சம்போல் புல்லென்று புறமாறிக்,
கரப்பவன் நெஞ்சம்போல் மரம்எல்லாம் இலைகூம்பத்
தோற்றம் சால் செக்கருள் பிறைநுதி எயிறாக
நாற்றிசையும் நடுக்குறூஉம் அடங்கற் காலைக்
கூற்று நக்கது போலும் உட்குவரு கடுமாலை!

மாலை! நீ, உள்ளம் கொண்டு அகன்றவர் துணைதாராப் [பொழுதின்கண்
வெள்ளமான் நிறம்நோக்கிக் கணைதொடுக்கும் கொடியான் [போல்
அல்லல் பட்டு இருந்தாரை அயர்ப்பிய வந்தாயோ?
மாலை! நீ, ஈரம்இல் காதலர் இகந்து அருளா இடன் நோக்கிப்
போர் தொலைந்து இருந்தாரைப் பாடெள்ளி நகுவார்போல்
ஆர்அஞர் உற்றாரை அணங்கிய வந்தாயோ?
மாலை! நீ, கந்தாதல் சான்றவர் களைதாராப் பொழுதின்கண்
வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான் [போல்
காய்ந்த நோய் உழப்பாரைக் கலக்கிய வந்தாயோ?

என வாங்கு,
இடன் இன்று அலைத்தரும் இன்னாசெய் மாலை
துனிகொள் துயர் தீரக், காதலர் துனைதர
மெல்லியான் பருவத்து மேல்நின்ற கடும்பகை
ஒல்லென நீக்கி ஒருவாது காத்தோம்பும்
நல்லிறை தோன்றக் கொட்டாங்கு
இல்லா கின்றால் இருள் அகத்து ஒளித்தே."

*தலைவன் பிரியத் தலைவி மாலைப் பொழுது கண்டு கலங்கிய விடத்துத் தலைவன் வரவும், அவள் அகமலர்ச்சியும் கண்ட ஊரார் உவந்து கூறியது.*

1. காட்சியான் – அறிவால்; நயம் – நல்ல செயல்; 2. வெருவுற – பிறர் கண்டு அஞ்ச; உய்த்தவன் – பயனின்றிக் கழித்தவன்; பைபய – மெல்ல. 3. தூர்பு – மறைந்து; புலம்பு – தனிமை யுணர்வு; ஊர – மிக 4. உரவுத்தகை – உள்ளத்திற்கு உரம் அளிக்கும் அறிவின் அழகு; இடும்பை – வறுமை. 5. புல் என்று – பொலிவிழந்து; 8. அடங்கள் காலை – ஊழிக் காலம். 9. உட்குவரு – துன்பம்தரும். 10. உள்ளம் – உள்ளத்தை. 11. நிறம் – மார்பு; 12. அயர்ப்பிய – துன்புறுத்த. 13. ஈரம் – அன்பு, இகந்து – பிரிந்து; அருளா – அன்பு செய்யாத. 14. தொலைந்து – தோற்று; பாடு – அவர் பட்ட தோல்வியை. 15. ஆர்அஞர் – பொறுத்தற்கு அரிய துன்பம்; அணங்கிய – வருத்த. 16. கந்தாதல் சான்றவர் – பற்றுக் கோடாய் அமைய வேண்டியவர்; களைதாரா – போக்காத; 20. இடன் இன்று – துன்பம் ஒழிந்து நிற்கும் இடம் இல்லையாக. 21. துனி கொள் – வெறுப்பு மிக்க; துனைதர – விரைந்து வந்து அடைய. 22. மெல்லியான் – அறிவாலும் ஆற்றலாலும் குறைந்த அரசன். 23. ஒல்லென – விரைவாக; ஒருவாது – நீங்காமல் நின்ற. 24. இறை – அரசன்; மாலை இருள். அகத்து ஒளித்து இல்லாகின்ற என மாற்றுக; ஆல் – அசை.

# 4

# இடும்பை இரிந்தது

கீழ்க்கடலை அடுத்து இருந்தது ஓர் ஊர். மேற்றிசையில் வளங் கொழிக்கும் மலை யொன்றைப் பெற்றிருக்கும் அப்பேரூரை முழுநிலா நாளன்று காணக் காண்பார்க்குக் கோடிக் கண்கள் வேண்டும். அதிலும் வேனிற் காலத்து வெண் திங்கள் நாள் வியப்பூட்டும் அழகு பெற்று விளங்கும். பகலெல்லாம் பேரொளி தந்த ஞாயிறு, மேலைத்திசை மலையில் சென்று மறைந்து கொண்டிருக்கும் அதே நேரத்தில், கீழ்த்திசையில் வெண்திங்கள் கடல் நீரில் மூழ்கி எழும் மங்கையர் முகம்போல் கடல் நீரினின்றும் எழுந்து ஒளி வீசும் காட்சி, அம்மம்ம! கண்கொள்ளாக் காட்சியாம்.

இயற்கை அழகு மிக்க அக் கடற்கரைப் பேரூரின் பெருமை மிக்க குடியில் பிறந்த ஓர் இளைஞன், ஒரு நாள் விரைந்து ஓட வல்ல குதிரைகள் பூட்டப்பெற்ற தன் நெடிய தேரில் ஏறி, அக் கடற்கரையை ஒட்டியவாறே ஓட்டிச் சென்றான். சில காவதம் சென்றதும், கடற்கரை மணலில், தன் தோழியரோடு மணல் வீடு கட்டியும் மலர் கொய்தும்

மகிழ்ந்தாடிக் கொண்டிருந்த அழகிய ஓர் இளமகளைக் கண்டான். அவளும் அவனைக் கண்டாள்; இருவர் கண்களும் ஒன்று கலந்தன. இருவர் கருத்தும் ஒன்று பட்டன. இருவர் உள்ளத்திலும் காதல் ஊற்றெடுத்தது. அன்று முதல் இளைஞன் ஒவ்வொரு நாளும் ஆங்கு வரத் தலைப்பட்டான். அவளும், அவ்வாறே, அவன் வருகையை எதிர்நோக்கி, ஆங்கு வரும் வழக்கம் மேற்கொண்டாள். இவ்வாறு அவர் காதல் வளர்ந்தது. இருவரும் ஓருயிரும் ஈருடலுமாம் எனக் கூறுமாறு ஒன்றுபட்டனர்.

சில நாள் சென்றன. இளைஞன் வருகை தடைப்பட்டது. அவனை எதிர்நோக்கி வந்து வந்து, அப்பெண் ஏமாந்து போனாள். அதனால் அவள் வருத்தம் மிகுந்தது. கண்ணில் நீர் கசிந்தது. உடல் மெலிந்தது; கைவளை கழன்று ஓடுமாறு தோள்கள் தளர்ந்து போயின; முகம் ஒளி இழந்தது. இளையாளின் இந்நிலை மாற்றம் கண்டு, ஊர்ப் பெண்கள் அலர் கூறிப் பழிக்கத் தலைப்பட்டனர்: அவள் கண்கள் துயில் மறந்தன; இரவெல்லாம் விழித்திருந்து வருந்தினாள். ஊரெல்லாம் உறங்கி விடும்; அவள் உறங்காள். கடல் அலை எழுப்பும் ஒவ்வொரு ஒலியும் அவள் காதில் சென்று ஒலிக்கும். காரிருள் பரந்த அவ்விரவில் வீசும் கடற்காற்றின் குளிரால் உடல் நடுங்குவதையும் மறந்து, அவள் அவனை நினைந்து வருந்துவள். சேவல் பிரிந்து போய்விடத் தனித்துக் கிடந்து துயர் உறும் நாரைப்பேடு, இரவின் இடையாமத்திலும் உறங்காதிருந்து, உரத்த குரல் எடுத்துத், தன் காதற் சேவலைக் கூவி அழைக்கும் ஒவ்வொரு ஒலியையும், அவள் ஒருத்தியே உறங்காதிருந்து கேட்டு உறுதுயர் கொள்வாள்.

அவள் இவ்வாறு வருந்துவதைக் கண்ட தோழி, இளைஞனை எவ்வாறேனும் கண்டு, அவள் நிலையை அவனுக்குக் கூறி, அவளை விரைந்து வந்து வரைந்து கொள்ளுமாறு வேண்டிக் கொள்ள வேண்டும் என எண்ணினாள். அதனால், அவனைக் காணும் கருத்துக் கொண்டு, கடற்கரைக்கு ஒவ்வொரு மாலையும் சென்று காத்திருந்தாள். பலநாள் கழிய, ஒருநாள் வந்த அவனைக் கண்டாள். வந்தானை எதிர்சென்று வணங்கி, "அன்ப! நின்பால் என் தோழி கொண்டுள்ள காதல் எத்துணைப் பெரிது என்பதை அறியாதே, நீ அவளை அறவே மறந்து, அங்கேயே தங்கி விட்டாய். காதல் நிறைவேறப் பெறாமையால், அவள் கொள்ளும் காதல் நோய், அவளால் தாங்கிக் கொள்ளும் அளவுடையதன்று. அத்தகைய பெருநோயை அவளுக்கு அளித்து விட்டு, நீ மறைந்து வாழ்கிறாய். அதனால் வருந்திய அவள் மேனி நனிமிக மெலிந்து விட்டது. தன் உள்ளம் விரும்பும் இனிய துணைவன் நீ எனக் கருதுகிறாள் அவள். ஆனால் உடனிருந்து துணை புரிய வேண்டிய நீயோ, அவளை விடுத்து அகன்றுவிட்டாய். அதனால் அவள் கொண்ட உள்ளத் துயர் உரைக்கும் திறம் உடையதன்று.

"அன்ப! காதல் நோய் கட்டுக் கடங்காது பெருகிய காலத்தும், உள்ளத்தை ஒருவழிப் படுத்தி அமைதி காணும் ஆற்றல் உன்பால் அமைந்திருக்கக் காண்கிறேன் நான். இவ்வாற்றல் நினக்கு இயல்பாக வாய்ந்தது அன்று; நின் நாட்டு இயற்கைப் பொருள்களிடத்தில் எங்குமிலா அமைதி நிலவுகிறது. அவ்வியற்கை காட்டும் அமைதியைக் காண்பதால், நீயும் அமைதிநிறை உள்ளம் பெற்று விளங்குகிறாய். அன்ப! நின் நாட்டில் ஒளி வீசிய ஞாயிறு மலைவாயில் சென்று மறைந்து விட்டதே என்று, மதி

கலங்குவதில்லை; மாறாகத் தண்ணொளி விசி, உலகிற்கு ஒளியூட்டி மகிழ்கிறது. நின் நாட்டுப் பறவைகள் வயிறு ஆர உணவுண்டு, அவ்வுள்ள நிறைவால் தம் உறையுள் புகுந்து அடங்கி, இனிய உறக்கத்தில் ஆழ்ந்து விடுகின்றன. பறவைகள் ஒலியடங்கக் கண்ட நின் நாட்டுப் பரவையும் பள்ளி புக்கதுபோல் அலை ஓய்ந்து அடங்கி விடுகிறது; இவ்வாறு எங்கும் அமைதியே நிலவும் நாட்டில் பிறந்தமை யால், நின் அகத்திலும் அமைதி இடம் பெற்று விடுகிறது. ஆனால், அன்ப! எங்கள் நாட்டு நிலை அத்தகையதன்று; எங்கள் நாட்டு இயற்கைப் பொருள்களிடத்தில் அமைதி காணல் அரிதினும் அரிதாம். இரவு பகல் எப்பொழுதுமே அது அடங்கியிருப்பதில்லை.

“அன்ப! மனத்துயர் மறக்க மாலையில் கடற் கரைக்குச் செல்வோம். ஆங்கு அமைதி காண வந்த எங்களை, ஓவென ஓயாது ஒலிக்கும் கடல் அலைகள் அலைக்கழித்து விடும். கடற்கரையில் அமைதி காண மாட்டா நாங்கள், ஒளியிழந்து உருவு புலப்படா இருள் செறிந்த இடத்தை அடைந்தாலாவது அமைதி காணலாம் எனும் நினைவால், அவ்விருள் செறிந்த இடம் தேடி ஒளிவோம். ஆனால் நாங்கள் தேடி அலையும் அமைதி ஆங்கும் கிட்டாது. கடல்நீர்ப் பரப்பிலும், கழிநீர் மலரிலும் படிந்து, தண் என்றாகி நறுமணம் பெற்றுவரும் கடற்காற்று ஆங்கு வந்து வீசி எம் அமைதியைக் கலைத்து எம்மைக் கவலைக்குள் ஆழ்த்தி விடும். எல்லாம் உறங்கிய பின்னர், ஊர் அடைந்து உறங்கச் செல்வேம். உறக்கத்திலாவது அமைதி காண மாட்டோமா எனத் துடிக்கும் எம் உள்ளம்! ஆனால் அந்நள்ளிரவிலும், யாம் நினைத்தது வாய்க்காது. பிரிந்து மறந்த தன் துணையை நினைந்து ஓயாது கூவி அழைக்கும் நாரைப் பேட்டின் குரல், எம்மை

உறங்க விடாது, உறுதுயர்க்கு உள்ளாக்கும். இவ்வாறு எங்கள் நாட்டு இயற்கைப் பொருள்களிடத்தில் அமைதி காண மாட்டாமையால், நாங்களும் அமைதி இழந்து, அல்லல் உறுகிறோம். இதை அறிய மாட்டாது, நீ அங்கேயே தங்கி விட்டாய். அதனால் வருந்திய அவள் நிலை எத்துணை மாறுபட்டு விட்டது தெரியுமா?

"அன்ப! கழியில் மலர்ந்து மணக்கும் இக்கருநீல மலர், கழிநீர் எழுப்பும் அலை தெளிக்கும் நீரை ஏற்று நிற்பது போல், அவள் கருவிழிகள் இரண்டும் நிற்க மாட்டாது நிறைந்து வழியும் விழிநீரில் நீந்திக் கிடக்கும். அவள் உடல்தான் எவ்வளவு மெலிந்து விட்டது! பண்டு அவள் முன்கையில் கிடந்து ஒலித்து அழகுதந்த வளைகள், தாமாகவே கழன்று விழத் தொடங்கி விட்டன. மணக்கும் மகரந்தம் சிந்தக் காம்பற்று உதிரும் இக்காந்தள் மலரின் மெல்லிய இதழ்களை நினைப்பூட்டும் அவள் கை வளைகள். உடல் நலக் கேட்டால், அவள் வனப்புத்தான் எவ்வளவு குறைந்து விட்டது! மதிநிகர் முகம் என மாண்புறப் பாராட்டும் அவள் முகம் பாழ்பட்டுப் போனதை என்னென்பேன்! நின்று காயும் இளஞாயிற்றின் கதிர்களின் முன் நிற்க மாட்டாது தன் ஒளி குன்றிக் காட்சி அளிக்கும் அந்நடு வானத்து மதியைப் பார். அதுபோல் மங்கி விட்டதே அவள் முகம்!

"அன்ப! இனியும் அவளை இந்நிலையில் விட்டு வைத்து வருந்த விடுதல் நினக்கு முறையாகாது. காமநோய் தந்து, அவளைக் கண்ணீர் சிந்தப் பண்ணிய நீரே, அக் கண்ணீரைத் துடைத்தல் வேண்டும். அன்ப! இதோ காண். சிறிது நேரத்திற்கு முன் கடல் நீரில் களித்து வாழ்ந்திருந்த இம்மீனைக் கடல் அலை கொண்டு வந்து கரையில் விட்டுச் சென்றது. அதனால் இம்மீன் பட்ட பாட்டினை

நாம் கண்டோம். இன்னமும் சிறிது நேரம் ஈண்டே இருந்திருந்தால் அது இறந்து போயிருக்கும். ஆனால், கரை நோக்கி மீண்டும் பாய்ந்த அக்கடல் அலை, மீன் படும் துயரைப் பார்க்கப் பொறாமையால், கொண்டு வந்து கொடுமை செய்த தானே, அதன் துயரைப் போக்கவும் வேண்டும் என்ற பேருள்ளம் கொண்டு, மீண்டும் கொண்டு சென்று கடல் நீரில் விட்டு விட்டது. கடல் அலைக்கு உள்ள இவ்விரக்க உள்ளம் நினக்கும் உண்டாதல் வேண்டும். தந்தையின் பெருமனையில் வாழ்ந்திருந்த அவளைக் களவின்பம் பெறும் கருத்தால் வெளிப்படுத்தி வருத்திய நீ, அவளை மணந்து கொண்டு, நின் மனைக்குக் கொண்டு சென்று குடியோம்ப வேண்டும். அக் கருத்து நின் உள்ளத்தில் எழ வேண்டு கிறேன். அவ்வெண்ணம் உண்டாயின், அதற்கு ஏற்ற காலம் இதுவே. இனியும் காலம் கடத்தினால், அவள் வாழாள். ஆகவே, வரைவிற்காம் முயற்சிகளை விரைந்து மேற்கொள்ள, இப்போதே தேர் ஏறிப் போவாயாக!" என வேண்டிக் கொண்டாள்.

"ஒண்சுடர் கல்சேர, உலகு ஊரும் தகையது
தெண்கடல் அழுவத்துத் திரைநீக்கா எழுதரூஉம்
தண்கதிர் மதியத்து அணிநிலா நிறைத்தரப்
புள்ளினம் இரைமாந்திப் புகல்சேர, ஒலியான்று
வள்ளிதழ் கூம்பிய மணிமருள் இருங்கழி
பள்ளிபுக்கது போலும் பரப்புநீர்த் தண் சேர்ப்ப!

தாங்கரும் காமத்தைத், தணந்து நீ புறம்மாறத்
தூங்குநீர் இமிழ்திரை துணையாகி ஒலிக்குமே;
உறையோடு வைகிய போதுபோல் ஒய்யென
நிறை ஆனாது இழிதரூஉம் நீர்நீந்து கண்ணாட்கு.

வாராய்நீ புறம்மாற, வருந்திய மேனியாட்கு
ஆர்இருள் துணையாகி அசைவளி அலைக்குமே;
கமழ் தண்தாது உதிர்ந்து உக ஊழ்உற்ற கோடல்வீ
இதழ்கோரும் குலைபோல இறைநீவு வளையாட்கு

இன்துணை நீ நீப்ப இரவினுள் துணையாகித்
தன்துணைப் பிரிந்து அயாஅம் தனிக்குருகு உசாவுமே;
ஒண்சுடர் ஞாயிற்று விளக்கத்தால் ஒளி சாம்பும்
நண்பகல் மதியம்போல் நலம் சாந்த அணியாட்கு.

எனவாங்கு
எறிதிரை தந்திட இழிந்தமீன் இன்துறை
மறிதிரை வருந்தாமல் கொண்டாங்கு, நெறிதாழ்ந்து
சாயினள் வருந்தியாள் இடும்பை
பாய்பரிக் கடுந்திண்தேர் களையினோ இடனே.”

*தலைவன் ஒருவழி தணந்தவிடத்துத், தோழி தலைவி ஆற்றாமை கூறி வரைவு கடாயது.*

1. சுடர் — ஞாயிறு; கல் — மலை. ஊரும் — பரவும். 2. அழுவம் — பரப்பு. 4. புகல் — இருப்பிடம்; ஆன்று — அடங்கி. 7. தணந்து — ஒருமுறைபிரிந்து; புறமாற — கைவிட; 8. தூங்குநீர் — அலைவீசும் கடல்; இமிழ்திரை — ஒலிக்கும் அலை. 9. உறை — நீர்த்துளி; போது — மலர். 10. நிறை ஆனாது — நிறுத்த மாட்டாது; 12. அசைவளி — வீசும்காற்று. 13. ஊர்உற்ற — வரிசையாக அமைந்த (இதழ்கள்); கோடல் — காந்தள். வீ — மலர். 14. இறை — முன்கையினின்றும். நீவு — கழலுகின்ற; 16. அயாஅம் — வருந்தும்; குருகு — நாரைப்பேடு; உசாவும் — உற்றது வினாவும். 17. சாம்பும் — கெடும். 18. சாய்ந்த — கெட்ட. 20. எறிதிரை — கரைநோக்கி எழும் அலை; மறிதிரை — கடல் நோக்கி இழியும் அலை. நெறிதாழ்ந்து — நீ முறைகெட்டமையால். 22. சாயினள், தளர்ந்து, களையின் இது இடன் எனக் கொண்டு வந்து முடிக்க.

5

## வாழ்தல் நகை உடைத்தே

உலகெலாம் போற்றும் உயர் பேரழகுடையாள் ஒரு பெண்; கருநீல மலர் நிகர்க்கும் அவள் கண்ணழகொன்றே, அவளைக் காணும் ஆடவர் உள்ளத்தை அவளுக்கு அடிமையாக்கி விடும்; அன்பும் ஆர்வமும் காட்டி அன்னை வளர்க்க, ஒத்த வயது ஊர்ப் பெண்கள் ஒன்று கூடி வந்து உடன் விளையாட, மகிழ்ந்து வாழ்ந்திருப் பாளை ஓர் இளைஞன் கண்டான்; அவள் அழகைக்கண்டு அவன் அறிவு மயங்கிற்று. அவள்பால் காதல் கொண்டான். அவ்வாறே அப் பெண்ணும் அவன் உருவு நலம் கண்டு உணர்விழந்து போனாள்; அவன்பால் அவளுக்கும் காதலுண்டாயிற்று. இருவர் உள்ளமும் ஒன்றுபட்டு விட்டன. அக்காதல் இன்ப வாழ்வில் சிலநாள் கழிந்தன. ஒருமுறை அவளைப் பிரிந்து ஊர்க்குச் சென்ற இளைஞன், மீண்டும் வந்திலன். அதனால் அவள் நனிமிக வருந்தினாள். உள்ளக் கவலையால் உடல் நலனும் கெடத் தொடங்கிற்று. கண் ஒளி குன்றிற்று. மகளின்

புறநலக் கேட்டினைத் தாய் உணர்ந்தாள். ஊர்ப் பெண்டிர் கண்களுக்கும் அது புலனாயிற்று. அவர்கள் அவள் ஒழுக்கத்திற்கு இழுக்கம் கற்பிக்கத் தொடங்கினர். காதல் இன்பம் கைகூடப் பெறாத் துயரோடு, தாயின் கடுத்த நோக்காலும், ஊர்ப் பெண்டிர் உரைக்கும் அலராலும் உண்டாம் துயரும் கலந்து கொள்ளவே, அப்பெண்ணின் கண்கள் உறக்கத்தை மறந்தன. இரவெல்லாம் கண் விழித் திருந்து கவலை கொள்ளத் தொடங்கினாள்.

அவளோடு ஆடி மகிழும் ஊர்ப் பெண்கள் பலராயினும், அவருள் அவளுக்கு உயிரொத்த நட்புடைய தோழி ஒருத்தி இருந்தாள். ஊர்ப் பெண்டிர் அலர் கூறி அவளைப் பழிக்குங்கால், அத்தோழி மட்டும். அப் பெண்ணின் நல்வாழ்வே நினைவாய் இருந்தாள். அதனால் இளைஞனின் ஊர் அறிந்து சென்று, அவனைக் கண்டு, அப்பெண்ணின் நிலையை எடுத்துக் கூறி, அவனை அழைத்து வரத் துணிந்தாள். அவ்வாறே அவன் ஊர்க்குச் சென்று அவன் குறித்து உசாவினாள். ஆங்கு அவள் கேட்டதும் கண்டதும் அவளுக்குக் கவலையளித்தன. இளைஞன் மணமாகாதவன் அல்லன். இதற்கு முன்னரே மணங் கொண்டவன். அவனுக்கு மனைவியாராம் தகுதி பெற்ற மகளிர் பலராவர். அவன் மனைவியர் அப் பெண்ணினும் பேரழகுடையர். அம்மகளிர் எழில் அவர் போலும் மகளிராலும் பாராட்டத் தக்க மாண்புடையது. இருளோ என எண்ணி வியக்குமாறு கறுத்து நீண்ட அவர் கூந்தல் அழகு ஒன்றே போதும், இளைஞர் உள்ளத்தை இறுகப் பிணிக்க. அவ்வியற்கை எழிலோடு, அவர் அணிந்துள்ள அணிகள் அளிக்கும் அழகும் ஒன்று கூடின், இளைஞர் உள்ளத்தை அடிமை கொண்டு விடும். அவர்

அன்னார் ஆதலின், இளைஞன் அவர்பால் பணிந்த் அன்புடையனாய் வாழ்கின்றான் என்ற செய்திகளை அறிந்தாள்.

அவள் உள்ளத்தில் இளைஞன்பால் கொண்டிருந்த மதிப்பு மறைந்தது. "எழில் மிக்க மங்கையர் பலரை மணந்து மனையறு வாழ்வு மேற்கொண்ட இவன், மற்றுமோர் மங்கையின் அன்பைக் கொள்ளை கொள்வது அறமாமோ? அத்தகையான் அறவொழுக்கம் வாய்ந்தவன் ஆவனோ?" என்றெல்லாம் எண்ணி வருந்திற்று அவள் உள்ளம். தன்னூர்க்குத் திரும்பினாள். ஆங்கு அப்பெண் அவனையே நினைந்து வருந்தி வாடியிருப்பதைக் கண்டாள். அவளுக்குச் சினம் உண்டாயிற்று. "இவள், அவனை நினைந்து, இரவின் நடுயாமத்திலும் உறக்கம் அற்றுக் கிடந்து இங்கே வருந்துகிறாள். ஆனால், இவள் உள்ளத்தில் காதல் உணர்வை ஊட்டி விட்ட அவனோ, ஆங்குத் தான் மணங்கொண்ட மங்கை நல்லாரோடு மனம் மகிழ்ந்து வாழ்கிறான். மணந்து மனையறம் மேற்கொண்ட பின்னரும், மற்றுமோர் இளம் பெண்ணின் காதலைக் கொள்ளை கொள்வது கயவர் செயலாம் எனக் கருதாது, களவாடி விட்ட கொடியோன் என எண்ணிக் கைவிடாது, அவனையே நினைந்து வருந்தும் இவள் அறியாமையை என்னென்பது!" என எண்ணி வருந்தினாள். அவ் வருத்தத்தின் விளைவால் அவள்பால் ஆறாச் சினம் எழவே, "பேதைப் பெண்ணே! களவில் வளரும் உன் காதல் ஒழுக்கத்தை அன்னையும், ஆடல் தோழியரும் அறிந்து அலர் கூறிப் பழித்தற்கு வாய்ப்பளிக்கும் வண்ணம் உன் வனப்பினை அழித்து விட்டான் அவ்விளைஞன். உலகோர் பாராட்டும் உன் பேரழகு பாழாகிவிட்டது. கருநீல மலரை வென்ற உன்

கண்ணழகு எங்கோ சென்று மறைந்துவிட்டது. இவ்வாறு, உன் உள்ளத்தில் காதல் நோயை வளரவிட்டு ஊருக்குச் சென்றவன், நாட்கள் பல ஆகியும் மீண்டிலன்; உன் நினைவற்று அங்கேயே நின்று விட்டான். உன் காதலை மறந்து, உன்னைக் கைவிட்டு விட்டான். அவன் அத்தகையன் ஆதலைக் கண்டும், அவனை அயலான் எனக் கொண்டு மறந்து போவதை விடுத்து, அவனையே நினைந்து வருந்துகின்றனை. அவனை உரிமையுடையான் எனக் கொண்டு, அவன் வாராமை கண்டு, அவனோடு சிறிதே புலக்கவும் செய்கிறது உன் சிந்தை. இது உனக்குப் பொருந்தாது. ஆனால் பொருந்தா இவ்வொழுக்கத்தி லேயே ஆழ்ந்து விட்டாய் நீ. அவன் புகழைப் பல நூறு படியாகப் பாராட்டுகின்றாய். அவன் அன்பிற்கு ஏங்கி அழுகின்றன உன் கண்கள். இவ்வாறு அலமருகிறது உன் ஏழை நெஞ்சம். ஆனால் உன் காதலைக் கொள்ளை கொண்ட அவன், இவற்றை யெல்லாம் கருதுகின்றா னல்லன். அவன் உன் காதலையே மறந்து திரிகிறான். அது மட்டுமன்று, பெண்ணே! அவன் உன்னைக் காதலிக்கும் தகுதியுடையவனும் அல்லன். கன்னி மகளிரைக் காதலிக்கும் கட்டிளமை அவனை விட்டு மறைந்து ஆண்டுகள் பல ஆகிவிட்டன. அவன் உன்னைக் காதலிக்கும் முன்னரே, மணம் ஆகி மனையறம் மேற்கொண்டு விட்டான். ஒருவன் ஒருத்தியோடே வாழ வேண்டும் என்ற ஒழுக்க நெறி கல்லாக் கயவன் அவன்– அவனை மணந்து வாழும் மங்கையர் பலராவர். அவர்பால் அவன் பேரன்பு காட்டுகிறான். அத்தகை யானே உன் காதலன்! அறக் கொடியோன். கண்ணால் காணவும் தகுதி யில்லாக் கசடன். நல்லோன் எனத் தேர்ந்து தெளிதற்கு இல்லா நயமிலி. உள்ளத்தால் ஒரு முறை நினைந்து பார்க்கவும் கூடா உதவாக்கரை. அவன்

அன்னன் என்பதை அறிந்து கொண்டேன். ஆகவே, பெண்ணே! அவன்பால் கொண்ட காதலை இப் பொழுதே மறந்துவிடு!” எனக் கூறினாள்.

காதலன் ஒழுக்கக் கேடு குறித்துத் தோழி கூறிய அனைத்தையும் அப்பெண் கேட்டாள்; கேட்டும் அவள் நிலையில் சிறு மாற்றமும் இடம் பெறவில்லை. அவள் சிந்தையில் சிறிதும் சினம் பிறக்கவில்லை. மாறாகச் சிறிது நகைத்தவாறே. “தோழி! காதலன் இயல்பு குறித்து நீ கூறிய அனைத்தும், நீ கூறாமுன்பே நான் அறிவேன். காதலன் கன்னி நிலை கடந்தவன். மனைவியர் பலரைப் பெற்று மகிழ்பவன். அம்மனைவியர்பால் பேரன்பு காட்டுபவன் என்பதை யெல்லாம் நானும் அறிவேன். அறிந்தே அவன்பால் காதல் கொன்டேன். ஒருத்தியோடு வாழும் உயர்ந்த ஒழுக்கத்தை மறந்து விட்டமையால் வழுக்கி வீழ்ந்த அவன் வாழ்க்கைக் கேடு ஒருபால் வந்து வருத்து மாயினும், அவன் அம்மகளிர்பால் காட்டும் ஒத்த அன்பு நிலை, என்னை அவன்பால் ஈர்க்கும். அவன் அன்பு தூய்மையானது. மகளிர் பலரை மணந்தது அவன் தவறன்று; அது அம் மகளிரின் அழகு செய்த தவறு; அன்னார் அணியும் அழகும் அவனை அடிமை கொள்ளும் ஆற்றல் வாய்ந்து விட்டன. அதனால் அவன் அத்துணை பேரையும் மணக்கத் துணிந்து விட்டான். துணிந்து மணங் கொண்டவன் மணந்த பின்னர் அவர்பால் பண்டு காட்டிய அன்பில் சிறிதும் குறை காட்டினானல்லன். ஒருத்திபால் பேரன்பு காட்டி, ஒருத்திபால் அவ்வன்பில் குறை கண்டானல்லன்; மணங் கொண்ட மனைவியர் அனைவர்பாலும் ஒத்த அன்பே காட்டுகிறான். அவர் அன்புத் தளையால் கட்டுண்டு

அடங்கிக் கிடக்கிறான்; அவன் அன்பு அத்தகையது என்பதை அறிந்தது என் நெஞ்சம்; அவ்வன்பின் அளவும் ஆற்றலும், அவன்பால் காணலாம் ஒழுக்கக் கேட்டினும் உயர்ந்து விளங்கக் கண்டது; அதனாலேயே அது அவனையே நினைந்து வருந்துகிறது. நம்போலும் நங்கையர் பின் திரிவாரானை நாமும் நயப்பது நாண் உடையார்க்கு நயம் பயப்பது ஆகாதே என எண்ண மறுக்கிறது; அது, அறிவுடையார்க்கு அழகாகாதே என்பதை உணரும் உணர்விழந்து கிடக்கின்றது; அதனால் எப்பொழுதும் அவன் நினைவாய்க் கிடந்து, கெட்டு அலைகிறது; அவன் வந்து, சிறிது பொழுது தங்கிச் சிறிதே அன்பு காட்டினும், அந்நினைவால் உள்ளம் துள்ள உணர்விழந்து மகிழ்கிறது.

"தோழி! மகளிர் அழகில் மயங்கி உணர்விழப்பவன் அவன் என அறிந்தமையால், அதற்கு ஒரு நம்பிக்கை; நாமும் அவனை அடிமை கொண்டு விடலாம் என்ற துணிவு எனக்கும் உண்டு; அவன் மனைவியரை நோக்க நாம் அழகில் குறைபாடுடையரல்லேம். நம் அழகு ஊரார் அனைவரும் ஒருங்கே பாராட்டும் உயர்வுடையது. அவனை அடிமை கொள்ளும் ஆற்றல் நம் அழகிற்கு உண்டு. ஆனால், அவ்வழகு அவனை அடிமை கொள்ள அதற்கு ஒன்று உதவ வேண்டும். அவன் அண்மையிலேயே வாழும் வாய்ப்பு அதற்கு வாய்க்க வேண்டும்; அந்நிலை மட்டும் வாய்த்து விடுமாயின், அவனை அடிமை கொண்டு விடுவேன்; பிரிந்து மறந்து வாழும் அவனை என்னோடு இறுகப் பிணித்துக் கொள்வேன்!' என்றெல்லாம் கூறித் திரிந்தது. அந்நினைவால் இரவின் நடுயாமத்திலும் நம்மை உறங்க விடாது, உறக்கத்தை

*நம்மினின்றும் பிரித்துக் கொண்டு சென்று ஒளித்துவைத்து விட்டு, நம்மோடு காதல் நோயில் கிடந்து வருந்திய அந்நெஞ்சம், இப்போது நம்மை மறந்து அவன்பால் சென்று விட்டது. நடுயாமத்திலும் நம்மை விட்டுப் பிரியா உற்ற துணையாய் இருந்த நம் நெஞ்சும் நம்மை விட்டுப் போன பின்னரும் நாம் உயிர் கொண்டு வாழ்தல், அது சென்ற இடத்திற்கே நாமும் செல்லக் கருதாது ஈண்டே கிடந்து கலங்கி உயிர் வாழ்தல் இனி இயலாது. மனைவியர் பலரை மணந்து வாழ்பவனைக் காதலிப்பதினும், காதலன் வாழும் இடம் சென்று அவனைத் தன் காதலால் அணைத்து வாழாது தனித்துக் கிடப்பது நகைப்பிற் கிடமாம்!" எனக் கூறுமுகத்தான், "தோழி! முன்னே சென்று என் வரைவிற்கு வழி காணுவாயாக!" எனக் கூறாமல் கூறினாள்.*

"கோதை ஆயமும் அன்னையும் அறிவுறப்
போதெழில் உண்கண் புகழ்நலன் இழப்பக்
காதல் செய்தருளாது துறந்தார் மாட்டு ஏதின்றிச்
சிறிய துனித்தனை; துன்னாசெய்து அமர்ந்தனை;
பலவுநூறு அடுக்கினை, இனைபு ஏங்கி அழுதனை,
அலவலை உடையை என்றி தோழி!
கேளினி,

மாண்எழில் மாதர் மகளிரோடு அமைந்தவன்
காணும் பண்பிலன் ஆதல் அறிவேன்மன், அறியினும்
பேணி அவன் சிறிது அளித்தக்கால் என்
நாண் இல் நெஞ்சம் நெகிழ்தலும் காண்பல்;

இருள்உறழ் இருங்கூந்தல் மகளிரோடு அமைந்தவன்
தெருளும் பிண்பிலனாதல் அறிவேன்மன், அறியினும்

அருளி அவன் சிறிது அளித்தக்கால் என்
மகுளி நெஞ்சம் மகிழ்தலும் காண்பல்;

ஒள் இழை மாதர் மகளிரோடு அமைந்தவன்
உள்ளும் பண்பிலனாதல் அறிவேன்மன், அறியினும்
புல்லி அவன் சிறிது அளித்தக்கால் என்
அல்லல் நெஞ்சம் அடங்கலும் காண்பல்;

அதனால்,
யாம நடுநாள் துயில்கொண்டு ஒளித்த
காம நோயிற் கழீஇய நெஞ்சந்
தான்அவர் பாற் பட்டதாயின்
நாம்உயிர் வாழ்தலோ நகை நனி உடைத்தே."

*களவொழுக்கம் ஒழுகிய தலைவன் இடையிட்டுப் பிரிந்து தொன்முறை மனைவியரொடு புணர்ச்சி எய்தி இருந்தானாக, அதனை அறிந்து ஆற்றாத தலைவியைத் தோழி வன்சொல் வழங்கினாளாக, அத்தலைவி, தன் நெஞ்சு இவன் வயத்ததாயது கூறியது.*

1. கோதைஆயம் — மாலை போல் வரிசையாக வந்து ஆடும் தோழியர்; 2. போதெழில் — மலர் போலும் அழகு; 3. ஏதின்றி — அயன்மை கொள்ளாது. 4. துனித்தனை — வெறுத்தனை; துன்னா — பொருந்தாதன. அமர்ந்தனை — அதிலேயே ஆழ்ந்து விட்டாய். 5. இனைபு — வருந்தி. 6. அலவலை — அலமருதலை; என்றி — என்று கூறுகிறாய். 12. உறழ் — ஒத்த; இரும் — கரிய. 13. தெருளும் — நல்லோன் எனத் தெளியும். 15. மருளி — மருட்சி மிக்க 16. இழை — அணிகள். 17. உள்ளும் — மனத்தால் நினைந்து பார்க்கத்தக்க. 18. புல்லி — புணர்ந்து. 19. அல்லல் — வருத்தம். 22. கழீஇய — மிக்க.

# 6

# நெஞ்சே, நீ வருந்தினை!

கடலை யடுத்திருந்த கவின்மிக்க சிற்றூர் ஒன்றில் வாழ்ந்திருந்தாள் ஒரு கட்டழகி. கன்னிப் பருவத்தின் கடைவாயிலைக் கடக்கும் நிலையினளாய அவள், ஒரு நாள் தோழியரோடும் சென்று கடற்கரை மணலில் விளையாடி மகிழ்ந்திருந்தாள். அப்போது இளைஞன் ஒருவன் ஆங்கு வந்து அவள் ஆடல் அழகைக் கண்டு கருத்திழந்தான். அவன் இளமை யழகிற்கு அடிமைப் பட்டு விட்ட அவள் மனம் அவன்பால் சென்றது. அவன் நிலையும் அன்னதே ஆயிற்று. அன்று தொடங்கிய அவர் காதல் வாழ்வு நாள்தோறும் நிறைமதியென வளர்ந்தது. உற்றாரும் ஊராரும் காணாவாறு தம் காதலை வளர்த்தனர்; ஒவ்வொரு நாளும் வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் ஒருவரை யொருவர் கண்டு களிக்கத் தலைப்பட்டனர். அவர்கள், தம் காதலை ஊரார் அறியாவாறு வளர்க்கக் கருதினராயினும், அவ்வூர்ப் பெண்டிர் சிலர் அவர்கள் களவொழுக்கத்தினைக் கண்டு கொண்டனர். கண்ட

தோடு அமைந்து விடாது, தாம் கண்டதைக் கூட்டியும் குறைத்தும் தமக்கு வேண்டியவரிடத்திலெல்லாம் கூறி வைத்தனர். இவ்வாறு, அச்செய்தி ஊர் முழுதும் பரவிற்று. அப்பெண்ணின் தாயின் காதிலும் அது சென்று எட்டிற்று. சின்னாட்களாக மகள் இயல்பில் நிகழும் மாற்றங்களை உணர்ந்து மகள் ஒழுகலாற்றில் தான் கொண்ட ஐயம் அச் செய்தியால் உறுதியானதைத் தாய் உணர்ந்தாள். அதனால் அன்று முதல், மகள் வீட்டை விட்டு வெளிச் செல்லாவாறு விழிப்பாய் இருந்து காக்கத் தொடங்கினாள்.

தாயின் காவல் மிகுதியால், முன்போல் தான் விரும்பிய போதெல்லாம் விளையாட்டை முன்னிட்டு வெளிப்போவாள் போல் சென்று, காதலனைக் கண்டு களிக்க முடியாமல், அப் பெண் கலங்கினாள். ஆனால் அவள் கொண்ட காதலோ, அவளை அடங்கியிருக்க விட்டிலது. அதனால் இரவில் எல்லோரும் உறங்கும் நடுயாமத்தில் ஒருவரும் அறியாவாறு வீட்டின் புறம் போய்த் தன்னைப் போலவே தன் வருகைக்காக வந்து ஆங்குக் காத்துக் கிடக்கும் காதலனைக் கண்டு களிக்கத் தொடங்கினாள். ஆனால் அவ்வழி எண்ணிலா இடையூறுகளுக்கு இடனாவது அறிந்து கலங்கிக் கண்ணீர் சொரிந்தாள். அதனால், மணந்து கொண்டு மனையற வாழ்வு மேற்கொள்ளப் பெரிதும் விரும்பினாள். ஒருநாள், தன் உள்ளத்தின் விருப்பத்தை இளைஞனுக்கும் மெல்லப் புலப்படுத்தினாள். களவின்ப வாழ்வில் களிப்பு மிகுதி யிருப்பதை உணர்ந்த அவன், அந்நிலையை அப்போதே பெற்றுவிட விரும்பிலனாயினும், இடையூறு அற்ற இன்ப வாழ்விற்கு அதுவே வழியாம் என உணர்ந்தான். அதனால்

மண முயற்சி மேற்கொள்ளத் துணிந்தான். வரைவிற்காம் முயற்சிகளோடு விரைவில் வருவேன் என வாக்களித்துச் சென்றான்.

வரைவு முயற்சி மேற்கொண்டு சென்றவன், நாட்கள் பல கழியவும் வந்திலன்; அவன் வருகையை ஒவ்வொரு நாளிலும் எதிர்நோக்கி எதிர்நோக்கி ஏமாந்தாள் அவள். அக் கவலை அவளை அல்லும் பகலும் அலைக் கழித்தது. துயில் மறந்து துயர் உற்றாள். அம் மனநோய் அவள் மேனி நலத்தை அழித்தது. அவள் பொன்னிற மேனி பொலிவு குன்றிற்று. அவள் உடல் மெலிந்தது. கைவளைகள் தாமே கழன்றோடுமளவு தோள்கள் தளர்ந்தன. அவள் அழகழிவும், தோளழிவும் கண்ட ஊரார் அவள் களவொழுக்கத்தை அம்பலப்படுத்தி அலர்கூறிப் பழிக்கத் தலைப்பட்டனர். காதலன் அன்பைப் பெற மாட்டாமை யால் இயல்பாகவே கலங்கியிருந்த அவள் உள்ளம் ஊரார் உரைக்கும் அலர் கேட்டு நனிமிகக் கலங்கிற்று. அதனால் தன்னை அவ்வாறு வருந்த விடுத்து வராதிருக்கும் காதலன்பால் கடுஞ்சினம் கொண்டாள். ஆனால் அந்நிலையிலும் அவன்மீது வெறுப்புக் கொண்டிலள்; அதற்கு மாறாகக் காதலனைக் காணத் துடித்தன அவள் கண்கள். அவள் நெஞ்சு இரவு பகல் எப்பொழுதும் அவனையே நினைந்து நினைந்து நைந்து உருகிற்று.

ஒரு நாள் மாலை மனையின் முன்புறத்தே வந்து நின்றாள்; எதிரே கருங்கடல் அலை ஓய்ந்து அடங்கிக் காட்சி அளித்தது. கரையைச் சார்ந்திருந்த கானலின்கண் புன்னை மரங்கள் புத்தம் புதிய பூக்களை ஈன்று பொலிவுற்றுத் தோன்றின. கரிய பெரிய கொம்பு களுக்கிடையே பொன்னிறப் பூக்கள் மலர்ந்து மணம் வீசும்

மாண்புமிகு காட்சியைக் கண்டு களித்தது அவள் உள்ளம். மலர் வீசும் மணத்தால் அம்மலர்களை அறிந்து அடைந்த தேன் வண்டுகளும் தும்பிகளும் அவற்றில் பொதிந்து கிடக்கும் புதுத் தேனை உண்ண, அம்மலர்களைச் சுற்றி வட்டமிட்டுப் பறந்தன. தேன் வண்டு திரிவதால் தோன்றும் ஒலி ஒருபால் ஒலிக்க, அவ்வொலிக்கு ஏற்பத் தும்பிகளின் ஊதல் ஒலி மற்றொருபால் எழ, இம் எனும் இனிய ஓசை அக்கடற் பரப்பெங்கும் சென்று ஒலித்தது. தன் அருளையும் ஆற்றலையும் உணர்த்தும் அழகிய பாக்களை அன்பர் பல்லாயிரவர் ஒருபால் நின்று பாட, அவர் பாடலுக்கேற்ற இனிய யாழ் ஒலியைச் சிலர் அவர் அருகிருந்து எழுப்ப, பாக்களின் பொருட் சிறப்பையும், யாழின் ஓசை இன்பத்தையும் கேட்டவாறே நீலநிற நெடுமால் துயில் கொள்ளும் காட்சியை நினைவூட்டும் அக் கடற்கரைக் காட்சியைக் கண்டு மகிழ்தற்கு மாறாகக் கண்ணீர் விட்டுக் கலங்கி நின்றாள்.

மலர்கள் வாய் திறந்து மணம் வீசும் பருவம் அறிந்து வந்து அம் மலர்களில் பொதிந்து கிடக்கும் தேன் வீண் போகாவாறு விரும்பி உண்ணும் இவ்வண்டு தும்பிகளுக்கு இருக்கும் உணர்வு என் காதலர்க்கு உண்டாகவில்லையே! கன்னிப் பருவம் கழிந்து காதற் பருவத்தில் காலடி எடுத்து வைத்து இன்பக் களஞ்சியமாய் நிற்கும் என்னை அடைந்து என்பால் இன்பம் துய்த்து என்னை மாண்புடைய வளாக்கும் மனம் அவர்க்கு இன்னமும் வாய்க்க வில்லையே! பாட்டும் இசையும் கேட்டு உறங்கும் பரந்தாமன் போலவும், வண்டும் தும்பியும் பாட, ஒலி அவிந்து உறங்கும் இக் கடற் கானல் போலவும், நான் என் காதலரோடு கூடி ஆற்றும் இல்லறச் சிறப்பறிந்து ஊரும்

நாடும் ஒருங்கே புகழ, அக்கணவரோடு கிடந்து உறங்கும் அமைதி நிலவும் அவ்வுயர் இன்ப வாழ்வை நான் என்று பெறுவனோ என எண்ணி ஏங்கிற்று அவள் உள்ளம்.

இவ்வாறு தன் உள்ளம் இரவும் பகலும் அவன் நினைவேயாய்க் கிடந்து வருந்தவும், அதனை எண்ணிப் பாராத அவன்பால் சிறிதே வெறுப்புங் கொண்டாள். ஆனால், காதலன்பால் வெறுப்புக் கொள்ளினும், அதைக் காட்டிக் கொள்ளுதல் கூடாது என்றது அவள் உள்ளுணர்வு. அதனால் அவள் வெறுப்பு, தன்னை நினையாதவனையே நினைந்து நினைந்து வருந்தும் நெஞ்சின் மேல் சென்றது. அதனால், "நெஞ்சே! நீ நினைந்துருகும் நம் காதலர், நமக்கு ஊரார் பழிக்கும் உறுநோய் அளித்தவராவர்; இவ்வாறு இரவும் பகலும் அழுது அழுது அழியும் அல்லலை நமக்கு அளித்த அறக்கொடியோருமாவர்; நம் கைவளைகள் கழன்றோடும் வண்ணம் நம் நலனைக் கெடுத்த நாணிலியுமாவர்; அவர் அத்தகையர் என்பதை அறிந்தும் அவரைக் காண அலைகின்றாய் நீ; அவரைக் காண, அவர் ஊர்க்கு ஓடினாய். ஆனால், நீ ஆங்குச் சென்ற மாலைக் காலம், கண்முன் நிற்கும் பொருளையும் காண மாட்டாமைக்கும் ஏதுவாய காரிருள் பரந்த மாலைக் காலமாம்; மாலையின் இவ்வியல்பறிந்தும் நீ சென்றாய்; சென்ற நீ, அவரைக் கண்டாயோ? அல்லது காணாது வறிதேதான் வந்து சேர்ந்தாயோ? நெஞ்சே! காதலர் ஊர் கழிகளுக்கு அப்பாற்பட்டது; அக்கழிகளோ கொடிய சுறா மீன்களின் வாழிடம்; அவற்றைப் பகற் காலத்தில் கடக்கவும் மக்கள் அஞ்சுவர்; காதலரைக் கண்டு அவர் ஆகத்தை ஆரத் தழுவிக் கொள்ளும் ஆர்வமிகுதியால், கழிகளின் அக்

கொடுமைகளைக் கருத்தில் கொள்ளாதே. சுறாமீன்கள் செருக்கு மிக்குத் திரியும் மாலைக் காலத்தில் கடந்து சென்றாய். சென்ற நீ, ஆங்கு அவர் ஆகத்தை அணைந்து இன்பம் அடைந்தாயோ? அல்லது அதற்கு வாய்ப்புப் பெறாது வறிதே வந்து சேர்ந்தாயோ? நெஞ்சே! அலைந்து இரை தேடும் பறவைகளும் கூட்டுள் அடைந்து அடங்கும் இம்மாலைக்காலத்தில் நீ என் அகத்தின் உள்ளே அடங்கிக் கிடப்பதை விடுத்து அவர்பால் சென்றாய்; சென்ற நீ அவர் மனக் கருத்தறிந்து மகிழ்ந்து மீண்டாயோ? அல்லது அவர் இத்தகையர் என்பதை அறிந்து கொள்வதற்கும் வாய்ப்பின்றி வீணே வந்து சேர்ந்தாயோ? நெஞ்சே! நம்முன் காட்சி அளிக்கும் கழிகளில் ஓதநீர், ஒருகால் புகுவதும், ஒருகால் போவதுமாய் மாறி மாறி இயங்கல் போல், நீ இரவு பகல் ஓயாமல் காதலர்பால் செல்வதும், மீண்டு என்னை வந்து அடைவதுமாய் மாறி மாறி நடந்து நெடிது வருந்தியதல்லது நீ பெற்ற பயன்தான் யாதோ? நெஞ்சே! நின் முயற்சி பயனற்றுப் பாழாதல் கண்டு நின்பால் நெடிதிரக்கம் கொள்கிறது என் ஏழை உள்ளம். நின்செயல் இரங்கற்குரித்து என்றாலும், காதலர் கொடுமையறிந்து அதற்கேற்ப நாமும் அவரை மறந்துவாழ வேண்டும் என்பதை உளங்கொள்ள மாட்டா உன் அறியாமை எள்ளி நகையாடற்குரித்து!" என ஏதேதோ கூறி வாய்விட்டுப் புலம்பினாள்.

"கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசைதொறும்
சுரும்பு ஆர்க்கும் குரலினோடு இருந்தும்பி இயைபு ஊத
ஒருங்குடன் இம்என இமிர்தலின் பாடலோடு
அரும்பொருள் மரபின்மால் யாழ்கேளாக் கிடந்தான்போல்
பெருங்கடல் துயில்கொள்ளும் வண்டுஇமிர் நறுங்கானல்;

காணாமை இருள் பரப்பிக் கையற்ற கங்குலான்
மாணா நோய் செய்தான்கண் சென்றாய்; மற்று அவனைநீ
காணவும் பெற்றாயோ? காணாயோ? மடநெஞ்சே!
கொல் ஏற்றுச் சுறவினம் கடிகொண்ட மருள்மாலை
அல்லல் நோய் செய்தான்கண் சென்றாய்; மற்று அவனைநீ
புல்லவும் பெற்றாயோ? புல்லாயோ? மடநெஞ்சே!

வெறிகொண்ட புள்ளினம் வதிசேரும் பொழுதினால்
செறிவளை நெகிழ்த்தான்கண் சென்றாய்; மற்று அவனைநீ
அறியவும் பெற்றாயோ? அறியாயோ? மடநெஞ்சே!

எனவாங்கு
எல்லையும் இரவும் துயில்துறந்து பல்லூழ்
அரும்படர் அவலநோய் செய்தான்கண் பெறல் நசைஇ
இருங்கழி ஓதம்போல் தடுமாறி
வருந்தினை; அளிய; என் மடங்கெழு நெஞ்சே!"

*காப்பு மிகுதிக்கண் ஆற்றாத தலைவி, தலைவன்பால் சென்ற நெஞ்சினை நோக்கி வருந்திக் கூறியது.*

2. சுரும்பு – தேன்வண்டு; இரும்தும்பி – கரியதும்பி. 3. இமிழ்தலின் – ஒலித்தலின்; 9. ஏறு – ஆண்; கடிகொண்டு – போகாவண்ணம் தடைசெய்த; 12. வெறிகொண்ட – வரிசை வரிசையாக வரும்; வதி – வாழிடம்; 16. பல்லூழ் – பலமுறை; 17. படர் – வருத்தம்.

# 7

## விரைக நின் செலவே!

கடற்றுறை நகர் ஒன்றில் வாழ்ந்திருந்தாளொருத்தி, பெண்டிரும் ஆண்மை விரும்பும் பேரழகுடையளாய் விளங்கினாள். பிறைத் திங்கள் போலும் பெருவனப்புடையது அவள் நெற்றி; அணைபோலும் மென்மையுடைய பருத்த அவள் தோள்கள்; வெற்றிப் புகழ் விளங்கும் வேலின் முனையை வென்றன காதளவோடிய அவள் கருவிழிகள்; இத்தகு உறுப்பு நலங்கள் அளிக்கும் அளவிலா அழகுடைய அவள், அவளோடு ஆடி மகிழும் அவ்வூர்ப் பெண்கள் அனைவரினும் அழகுடையளாவள். அதனால், பிற மகளிர் அழகைப் பார்க்கும் அவ்வூர் மக்கள் அவள் அழகையே அளவுகோலாகக் கொண்டு, 'அவள் அழகில் காற்கூறு உடையாள் இக் காரிகை, அவளிற் பாதி இப்பேதை!' என மதிக்கத் தலைப்பட்டனர்.

இத்தகைய பேரழகுடையாளைப் பார்த்துவிட்டான் ஓர் இளைஞன். அவளைப் போலவே பிறிதொரு கடற்றுறை நகரைச் சேர்ந்த அவ்விளைஞன், அவளைக்

*கண்ட அந்நிலையே, அவன் நெஞ்சு அவனைக் கைவிட்டு அவள்பால் அடைக்கலம் புகுந்து விட்டது. அவனைக் கண்ணுற்ற அவள் நிலையும் அன்னதே ஆயிற்று. இருவர் உள்ளங்களும் ஒன்று பட்டன; அன்று முதலாகப் பிறர் அறியாவாறு கலந்து மகிழத் தொடங்கினர். அவ்வின்ப உணர்வால் இருவரும் தம்மை மறந்தனர். அந்நிலையில் நாள் சில சென்றன. பொருளீட்டி வரப்போக வேண்டிய இன்றியமையாமை இளைஞனுக்கு உண்டாயிற்று, தன் மணவினைக்கு வேண்டும் மாநிதிகளைத் தானே தேடிப் பெறுதல் வேண்டும் என்ற விழுமிய உள்ளம் வாய்க்கப் பெற்றமையால் இளைஞன் பொருளீட்டி வரும் கருத்துடையனாயினான். அதனால் காதலை ஒருவாறு மறந்து வெளிநாடு சென்று வினை மேற்கொண்டு வாழ்ந்திருந்தான்.*

*காதலன் சிறந்த கடமையை முன்னிட்டுப் போயுள்ளமையினாலேயே காண வந்திலன் என்பதை அவள் அறியினும், அவள் காதலுணர்வு அச்சிறு பிரிவை யும் தாங்கிக் கொள்ள மாட்டாது துயர் கொண்டது. ஊணும் உறக்கமும் இழந்து வருந்தினாள். உள்ளுணர்வு உற்ற துயர் அவள் உடல் நலனை அழித்தது. புறநலத்தின் பொலிவு இழந்து போனதைக் கண்ட ஊர்ப் பெண்டிர் அலர் கூறி அவளைப் பழித்தனர். காதல் இன்பம் பெற மாட்டாது கலங்கிய அவள், ஊர்ப் பெண்டிரின் பொல்லாங்கு மிக்க பழியுரை கேட்டுப் பெரிதும் கலங்கினாள். 'உடல் உறுப்புக்கள், அவர் உணருமளவு நலன் இழந்து நலிந்து போகும் வண்ணம், உள்ளம் துயர் உற்றமையால் அன்றோ, ஊரார்க்கு நம் காதல் ஒழுக்கம் புலனாயிற்று; அதனாலன்றோ, அவர்கள் நம்மை*

இழித்தும் பழித்தும் பேசுகின்றனர்; அவர் வாயடங்க வேண்டுமாயின், நான் என் மனத் துயரை மறைத்து வாழ்தல் வேண்டும்!' என உணர்ந்தாள். அவ்வாறே தன்னகத்துறு துயரைத் தன் ஆருயிர்த் தோழியும் அறிந்து கொள்ளா வண்ணம் மறைத் தொழுக முற்பட்டாள். ஆனால், அந்தோ! அம் முயற்சியில் அவள் வெற்றி கண்டிலள்; காதல் துன்பத்தை, உள்ளம், பிறர் அறியாவாறு அடக்கிக் காத்துக் கொண்டது என்றாலும், அவள் உடல், அவ்வுள்ளத்தோடு ஒத்துப் போக மறுத்து விட்டது.

காதலனைக் காணாமையால், காதலன் அளிக்கும் இன்பத்தைப் பெற மாட்டாமையால் உண்டான வருத்தம் அவள் உடல் உறுப்புக்களை அழித்துவிட்டது. ஊர் மகளிர் அழகிற்கு ஓர் ஒப்பற்ற எடுத்துக் காட்டாய் விளங்கிய அவள் பேரழகு பாழாயிற்று; உடன் ஆடும் தோழியர் அனைவரினும் அழகால் உயர்ந்தவள் என்ற புகழ் பொய்த்து விட்டது. பிறைத் திங்கள் போல் பேரொளி வீசிய நெற்றி, பசலையால் மறைப்புண்டு, பீர்க்கம்பூவின் மங்கிய மஞ்சள் நிறம் போல் நிறமாறி நலன் இழந்து போய்விட்டது. தோள்கள், தாம் பெற்றிருந்த இயற்கை அழகோடு, கரும்பும் தொய்யிலும் எழுதிக் காதலன் அளித்த செயற்கை அழகையும் இழந்து தளர்ந்து மெலிந்தன. வேல் நிகர் விழியாள் என்ற விழுப்புகழ் அளித்த அவள் கண்கள் கலங்கின. கண்ணீர் ஆறெனப் பெருகி ஓடின. அதனால், மறைத்து வாழ வேண்டும் என அவள் மனம் துடிக்கவும், அவள் அக வொழுக்கமும், அவ்வொழுக்கத்திற்கு இடையூறு நேர்ந்தது கண்டு, அவள் கொள்ளும் அகத் துயரும் புறத்தார்க்குத் தெள்ளெனத் தெரிந்து போவதால், தீராத் துயர் உற்று வருந்தினாள்.

அவள் துயர் நிலையைத் தோழி கண்டாள். அந்நிலை நீண்டால், அவள் மாண்டு போவாள் என்பதை அத்தோழி அறிவாள். அதனால் அவள் காதலன் வந்ததும் மேலும் காலம் தாழ்த்தி வருத்தாது, வரைவிற்கு வழிகாணு மாறு வகை செய்தல் வேண்டும் எனத் துணிந்தாள். இளைஞன் வரவை ஆர்வத்தோடு எதிர்நோக்கியிருந்தாள். சின்னாட்களில் அவனும் வந்து சேர்ந்தான். கத்தரித்து விடப்பெற்ற கழுத்து மயிர் கவின் அளிக்க, கால்கள் காற்றெனக் கடுகிப்பாயக் குதிரைகள் விரைந்து ஈர்த்துவந்த நெடிய தேர் ஊர்ந்து வந்த அவனைக் கடற்கரைக்கண் கண்டாள். தேர் விட்டிழிந்து நின்றவனைச் சென்று வணங்கினாள். இருவரும் கடற்கரையின் தூய வெண் மணல் மீது அமர்ந்தனர். பால் வெள்ளம் பரவினாற் போல் வெண்மணல் பரந்த கரையை அணுகி நிற்கும் கருநிறக் கடல் நீர்க் காட்சியில் கருத்திழந்து போன அவன் நிலையைக் கண்ட தோழி, அவனை அக் காட்சி யினின்றும் மீட்க முனைந்து, "அன்ப! கருநிறக் கடல் சூழ வெண்மணல் பரந்து விளங்கும் இக்கடற்கரை, தன் வெண் மேனியின் வெண்ணிறம் விளங்கித் தோன்றுமாறு, நீலநிறம் வாய்ந்த நல்ல ஆடையை அம் மேனியில் அணிந்து விளங்கும் பலராமன் தோற்றத்தை நினைப்பூட்டுகின்ற தன்றோ?" என்று மெல்ல வினவினாள். அது கேட்டு அவன் தன் நினைவுற்று அவளை நோக்கிய வழி, அவள் அவனை நோக்கிய முகக் குறிப்பு, "அன்ப! மலைபோல் உயர்ந்து தோன்றும் இக்கடல் அலைகள் ஆர்ப்பரித்துக் கொண்டு வந்து கரையை மோதினும், அவை அக்கரை யெல்லையைக் கடந்து போனதை நீ யாண்டேனும் கண்டதுண்டோ? இல்லையன்றே! கடல் காட்டும் காட்சி

நலத்தில் கண்ணனின் முற்பிறந்தோன் உருவ நலனைக் கண்டு களிப்புறும் நீ, அக் களிப்பு மிகுதியால் அக்கடலின் செயல் காட்டும் சிறந்த அறவுண்மை ஒன்றை அறியத் தவறி விடுதல் கூடாது; ஆராவாரம் செய்து கொண்டே எழும்பிப் பாயும் அக்கடல் அலைகள், தம்மைச் சூழந்து நிற்கும் கரை யெல்லையைக் கடந்து போகாது, அடங்கி நிற்பதுபோல், நீயும் குடிப் பிறந்தார்க்கு ஓதிய உலகியல் அறங்களை அழிக்காது, அவற்றிற்கு அடங்கி யொழுகுதல் வேண்டும். காதல் கொண்ட காரிகையைக் கலங்க விடாது வரைந்து கொள்ளச் சொல்கிறது உலகியல் அறம்; அவ்வற நெறியை நீ அழித்து விடுதல் கூடாது. அவ்வறத்திற்கு அடங்கி நடத்தலே நினக்கு அழகாம்!" எனக் கூறாமல் கூறுவதுபோல் தோன்றிற்று.

நீல நீர்க் கடலும் வெண்மணற் கரையும் காட்டும் காட்சி நலத்தையும், தோழியின் முகம் காட்டும் கருத்து நலத்தையும், தன் கருத்தில் இருத்தி, இளைஞன் ஏதும் கூற மாட்டாது இருந்து விட்டானாக, மீண்டும் அவளே பேசத் தொடங்கி, "அன்ப! என் ஆருயிர்த் தோழியும் உன் அன்பைக் கவர்ந்த காதலியுமாய இவளை முதன் முதலாகக் கண்ட அன்று, 'பெண்ணே! உன்னை என்றும் பிரியேன்!' பிரிந்தால் உயிர் வாழேன்! என ஆங்குறையும் கடவுளர் அறிய ஆணையிட்டுக் கூறிய அச்சூளுறவினை அவள் உண்மையென நம்பினாள். பிரியாது வாழ்தல் இயலாது; அதிலும் ஆடவர்க்கு அது அரிதினும் அரிதாம் என்பதை அவள் அன்று அறிந்திலள். உன்பால் அவள் கொண்ட காதல் மயக்கம் அவள் கருத்தை மறைத்து விட்டது; அதனால் உன் ஆணை யொன்றையே நம்பி உன்னை ஏற்றுக் கொண்டாள்; அதனால் இன்று வருந்து

கிறாள்; அவ் வருத்த மிகுதியால் அவள் அழகு அழிந்து விட்டது; அழகழிவைக் காணும் ஊரார் அலர் கூறிப் பழிக்கின்றனர். அதனால், அவள் துயர் மேலும் பெருகுகிறது. அந்நிலை கண்டு, அவள், "இவ்வள வெல்லாம் நேர்ந்தது என் அறியாமையால், பிரிவறியா வாழ்வு பெறுதற்கு அரியது என்பதை அன்று அறியாது போனதன் விளைவு; இவ்வளவும் அதனால் நேர்ந்து விட்டன; ஊர்ப் பெண்டிர் ஒன்று கூடி எள்ளி நகைக்கும் அளவிற்கு என்னைக் கொண்டு வந்து விட்டது. ஆகவே, நான் அன்று செய்த அறியாமையை மறைக்க வேண்டு மாயின், காதலனை நினைந்து கலங்கும் மனத்துயரை மறைத்தல் வேண்டும்; இனி மறைத்து வாழ்வேன். ஒருத்தி அறியினும் ஊர் அறியு மாதலின், அதை என் உயிர்த் தோழியும் அறியாவாறு மறைத்து வாழ்வேன்!" எனத் துணிந்தாள். அவ்வாறே மறைத்து வாழவும் முயற்சிக் கின்றனள்! ஆனால் அதனால் பயனென்? அவள் கருதியது அவளுக்கு வாய்க்கவில்லை. அவள் மனவாற்றலினும், அவள் மனத்தில் தோன்றிய துயர் ஆற்றலுக்கு வன்மை அதிகமாதலின், அதன் விளைவால் பிறை வனப்பிழந்து போன நெற்றியும், அணி வனப் பிழக்குமாறு தளர்ந்து போன தோள்களும், நிறுத்தவும் நில்லாது நீர் சுரக்கும் கண்களும் அவள் அகத் துயரையும், அகத் துயர்க்குக் காரணமாய அவள் அறியாமையையும் எல்லோரும் அறியக் காட்டி விடுகின்றன. என் ஒருத்திக்கும் அறியாவாறு மறைக்க நினைந்தாள் அவள். ஆனால் அவள் நெற்றியும், நீண்ட தோளும், நீர்மல்கு கண்ணும் அவற்றை உலகறிய உணர்த்தித் திரிகின்றன. அதனால் காதல் துயரோடு, அக் காதல் துயரைப் பிறர்

*அறியாவாறு மறைப்பதும் தன்னால் இயலவில்லையே என்ற எண்ணத்தால் எழுந்த கருத்துத் துயரும் ஒருங்கே வருத்த வாழ்விழந்து கிடக்கின்றாள்.*

*“அன்ப! இனியும் அவளை இந்நிலையில் விட்டு வைத்தல் அறமாகாது; அவளை வரைந்து கொண்டு வாழ்வளிக்கச் செய்யும் விழுமிய பணியினை மேற் கொள்ள உன் தேர் இன்றே விரைந்து செல்லும் வண்ணம் நின்னை நனிமிக வேண்டிக் கொள்கிறேன்!” எனக் கூறி வரைவு கடாயினாள்.*

“ஞாலம் மூன்று அடித்தாய முதல்வற்கு முதுமுறைப்
பால் அன்ன மேனியான் அணிபெறத் தைஇய
நீலநீர் உடைபோலத் தகைபெற்ற வெண்திரை
வால் ஏக்கர் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப!

ஊர் அலர் எடுத்தரற்ற, உள்ளாய்நீ துறத்தலின்
கூரும் தன் எவ்வநோய் என்னையும் மறைத்தாள்மன்;
காரிகை பெற்ற தன்கவின்வாடக் கலுழ்புஆங்கே
பீர்அலர் அணிகொண்ட பிறைநுதல் இல்லாக்கால்.

இணைபு இவ்வூர் அலர் தூற்ற எய்யாய்நீ துறத்தலின்
புணைஇல்லா எவ்வநோய் என்னையும் மறைத்தாள்மன்;
துணையாருள் தகைபெற்ற தொன்னலம் இழந்து இனி
அணிவனப்பு இழந்ததன் அணைமென்தோள் அல்லாக்கால்

இன்று இவ்வூர் அலர் தூற்ற எய்யாய்நீ துறத்தலின்
நின்றதன் எவ்வநோய் என்னையும் மறைத்தாள்மன்;
வென்றவேல் நுதிஎய்க்கும் விறல்நலன் இழந்து இனி
நின்றுநீர் உகக் கலுழும் நெடும் பெருங்கண் அல்லாக்கால்

அதனால்,
பிரிவில்லாய் போலநீ தெய்வத்தின் தெளித்தக்கால்,
அரிது என்னாள் துணிந்தவள் ஆய்நலம் பெயர்தரப்
புரியுளைக் கலிமான் தேர் கடவுபு
விரிதண்தார் வியன்மார்ப விரைக நின் செலவே."

*வரையாது பிரிந்து வந்த தலைவனைத் தோழி, தலைவியது ஆற்றாமை கூறி வரைவு கடாயது.*

1. ஞாலம் – உலகம்; முதல்வன் – திருமால்; ஈண்டு கண்ணன்; முது முறை – முன்பிறந்த முறைமை வாய்ந்த. 2. தைஇய – உடுத்த; 4. வால் – வெண்மை. எக்கர் – மணல்மேடு: சேர்ப்ப – நெய்தல்நிலத்தலைவ! 6. கூரும் – மிகும்; எவ்வம் – வருத்தம். மன் – அது பயனற்றுப் போயிற்று எனப் பொருள்படும். 7. காரிகை பெற்ற – எடுத்துக் காட்ட வல்ல அழகு வாய்ந்த 8. பீர்அலர் அணி – பீர்க்கம் பூவின் அழகு: அதாவது பசலை. 9. இணைபு – ஒன்றுகூடி; எய்யாய் – துயர் அறியாது; 10. புணை – போக்கும் வழி. 11. துணையாருள் தகைபெற்ற – தோழியர் அனைவரினும் அழகு பெற்ற. தொன்னலம் – இயற்கை அழகு. 12. அணி வனப்பு – தொய்யில் முதலாம் செயற்கை அழகு. 16. உக – சொரிய; கலுழும் – அழும். 20. உளை – பிடரிமயிர்; கலிமான் – விரைந்து பாயும் குதிரை. கடவுபு – செலுத்தி. 21. தார் – மாலை அணிந்த. வியன் – அகன்ற.

# 8

# கொடியை நீ கொள்க!

கடல் நாட்டுக் காவலன் மகன் அவன். கடல் வளம் கொழிக்கும் அவன் நாட்டுக் கடற்கரை, புன்னை முதலாம் பன்மரம் நிறைந்து என்றும் தண்ணெனக் குளிர்ந்திருக்கும். அந்நாட்டு அரசிளங்குமரனாய அவன், ஒருநாள், விரைந்த செலவினைத் தம் பிறப்பியல்பாகக் கொண்ட குதிரைமீது இவர்ந்து, கடற் காட்சிகளைக் கண்ணுற்று வந்தவன், இடை வழியில் அழகிய ஓர் இளம் பெண்ணைக் கண்டான். பேதைப் பருவம் கடந்து பெதும்பைப் பருவத்தில் அடியெடுத்து வைக்கும் பருவத்தினளாய அவள் பெருவனப்புடையளாய் விளங்கினாள். கையில் வளைகள்; காலில் மணிச் சிலம்பு; இடையில் அழகிய தழையாடை; ஆகிய இச் செயற்கை அழகுகள், அவள் இயற்கை அழகிற்கு அழகு தந்தன. இத்தகு காட்சி நலம் உடையளாய அவள், பேசுங்கால் படபடக்கப் பேசாது, சிலவே பேசும் பண்பறிந்திருந்தாள். வாயினின்றும் வெளிப்படுவன சில சொற்களே ஆயினும், அவை கேட்கக்

கேட்கத் தெவிட்டாத் தீஞ்சுவை உடையவாம். அத்தகையாள் அழகைக் கண்டும், அவள் வழங்கும் மொழியைக் கேட்டும் அவள்பால் உள்ளத்தைப் பறிகொடுத்தான். அவள் காதலைப் பெற ஏங்கி நின்றான்; குதிரை மீது வந்து, தன்னைக் கண்டதும் கருத்தழிந்து நிற்கும் அக் கட்டிளங் காளையை அவளும் கண்டாள்; அவன்பால் அரசிளங் குமரனுக்குரிய தோற்றப் பொலிவினைக் கண்ணுற்ற அவளும் அவன்பால் காதல் கொண்டாள்; இருவர் கருத்தும் ஒன்று படவே, இருவரும் மறையில் மணங் கொள்ளும் கந்தர்வ முறைப்படி கணவனும் மனைவியுமாயினர். அன்று முதல் அவன் அவளைத் தேடி ஆங்கு வருவன்; அவளும் அவனைக் காணும் ஆர்வ மிகுதியால் ஆங்கு வருவள். ஒருவரை யொருவர் காண்பர். களிப்புக் கடலில் மூழ்கி வீடு திரும்புவர். இவ்வழக்கம் வளர்ந்தது; அவர் காதலும் வளர்ந்தது.

இவ்வின்பச் சூழ்நிலையில் நாள் சில கழிந்தன. அது காறும் ஊரார்க்கோ, உடன் ஆடும் தோழியர்க்கோ, உற்றார் பெற்றார்க்கோ தெரியாதிருந்த அவள் காதலை ஊர்ப் பெண்டிர் சிலர் உணர்ந்து கொண்டனர். தாம் கண்டவற்றிற்குக் கண்ணும் காதும் வைத்து ஊர் மன்றில் அம்பலப்படுத்தி விட்டனர். அதனால் தன் பெண்ணின் காதல் விளையாட்டினைக் கண்டு கொண்ட தாய் அவளைக் கண்காணிக்கத் தொடங்கினாள். அதனால் முன்போல், தான் விரும்பும் போதெல்லாம் சென்று காதலனைக் கண்டு மகிழ்வதற்கு இயலாது கலங்கினாள் அப்பெண். காதல் தடையுற்றுப் போவதை அவளால் தாங்கிக் கொள்வது இயலாதாயிற்று. அதனால் அவள்

துயர் பெருகிற்று. இந்நிலை நீண்டால், தான் மாண்டு போக நேரிடும் என உணர்ந்தாள். அதனால் ஒருநாள் தன் காதலனிடம் தன் உள்ள நிலையை உணர்த்தினாள். ஊரார் கூறும் அலராலோ, உற்றார் விதிக்கும் தடையாலோ தம் காதல் வாழ்வு கன்றிப் போகாதிருக்க வேண்டுமாயின், அதற்கு இருவரும், உற்றார் உடனிருந்து நிகழ்த்த, ஊரார் அறிய, மணங்கொண்டு இல்லற வாழ்வு மேற்கொள்வது ஒன்றே வழியாம் என்பதை, அவனுக்கு விளங்க உரைத்தாள்.

கழிகளையும் கானற் சோலைகளையும் கடந்து வந்தும் காதலியைக் காண மாட்டாது வறிதே மீளும் வருத்தத்தால் வாடிய அவனும் அவள் கூறியதை ஏற்றுக் கொண்டான்; வரைவிற்கு வேண்டும் பெரும் பொருளைச் சேர்த்துக் கொண்டு விரைந்து வந்து வரைந்து கொள்வேன் என வாக்களித்துச் சென்றான்.

காதலன் வரைவு முயற்சியோடு வருவான் எனும் நம்பிக்கையால் காதல் நோயை ஒருவாறு தாங்கிக் காத்திருந்தாள் அப்பெண். ஆனால் வாக்களித்தவாறு இளைஞன் விரைவில் வந்திலன். அவன் வருகையை ஒவ்வொரு நாளும் எதிர் நோக்கி ஏமாந்தாள். அதனால் அவள் துயர் பெருகிற்று. கண்கள் கலங்கின; கண்ணீர் முத்து முத்தாகக் கசியத் தொடங்கிற்று. அவள் மேனி தளர்ந்தது. தனிமையைத் தாங்கிக் கொள்ள மாட்டாது அழத் தொடங்கினாள். அவள் மாண்பு மிக்க கவின் மாண்பிழந்தது. இன்னும் சின்னாட்கள் சென்றால் இறந்து விடுவளோ என்று எண்ணும்படியாகி விட்டது அவள் நிலை.

அவள் ஆடல் பாடல்களின் போதும், உணவிலும் உறக்கத்திலும் உடன் வாழ்ந்து பழகிய தோழி, அவள் நிலையைக் கண்டாள். அவள் வாழ வேண்டுமாயின், அவர்கள் திருமணம் விரைவில் முடிதல் வேண்டும் என உணர்ந்தாள். உணர்ந்தவள், 'தான் உணர்ந்த இவ்வுண்மையை அவள் காதலன் உணராதிருப்பனோ? அவள் துயரையும், அத்துயர்க்காம் காரணத்தையும், அது தீர்க்கும் வழியையும் அவள் தோழியாம் தொடர்பல்லது வேறு நெருங்கிய உறவில்லாத் தானே அறிந்திருப்புழி, அவள் கருத்தில் இடங்கொண்ட காதலனாய அவன் அறியாதிரான்; அறிந்தே அவன் அவ்வாறு நடந்து கொள்கிறான்; தான் கொண்ட காதல் உறவினைப் பிறர் அறிந்திலர். அதனால் எத்தனை காலம் வேண்டுமாயினும் அக்களவின்பத்தை நுகரலாம்; அதனால் அவள் எவ்வளவு வருந்தினும் கவலை இல்லை என்ற துணிவே அவன் காலம் தாழ்த்துதற்குக் காரணம் போலும். அஃது உண்மையாயின், அவன் அவள்பால் கொண்டிருப்பது உண்மை அன்பாகாது; அத்தகையான் காதற் சிறப் புணராக் கொடியவனாவன்; பண்புடைப் பெரியோன் என மதிக்கத்தக்க மாண்புடையனாகான்!' என்றெல்லாம் எண்ணி, அவனை நொந்து கொண்டாள்.

பின்னர் வறிதே நொந்து கொண்டு வாயடைத்துக் கிடப்பின் இவட்கு வாழ்வு கிட்டாது; இவள் அல்லல் அகலாது; ஆதலின் இப்போதே சென்று, அவன் செய்யும் தவறினை, அதனால் இவட்கு நேரும் அழிவினை எடுத்துக் கூறி, அவனைத் திருத்துதல் வேண்டும் எனத் துணிந்தாள். அவள் துணிந்தாளேனும், ஆண்மையும், ஆளும் உரிமையும் பெற்ற அவன் உயர்வும், பெண்மையும்

பணிபுரியும் கடமையும் கொண்ட தன் தாழ்வும் நினைவிற்கு வரவே, அவள் உள்ளம் அவனுக்கு அறிவுரை கூற அஞ்சிற்று. ஆயினும், தன்பால் ஒப்படைக்கப்பட்டாள் ஒருத்தியின் உயிரைக் காத்தலைக் கடமையாகக் கொண்ட தனக்கு, அவளுக்கு உயிர் போகும் துயர் அளித்த அறக்கொடியோனாய அவனுக்கு அறிவுரை கூறும் உரிமை உண்டு என அவள் உள்ளுணர்வு உணர்த்தவே, துணிந்து அவன்பால் சென்றாள்.

சென்றவள், எடுத்த எடுப்பிலேயே அவனைக் குறை கூறினாளல்லள். தன்னைக் குறை கூறுவார் எவ்வளவு உயர்ந்தவராயினும், பின்னர் அவர் கூறுவன தன் ஆக்கத்திற்கு அரண் அளிக்கும் தனிச் சிறப்புடையவே யாயினும், அவர்பால் வெறுப்புக் கொள்வது மனத்தின் இயல்பாம் என்பதை அறிந்த அவள், சென்று கண்டதும் அவனைக் குறை கூறுவது கூடாது; அனைவரும் ஒருங்கே ஒப்புக் கொள்ளும் ஓர் உலகியல் உண்மையை முதலில் எடுத்துக் கூறி, அது கேட்டு அவன் உள்ளம் பண்பட்டிருக்கும் நிலை அறிந்து, அவன் செய்த குறையை எடுத்துக் காட்டினால், அவன் அதை உணர்ந்து அதுதீர வழி காணத் துணிவன்; மேலும், அவனுக்கு அறிவுரை கூற எவ்வகையாலும் தகுதியில்லாத் தான் அறமுரைக்க முன்வந்ததற்கு ஓர் அமைதியுமாம் என உணர்ந்தாள்.

அவ்வுணர்வோடே அவன்பால் சென்றாள்; அவன் கடல் நாட்டு வனப்பினைக், காற்றெனப் பாயும் குதிரை ஊர்ந்து வாழும் அவன் வளமார் வாழ்வைப் பாராட்டினாள்; அப்பாராட்டு, இத்துணை வளம் உனக்கு ஆகாது; வளம் பெருகும் வாழ்வு பெறும் தகுதி உனக்கு இல்லை; அது உலகியல் முறையொடு முரண்பட்டதாம்

எனக் கூறாமல் கூறுவதுபோல் தோன்றிற்று. அவள் உட்கருத்தினை உணர்ந்து கொள்ள மாட்டாமையால், அவன் அவள் பாராட்டு கேட்டுப் பெருமிதம் உற்று நின்றக்கால், 'அன்ப! உலக வாழ்வின் உயர்ந்த ஒழுக்க நெறியினை உணராதவர்களே பிழை புரிவர்; அவர் பிழை புரிவது தாம் செய்யும் செயல் தவறானது என்பதைத் தாமே உணர்ந்து அதைச் செய்யாது விட முடியாமை; அவரே உணர்ந்து கைவிட மாட்டா அப் பிழையினை அவருக்கு எடுத்துரைத்துக் கைவிடச் செய்வார் ஒருவரும் இல்லாமை ஆகிய இவற்றாலேயே ஆம். ஆனால், அன்ப! தாம் செய்யும் பிழைகளைப் பிறர் எவரும் எவ்வகை யாலும் அறிந்து கொள்ளா வகையில் செய்வது எண்ணற்ற பேர்க்கு எளிதில் இயலும். ஆனால், அப்பிழையைத் தம் நெஞ்சு அறியாது செய்வது எந்நிலையில் வாழ்வார்க்கும் இயலாது. ஒருவன் தன் நெஞ்சு அறியாமல் எதையும் செய்வது இயலாது. உடல் நிழல் போல் ஒட்டி வாழ்வாரையும் ஏமாற்றி விடலாம்; ஆனால் தன் நெஞ்சத்தை ஏமாற்றுதல் இயலாது. ஒருவன் செய்த பிழையைப் பிறர் அறியக் காட்டி உறுதி செய்யும் நல்ல சான்றளிக்க அவன் நெஞ்சு ஒன்றே போதும். களவும் கையுமாய்க் கண்ட குற்ற நிகழ்ச்சியைக் கண்ணெதிர் கண்ட சான்று, அக் குற்றம் புரிந்தாரின் நெஞ்சைத் தவிர வேறு இல்லை. ஆகவே, பிறர் எவரும் பார்த்திலர் எனப் பிழை புரிவது பேதையோர் செயலாம்.

"அன்ப! இவ்வுலகியல் உண்மையினை நீ நன்கு உணர்ந்துள்ளாய் என்பதை நன்கு அறிவேன்; ஆனால் அவ்வறிவு வாய்க்கப் பெற்ற உன்பால் அன்பு இல்லை என்பதையும் நான் அறிந்தேன்; அதனால் நின் அன்பற்ற

நிலையை நினக்கு அறிவுறுத்தி நின்னைக் கடிந்துரைக்க முன்வந்து விட்டேன்; அது குறித்து என்னை வெறுத்து வெகுளாது, நான் கூறுவனவற்றைக் கேள்; அன்ப! நின்னால் காதலிக்கப் பெற்ற என் தோழி நனி இளமைப் பருவத்தள்; நலம் தீங்குகளை அறிந்து கொள்ளும் அறிவு வாய்க்கப் பெறாதவள்; அவள் அத்தகையள் என்பதை அறிந்து கொண்டமையால், அவளை அன்று காதலித்து, இன்று ஈண்டு வந்து கவலையற்று வாழ்கின்றாய்; அவள் மார்பில் தொய்யில் எழுதியும், அவள் கூந்தலை ஐவகை வனப்பும் தோன்றும் வண்ணம் பின்னிட்டும், அவள் உள்ளத்தில் காதற்கனலை மூட்டிவிட்டாய். நீ தந்த காதல் நோயால் அவள் பெரிதும் கலங்குகிறாள். அவள், கண்ணீர் ஆறெனப் பெருகி ஓட ஓயாது அழுது கொண்டே உள்ளாள். அதனால் அவள் பேரழகு அவளை விட்டு அகன்றுவிட்டது. அவள் மேனி வனப்பிழந்து வாடிற்று; அவள் கைவளைகள் முன் கையில் நிற்க மறுத்துக் கழன்று ஓடுகின்றன. அவளை ஆங்கே அவ்வாறு வாடவிடுத்து, கடல் வளம் கொழிக்கும் நின்நாட்டுக் கானற் சோலை களில் கவலையற்று வாழ்கிறாய், நீ. நின் செயல் நனிமிகக் கொடிது; தகுதியற்றது; நீ அறக்கொடியோன் ஆயினை; தக்கான் என மதிக்கும் தகுதியற்றவன் ஆகிவிட்டனை.

“அன்ப! அவள் நீ இல்லாமல் ஓர் இமைப் பொழுதும் உயிர் கொண்டு வாழ்ந்திராள்; அவள் கைவளைகள், கைகளில் நிற்க வேண்டுமாயின், பிறைத் திங்கள் போல் பேரழகு காட்டும் அவள் நெற்றி அழகு அழியாது நிலைபெற வேண்டுமாயின், அது, நீ அவளை மணந்து கொள்வது ஒன்றினாலேயே ஆகும். ஆகவே அன்ப! அவளை வரைந்து கொள்ள, இன்றே விரைந்து வருவாயாக!” என வேண்டிக் கொண்டாள்.

"கண்டவர் இல்என உலகத்துள் உணராதார்
தங்காது, தகைவுஇன்றித் தாம்செய்யும் வினைகளுள்
நெஞ்சு அறிந்த கொடியவை மறைப்பினும், அறிபவர்
நெஞ்சத்துக் குறுகிய கரிஇல்லை ஆகலின்,
வண்பரி நவின்ற வயமான் செல்வ!
நன்கு அதை அறியினும், நயன் இல்லா நாட்டத்தால்,
அன்பிலை எனவந்து கழறுவல்; ஐய! கேள்.

மகிழ்செய் தேமொழித் தொய்யில்சூழ் இளமுலை
முகிழ்செய முள்கிய தொடர்பவள், உண்கண்
அவிழ்பனி உறைப்பவும் நல்காது விடுவாய்
இமிழ்திரைக் கொண்க! கொடியைகாண் நீ.

இலங்கு ஏர் எல்வளை ஏர்தழை தைஇ
நலம்செல நல்கிய தொடர்பவள் சாஅய்ப்
புலந்து அழப் புல்லாது விடுவாய்?
இலங்குநீர்ச் சேர்ப்ப! கொடியைகாண் நீ.
இன்மணிச் சிலம்பின், சின்மொழி ஐம்பால்
பின்னொடு கெழீஇய தடவர வல்குல்
நுண்வரிவாட வாராது விடுவாய்
தண்ணந் துறைவ! தகாஅய்காண் நீ.

எனவாங்கு,
அனையள் அன்று அளிமதி; பெரும! நின்இன்று
இறைவரை நில்லா வளையள் இவட்கு, இனிப்
பிறையேர் சுடர்நுல் பசலை

மறையச் செல்லும் நீ மணந்தனை விடினே."

*தோழி தலைவனை வரைவு கடாயது.*

1. தங்காது — தாமே உணர்ந்து கைவிடாது. தகைவு — தடுப்பார். 4. கரி — சான்று. 5. பரி — விரைந்த செலவு. நவின்ற — பழகிய. வய — வலிமை பொருந்திய. 6. நயன் — அன்பு. நாட்டம் — அறிவு. 7. கழறுவல் — கடிந்துரைப்பேன். 9. முகிழ்செய — தோன்ற. முள்கிய — கூடிய. 10. உறைப்ப — துளித்துளியாக விழ. 13. நலம்செல — அழகுகெட. சாஅய் — தளர்ந்து. 14. புலந்து — தனிமையுற்று. 22. இறைவரை — முன்கையிடத்தில்.

9

# தேர் குதிரை பூண்க!

கடல் நாட்டுக் காரிகை ஒருத்தியும், அந்நாட்டு அழகிய இளைஞன் ஒருவனும் காதல் உள்ளத்தால் ஒன்றுபட்டனர். நாள்தோறும் கடற்கரைக்குச் சென்று கழிகளில் மலர் கொய்து மகிழும் வழக்கமுடையவள் அவள். கடற்கரையின் மாண்புமிகு மாலை காலைக் காட்சிகளைக் கண்டு மகிழும் வழக்கமுடையவன் அவன். அவ்வாறு களித்துத் திரியுங்கால் அவர்க்கிடையே ஒருநாள் உண்டான காதல் உறவு வளர்ந்து உறுதி பெற்றது. இருவரும் உயிர் ஒன்று உடல் இரண்டு என மதிக்குமளவு ஒன்றுபட்டு விட்டனர். ஆனால் அவர்கள் இவ்வாறு ஒன்றுபட்ட அந்நிலையிலும் அவர் காதலை அப் பெண்ணின் பெற்றோர் அறிந்திலர். அதனால் அவர்கள் பலர் அறியப் பழக மாட்டாது வருந்தினர். பிறர் காணாவாறு காதல் வாழ்வு மேற்கொள்வது அரிதாதல் கண்டு கலங்கினர்.

இந்நிலையில் மகளின் பருவ எர்ச்சி கண்ட அப் பெண்ணின் தாய், அவளை அவள் விரும்பியவாறு பழகவிட்டிலள். வீட்டைக் கடந்து வெளிச்செல்லாவாறு விழிப்பாயிருந்து காக்கத் தொடங்கினாள். அதனால் கடற்கரைக்குச் செல்வதோ, காதலனைக் கண்டு மகிழ்வதோ செய்ய மாட்டாது அப் பெண் கலங்கினாள். கட்டுக் காவல்களுக்கு உட்பட்டு விட்டாள் காதலி என்பதைக் கண்டு கொண்ட இளைஞன், அன்றுமுதல், அவள் மனைக்கு அணித்தாக வந்து கண்டு செல்லத் தலைப்பட்டான். ஆனால் அது அத்துணை எளிதன்று என்பதைப் போகப் போக அறிந்து வருந்தினான்.

நாள்தோறும் தவறாது வரும் அவன் வருகையை எதிர்நோக்கி இரவின் இடையாமத்திலும் உறங்காது விழித்திருப்பள் அவளும். ஆனால் ஒவ்வொரு நாளிலும் யாதேனும் ஓர் இடையூறு நேர்வதால் காதலியைக் காணமாட்டாது இளைஞன் வறிதே மீள்வன்; கலங்கிக் கண்ணீர் சொரிவாள் அவளும். இடையூறு மிகுவதால், காதலனைக் கண்டு மகிழும் காலம் வரும் போது வருக; அதுகாறும் கலங்காது காத்திருப்போம் என எண்ணி அமைதி கொள்வது காதல் உள்ளம் உடையார்க்கு இயலாது. ஆதலின், அவன் வருகின்றானோ இல்லையோ, அவள் அவன் வருகையை எதிர்நோக்கி இரவெல்லாம் விழித்திருந்து வருந்துவது வழக்கமாகி விட்டது.

ஒரு நாள் அவன் வருகையை எதிர்நோக்கி விழித்திருந்தாள். உலகத்து உயிர்கள் எல்லாம் உறங்கி விட்டதாக, ஒலி அடங்கி அமைதி நிலவும் அந்நள்ளிரவில் திடுமென ஓர் ஒலி கேட்டது. அது கடற்கரைச் சோலைகளில் கூடு கட்டி வாழும் நாரை போலும் கடற்பறவைகள் உறங்கி விழித்தக்கால் ஒலித்த ஒலியாகும்.

ஆனால் காதலன் ஏறிவரும் தேரில் கட்டிய மணி யோசையைப் பலகால் கேட்டுப் பழகிய அவள், அவ்வொலியை அவன் தேர் மணியொலி யென்றே கருதினாள். அந்நிலையே அவள் கவலை எங்கோ சென்று மறைந்தது. காதலன் தேர் வந்துவிட்டது; சிறிது நாழிகைக்கெல்லாம் காதலனும் வந்துவிடுவான்; கண்டு மகிழலாம் என்ற எண்ணங்கள் எழவே களிப்புக் கடலில் ஆழ்ந்து போய் விட்டாள்; ஆனால், அந்தோ! அம்மகிழ்ச்சி கணப் பொழுதே. பறவைகள் மீண்டும் உறக்கத்தில் ஆழ்ந்துவிடவே, அவற்றின் குரல் ஒலியும் அடங்கிவிட்டது. கேட்ட ஒலி தொடர்ந்து ஒலிக்கவில்லை என்பதை உணர்ந்தாள். ஊர்ந்துவரும் தேரின் மணியொலியாயின் தொடர்ந்து ஒலிக்குமே; ஒரு முறை ஒலித்து ஓய்ந்து விடாதே; ஆனால் இதோ இவ்வொலி அடங்கிவிட்டதே; ஆகவே, கேட்ட ஒலி காதலன் தேர்மணி ஒலியன்று; அது உறக்கம் கலைந்தெழுந்த கானற் பறவைகளின் ஒலி போலும் என அறிந்தாள்; உடனே காதலனைக் கண்டாற் போலவும், அவனோடு கலந்து பழகினாற் போலவும் எண்ணி இறும்பூது கொண்டவளின் உள்ளக் கிளர்ச்சி எங்கோ சென்று மறைந்தது. மீண்டும் தனிமையுணர்ச்சி எழவே, துயர் வெள்ளத்தில் ஆழ்ந்து போனாள்.

மற்றொரு நாள், காதலன் வருவான், கண்டு களிக்கலாம் என்ற உள்ளார்வம் மிக்கு உறக்கம் ஒழிந்து காத்துக் கிடந்தாள்; அந்நிலையில் ஆங்கு புதிய மணம் ஒன்று புகுந்து மணப்பதை உணர்ந்தாள்; அது அவள் மனையருகே ஓடும் கழிநீரில், மலர்கள் இதழ் விரிந்து அலர்வதால் எழுந்த புதுமணமாகும். ஆனால் காதலன் மார்பில் மாலையைக் கண்டும், அம்மாலை அளிக்கும் மாண்புமிகு மணத்தை நுகர்ந்தும் மகிழ்ந்து பழகிய அவள்

மனம், ஆங்கு வீசிய அப்புது மணத்தைக் காதலன் மாலை தரும் மணம் என்றே எண்ணிற்று; அவ்வளவே; காதலன் மாலை வீசும் மணவாடை வந்து விட்டது; இன்னம் சிறிது பொழுதில் காதலனும் வந்து விடுவான் என எண்ணி மகிழ்ந்தாள். அந்நினைவால் தன்னை மறந்திருந்தவள் மேனியில், கடற் காற்று தண்ணென வந்து தாக்கிற்று. உடனே அவளுக்கு உண்மை புலனாகி விட்டது. சற்று முன் வீசிய மணம், மணவாளன் மார்பு மாலை தரும் மணம் அன்று; அது கடற்காற்றுப் பட்டு மலர்ந்த கழிப்பூக் களினின்றும் வந்த மணமாம் என அறிந்தாள்; உடனே உவகை மறைந்தது; உறுதுயர் கொண்டது உள்ளம்.

பிறிதொரு நாள்; கடல்போல் அகன்ற அவள் பெரிய மனையில், அலைபாயும் தன் உள்ளத்தை ஒரு வழியில் நிறுத்த மாட்டாது வருந்திக் கிடந்தாள்; அவள் நெஞ்சு அவனையே நினைந்து கொண்டிருந்தது. காதலனைக் கணப் பொழுது மறந்திருப்பதும் அதற்கு இயலவில்லை. அந்நிலையில் தொடர்ந்து பல நாள் உறக்கம் இன்மையால் உடலும், அவனையே உன்னி யுன்னி உறுதுயர் கொள்வதால் உள்ளமும் சோர்ந்து விட்டமையால், அவள் கண்கள் அவளை அறியாதே சிறிது அயர்ந்து விட்டன. உறக்கத்திலும் அவன் நினைவே தலை தூக்கி நின்றமையால், அச் சிறு பொழுதில், அவன் ஆங்கு வந்து அவளை ஆரத்தழுவிக் கொள்வது போலும் ஓர் உணர்வு பிறந்தது; உடனே, தன் தோள்மீது கிடப்பவனைத் தழுவிக் கொள்ள அவள் கைகள் ஆங்குச் சென்று தடவின. ஆனால், அந்தோ! ஆங்கு அவன் உடலைக் கண்டில அவள் கைகள்; அவ்வேமாற்றம் அவளுக்குப் பேரதிர்ச்சி அளித்தது; அவ்வளவே; கணப் பொழுது உறக்கமும் கலைந்து விட்டது; செயலற்றுச் சிந்தை நொந்தாள்.

இவ்வாறு அப்பெண் படும் துயரை அவள் தோழி கண்டாள். இவள் காதல் இவ்வாறே இடர்ப்படுமாயின் இவள் வாழாள்; இவள் படும் துன்பம் விரைவில் துடைக்கப்படல் வேண்டும்; அது மறைய வேண்டுமாயின், இவள் அவனைப் பலர் அறிய மணந்து மனையற வாழ்வு மேற்கொள்ளுதல் வேண்டும் என உணர்ந்தாள்; ஆனால் மண முயற்சி மேற்கொள்வது பெண் பிறப்புற்ற இவளால் ஆகாது; மேலும் மகள் வீட்டார் மணங் கொண்டு போவது உலகியல் முறையும் அன்று என அறிந்தாள்; அதனால் அவள் காதலன்பால் சென்று கடிதின் வந்து வரைந்து கொள்க என வேண்டிக் கொள்ளத் துணிந்தாள்.

ஒரு நாள் மாலை அவனூர்க்குச் சென்றாள். அவன் கடற்கரைக்கண் உள்ளான் என உணர்ந்து ஆங்குச் சென்றாள். ஆங்குக் காவி ஆடை உடுத்த அந்தணர் சிலர், தாம் ஏந்திவந்த முத்தலைத் தண்டினை முன்னே மணலில் நாட்டிவிட்டு, மறையோதி வழிபடும் மாலைக் கடனாற்றிக் கொண்டிருந்தனர் ஒருபால்; ஒருபால், பகலெல்லாம் கடலிலும் கழிகளினும் புகுந்து, சிறியவும் பெரியவுமாய மீன்களைக் கவர்ந்து உண்ட நாரைக் கூட்டம், முதுமையால் செந்நிறம் பெற்ற தம் தோகைகள் போன்ற, சிவந்து நீண்ட அலகுகள் தம் கால்களுக்கு ஒப்ப நிலத்தில் சென்று ஊன்றிக் கிடக்க நின்றிருந்தன. இவ்விரு பெரும் காட்சிகளைக் காணும் நினைவால், காதல் துயர்மறந்து நிற்பானை அணுகினாள். அவன் கருத்திழந்து போதற்குக் காரணமாய அக்காட்சி நலங்களைப் பாராட்டுவாள் போல், "அன்ப! ஞாயிறு மறைந்து விட்டான்; அஞ்ஞாயிற்றின் ஒளியில் பேரின்பம் கண்டு மகிழ்ந்த உலக மக்கள், அவன் மறைவு கண்டு சிறிதே மனம் கலங்கினாரேனும், அஞ்ஞாயிற்றினிடத்தில் வேறு ஒரு மதி

வந்து தோன்றக் கண்டவுடனே அவர் கலக்கம் மறைந்து விட்டது. ஞாயிற்றின் மறைவை மறந்து மாலைத் திங்களின் வரவு கண்டு மகிழத் தலைப்படுவர். அத்தகைய மனவியல்பு வாய்ந்த மக்கள் வாழும் நாட்டில் வாழ்பவன் நீ; அதனால் காதல் இன்பம் கண்டு களித்த நீ, அது கிடைக்கப் பெறாமையால் வந்துற்ற சிறு துயரை நின் நாட்டுக் கடற்காட்சிகளைக் காண்பதால் மறந்துபோய் விட்டனை; அன்ப! நாரைகள் அந்தணர்போல் தோன்றினும், உயிர்க் கொலை புரியும் அவை, அருளறம் மேற்கொண்ட அந்தணர்க்கு ஒப்பாகாதது போல், நீ என் தோழியின் காதலனே எனினும், உன் உள்ளத்தில் உண்மைக் காதல் உணர்வு இல்லை. உயர்ந்த காதலர்க்கு ஒப்பாக மாட்டாய் நீ!'' எனக் கூறாமல் கூறிக் கண்டித்தாள்.

பின்னர், அவன் காதலி படும் பாட்டை ஒன்று விடாமல் உரைத்துவிட்டு, "அன்ப! முழுமதிபோல் ஒளிவீசும் அவள் முக அழகு அழியாது, மேலும் வனப்பு மிகுந்து விளங்குவதை விரும்புவையாயின், நீ, இன்றே தேர் ஏறிச் சென்று, மணத்திற்காம் முயற்சிகளை விரைந்து மேற்கொள்வாயாக!" எனக் கூறி வேண்டிக் கொண்டாள்.

"பொன்மலை சுடர் சேரப், புலம்பிய இடன் நோக்கித்
தன்மலைந்து உலகுஏத்தத் தகைமதி ஏர்தரச்,
செக்கர்கொள் பொழுதினான், ஒலிநீவி இளநாரை
முக்கோல்கொள் அந்தணர் முதுமொழி நினைவார்போல்
எக்கர்மேல் இறைகொள்ளும் இலங்குநீர்த் தண்சேர்ப்ப!

அணிச்சிறை இனக்குருகு ஒலிக்குங்கால், நின்திண்தேர்
மணிக்குரல் எனஇவள் மதிக்கும்மன்; மதித்தாங்கே

உள்ஆன்ற ஒலியவாய் இருப்பக்கண்டு, அவை கானல்
புள்என உணர்ந்து பின்புலம்புகொண்டு இணையுமே.

நீர்நீவிக் கஞன்றபூக் கமழும்கால், நின்மார்பின்
தார்நாற்றம் எனஇவள் மதிக்கும்மன், மதித்தாங்கே
அலர்பதத்து அசைவளி வந்து ஒல்கக் களிப்பூத்த
மலர்என உணர்ந்து மம்மர்கொண்டு இணையுமே.

நீள் நகர் நிறையற்றாள் நினையுநள் வதிந்தக்கால்
தோள்மேலாய் எனநின்னை மதிக்கும்மன், மதித்தாங்கே
நனவெனப் புல்லுங்கால் காணாளாய்க் கண்டது
கனவென உணர்ந்து பின் கையற்றுக் கலங்குமே.

எனவாங்கு
பலநினைந்து இனையும் பைதல் நெஞ்சின்
அலமரல் நோயுள் உழக்கும் என் தோழி
மதிமருள் வாண்முகம் விளங்கப்
புதுநலம் ஏர்தரப் பூண்கநின் தேரே."

*தோழி, தலைவியது ஆற்றாமை கூறித் தலைவனை வரைவு கடாயது.*

1. பொன்மலை – பொன் விளையும் மேலைத்திசை மலை. சுடர் – ஞாயிறு. புலம்பிய – தனிமையுற்ற. 2. ஏர்தர – தோன்ற. 3. நீவி – கைவிட்டு. 5. எக்கர் – மணல் மேடு. இறைகொள்ளும் – தங்கும். 6. அணிச்சிறை – அழகிய சிறகு. குருகு – நாரையினம். 8. உள்ளான்ற – உள்ளுக்குள்ளே அடங்கிய. 10. நீர்நீவி – நீருக்கு மேலே உயர்ந்து. கஞன்ற – மலர்ந்த. 12. அலர்பதம் – மலரும் பருவத்தில். ஒல்க – அசைய. 13. மம்மர் – நோய். இணையும் – வருந்தும். 14. நீள்நகர் – பெரிய வீடு. நிறையாற்றாள் – வாழ்க்கையைப் பொறாது. நினையுநள் – நினைந்து. 19. பைதல் – நோய்மிக்க. 20. அலமரல் – செய்வதறியாது தடுமாறுதல். 21. மருள் – ஒக்கும். 22. ஏர்தர – பெருக.

# 10

## வரைந்தருள் புரிக

களவொழுக்க இன்பத்தில் ஊறிப்போன உள்ளம் உடையானோர் இளைஞன், தன் காதலியை ஊர் அறிய மணந்து வாழும் மனையற வாழ்வினை மேற்கொள்ளக் காலம் கடத்தி வந்தான். களவொழுக்க இன்பம் ஏனைய இன்பங்கள் அனைத்தினும் பேரின்பமாம் என்பதை அவளும் உணர்ந்திருந்தாளாயினும், அக் களவின்பம் காணத் தான் படும் துன்பங்களைக் கண்டு கலங்கினாள். காதலின்ப வெள்ளத்தில் கரையேற விரும்பாது களித்து வாழத் துடித்தது அவள் உள்ளமும். அது பெற அவள் எத்தனை இடையூறுகளை வேண்டுமாயினும் தாங்கிக் கொள்ளத் தயங்கவில்லை. எத்தனை இரவு வேண்டுமாயினும் உறக்கம் ஒழிந்து காத்திருக்கக் கலங்கவில்லை. ஆனால் எத்தனை இடையூறுகளைத் தாங்கிக் கொண்டும் அக் காதல் இன்பத்தைப் பெற மாட்டாது போவதால் அவள் பெரும் துயர் உற்றாள். அத்துயர் நினைவு தோன்றியதுமே அவள் கண்களில் நீர்

நிறைந்து விடும். ஆனால், கண்ணில் நீர் சுரக்கக் காணின், தாய் தன் களவொழுக்கத்தைக் கண்டு கொள்வளே, கடிந்து கட்டுக் காவல்களை ஏற்படுத்தி விடுவளே என்ற அச்சம் எழுவதால் கண்ணீர் கணப் பொழுதில் கசிந்து உதிர்ந்து விடும். உள்ளுக்குள் உருகுவள். இவ்வாறு பலரும் அறியப் புலம்பவும் மாட்டாது, புலம்பாதிருக்கவும் மாட்டாது தடுமாறிய அவள் அறிவு ஆற்றொணாத் துயர் கொண்டது. அதனால் அவள் புறநலனும் பாழுற்றது. எளிதிற் கழலாவாறு இறுகச் செறித்த கைவளைகள் தாமே கழன்று போகுமாறு தோள்கள் மெலிந்து போயின; அதனால் அவை பண்டு அணிந்திருந்த அணிகளைத் தாங்க மாட்டாது தளர்ந்தன. அத்தளர்ச்சி மிகுதியால் மூங்கிலை நிகர்த்தன அவள் தோள்கள் எனக் கண்டோர் பாராட்டிய பெருமையினை அவை இழந்தன. அம்மட்டோ! பிறைமதிபோல் பேரொளி வீசிய நெற்றி பசலை படர்ந்து பாழுற்றது.

அப் பெண்ணின் இந்நலக் கேட்டினைக் கண்ணுற்றாள் அவள் உயிர்த் தோழி. அவர் காதல் வாழப் பெருந்துணை புரிந்தவள் அவள்; காதலித்த காரிகையைக் கண்டு பேரின்பம் பெற இவ்விளைஞனின் உள்ளம் துடித்த துடிப்பையும், எத்தனையோ இடையூறுகளைக் கடந்து வந்து அவனுக்காகக் காத்திருந்து, அவனுக்கு இன்பம் அளித்த அவள் அன்பின் பெருமையும் அறிந்தவள் அவள். அதனால், இவள் காதலைப் பெற அன்று அவ்வளவு விரைவு காட்டிய அவன், அவனுக்காக இரவென்றும் பகலென்றுமெண்ணாது, அவன் கூறும் இடங்களுக் கெல்லாம் சென்று காத்துக் கிடந்து காதல் இன்பம் தந்த

இவளை, இன்று இவ்வாறு கலங்கப் பண்ணுகின்றனனே என அவன்பால் சினம் கொண்டாள். அவனைக் கண்டு, அவனுக்கு அறிவுரை கூறி, வரைவொடு வரச்செய்தல் வேண்டும் எனத் துணிந்தாள்.

அத் துணிவோடே அவனைத் தேடிச் சென்றாள். தன்னூர்க் கடற்கரையில் நின்றவாறே, தும்பி முதலாம் தேன் உண்ணும் வண்டுகள் சுற்றிச் சுற்றிப் பறந்து பேரொலி செய்ய மலர்ந்த ஞாழல், புன்னை, தாழை, செருந்தி முதலாம் பன்னிறமும் பன்மணமும் வாய்ந்த மலர்கள் உதிர்ந்து பரவிக் கிடக்கும் மணல் மேடுகள், வெற்றிச் சிறப்பு வாய்ந்த சக்கரப் படை விளங்கும் கையினை உடையோனாய திருமால், மார்பில் பல வண்ண மலர்களால் ஆன வனப்பு மிக்க மாலை அணிந்து கிடப்பதுபோல் தோன்றும் காட்சி இன்பத்தால் கருத்திழந்து நிற்பவனைக் கண்டாள். கடற்கரை மணலும் மலர் மாலை அணிந்து மகிழ்வது போலும் இந்நாளில் இவன் மட்டும் மணமாலை அணியும் மனத்துணிவு இன்றி மடங்கிக் கிடக்கின்றனனே; கடற்கரை மணலில் உதிர்ந்து பரவிக் கிடக்கும் மலர்க்காட்சி, மாலின் மார்பு மாலையை நினைவூட்ட நினைந்து மகிழும் இவன் உள்ளத்தில், தன் மண மாலை பற்றிய நினைவு எழவில்லை போலும்; என்னே இவன் அன்பு!" என எண்ணியவாறே அவனை அணுகினாள்.

அணுகி, அவன் காதலி படும் கடுந்துயரை எடுத்துரைத்து விட்டு, "அன்ப! என் தோழியைக் கண்டு முதன் முதலாகக் காதல் கொண்ட அன்று, அவள்தரும் இன்பத்தை ஆரத் துய்க்கும் வேட்கை மிகுதியால்,

அவளைக் கொட்டிய சுறா மீன்கள் வாழும் கழிகளால் சூழப்பெற்ற வெண் மணல் மேட்டிற்கு வருமாறு பணித்தனை; இடையீடு பட்டுப் பட்டு இன்ப நுகர்வின்றி வருந்திய உன் வருத்தத்தினை உணர்ந்த அவள், உன் வாட்டத்தைப் போக்க வேண்டும் எனும் ஆர்வமிகுதியால், நீ குறித்த இடம் கொடுமை மலிந்த இடமாம் என்பதையும் எண்ணிப் பாராமல், வந்து, உனக்குப் பேரின்பம் தந்தாள். அன்ப! அதற்குப் பயனோ, இன்று அவள் கண்கள் நீர் சோரக் கலங்கிக் கடுந்துயர் உற்று அவள் ஆங்கிருந்து வருந்த, நீ அவளைப் பிரிந்து மறந்து வந்து ஈங்கு நீ வாழ்வது?

“மேற் கொண்டிருப்பது களவொழுக்கமாதலாலும், அக்கள வொழுக்கத்தினை ஊராரோ, உறவினரோ உணர்ந்து கொண்டால் காதல் உறவிற்குக் களங்கம் உண்டாம் ஆதலாலும், நினைத்த போதெல்லாம் வருவதோ, நினைத்த இடத்திற்கெல்லாம் வருவதோ இயலாது என்பதை உணர்ந்து, நின் தேர் வருகையை எதிர்நோக்கிக் கானற் சோலையில் நாள் கணக்காகக் காத்துக் கிடந்து உனக்குக் காதல் இன்பத்தை அளித்ததன் பயனோ, அவள் இன்று காதல் இன்பம் பெற மாட்டாமையால் அறிவும் மயங்கிப் போகவும் கைவளை கழன்று போகவும் கண்டு கலங்குமாறு அவளைக் கைவிட்டு வந்து, ஈங்கு நீ இன்புற்று வாழ்வது?

“காட்சி இன்பம் வாய்ந்த இக் கடற்கரைக் காட்சிகளைப் பகற் காலத்தில் வந்து பார்க்கவும் அஞ்சும் மெல்லியளாய அவள், நீ குறிவைத்து விட்டாய் என்பதை அறிந்தவுடனே, எவரும் வழங்கா இரவின் இடையாமம்

எனவும் எண்ணாது வந்து, நீ குறித்த இடத்தில் நின்னை எதிர்நோக்கியிருந்து நினக்கு இன்பம் அளித்ததன் பயனோ, மூங்கிலை நிகர்த்த அவள் தோள்கள் மெலிந்து, இயல்பாக அணியும் அணிகளையும் தாங்கிக் கொள்ள மாட்டாது தளர்ந்து போகவும், அவள் நுதல் ஒளி இழந்து கெடவும் அவள் அங்கே தனியே யிருந்து வருந்த, நீ ஈங்கு வந்து மகிழ்ந்து வாழ்வது?

"அன்ப! நின் செயல் அறமாகாது; கடற்கரை மணல் மேட்டையும், அதன்மீது படிந்து கிடக்கும் பல்வகை மலர்களையும் பார்த்துப் பேரின்ப நிலையுற்ற நீ, இக்காட்சி யின்பத்தையும் காண்பாயாக. தன் கரைகளில் வளர்ந்து தனக்குப் பேரழகு தரும் இவ் விடும்பங் கொடிகள், ஞாயிற்றின் கொடிய கதிர்களால் கருகி அழிந்து விடுமோ என அஞ்சிய இக்கடல் நீர், தன் அலைக் கைகளால் தன்கண் நீரை வாரி இறைத்து வாழ்விக்கச் செய்யும் வனப்பு மிக்க இக்காட்சியைக் காண். இதைக் காணும் உன் உள்ளத்தில், உன்னை அடைந்து, உன்னையும் பேரின்பக் கடலில் ஆழ்த்தித் தானும் பெருமை யடைய வேண்டியவளாய அவள் காதற் கனலால் கருகி விடாவாறு, உன் அன்பெனும் அருள் மழையை ஆரப் பொழிந்து அவளைக் காத்தல் உன் கடமையாம் என்ற உணர்வு எழவில்லையோ? அன்ப! கைவளை கழன்று போமாறு காதல் நோய் அளித்த நீயே, அந்நோயைப் போக்குதலும் வேண்டும்; அதைப் போக்கும் ஆற்றல் உன் ஒருவனுக்கே உண்டு; அன்ப! அதை நீ விரைந்து மேற்கொள்ள வேண்டும்!" எனப் பலப்பல கூறி வரைவு கடாயினாள்.

"தெரி இணர் ஞாழலும், தேம்கமழ் புன்னையும்
புரிஅவிழ்பூவின் கைதையும், செருந்தியும்,
விரிஞிமிறு இமிர்ந்து ஆர்ப்ப இருந்தும்பி இயைபு ஊதச்
செருமிகு நேமியான் தார்போலப் பெருங்கடல்
வரிமணல்வாய் சூழும் வயங்கு நீர்த்தண் சேர்ப்ப!

கொடுங்கழி வளைஇய குன்றுபோல் வால் எக்கர்
நடுங்குநோய் தீர நின்குறி வாய்த்தாள் என்பதோ,
கடும்பனி அறல் இகு கயலேர்கண் பனி மல்க
இடும்பையோடு இனைபு ஏங்க இவளை நீ துறந்ததை?

குறி இன்றிப் பன்னாள் நின் கடுந்திண்தேர் வருபதம் கண்டு
எறிதிரை இமிழ்கானல் எதிர் கொண்டாள் என்பதோ,
அறிவு அஞர்உழந்து ஏங்கி ஆய்நலம் வறிதாகச்
செறிவளை தோள் ஊற இவளை நீ துறந்ததை?

காண்வர இயன்ற இக்கவின்பெறு பனித்துறை
யாமத்து வந்து குறிவாய்த்தாள் என்பதோ,
வேய்நலம் இழந்ததோள் விளங்கிழை பொறை யாற்றான்
வாள் நுதல் பசப்பூர இவளை நீ துறந்ததை?

அதனால்,
இறைவளை நெகிழ்த்த எவ்வநோய் இவள்தீர
உரவுக்கதிர் தெறும் என; ஓங்குதிரை விரைபு, தன்
கரை அமல் அடும்பு அளித்தா அங்கு
உரவு நீர்ச் சேர்ப்ப! அருளினை அளியே."

*தோழி, தலைவியது ஆற்றாமை கூறித் தலைவனை வரைவு கடாயது.*

1. தெரி — விளங்குகின்ற; இணர் — கொத்து; தேம் — தேன். 2. புரி அவிழ் — இதழ்விரியும்; கைதை — தாழை. 3. ஞிமிறு — ஒருவகைத் தேன் வண்டு. 4. செருமிகு — போர் வல்ல. நேமியான் — சக்கரப்படை ஏந்திய திருமால். 8. கடும் பனி — விரைந்து சுரக்கும் கண்ணீர்; அறல்இடு — கசிய. 9. இனைபு — வருந்தி. 12. அஞர் உழந்து — துன்பம் உற்று, வறிதாக — குறைய. 13. ஊர — கழல. 14. இயன்ற — பண்ணைப்பட்ட; பனித்துறை — குளிர்ந்த துறை; 17. வாள் — ஒளிவீசும். 19. எவ்வநோய் — காமநோய், 20. உரவுக் கதிர் — கொடிய ஞாயிறு; தெறும் — சுட்டுவிடும். விரைபு — விரைந்து. அமல் — நெருங்க வளர்ந்திருக்கும்.

# 11

## கனவிலும் நனவிலும் வருவன்

**கா**தல் நோயால் வருந்தினாள் ஒரு காரிகை; அவள் உள்ளத்தில் காதற் கனலை மூட்டிவிட்ட இளைஞன், சின்னாட்களாக வந்திலன்; அதனால் அவள் உள்நோய் மிகுந்தது. புற அழகும் அழிந்தது அவள் அகப்புற நலக்கேட்டினைக் கண்ட அவள் தோழி, அக்கேட்டிற்குக் காரணமாய அவ்விளைஞனைப் பெரிதும் நொந்து கொண்டாள். ஏதும் அறியா இளமைப் பருவம் உவடயளாய இவளை இவ்வாறு வருந்த விடுத்து, அவன் அவனூரில் அமைதியாக வாழ்கின்றனனே, என்னே அவன் அன்பு எனக் கடிந்து கொண்டாள். இரவு கழிந்தது; பொழுது புலர்ந்தது. காதல் இன்பம் பெற மாட்டாது கலங்கி இரவெல்லாம் கண் விழித்திருந்து எவ்வாறு துயர் உற்றனளோ? அவள் நலம் எத்துணை கெட்டுவிட்டதோ என்ற கவலை தோய்ந்த உள்ளத்தோடு எழுந்து அவள்பால் சென்றாள். ஆங்கு அவள் கண்ட அப்பெண்ணின் தோற்றம் அவளுக்குப் பெரு வியப்பளித்தது. எதிர்

நோக்கியதற்கு மாறாக, அப் பெண் என்றுமில்லாப் பேரழகு பெற்று விளங்கினாள். பண்டைப் பேரழகோடு புதுநலமும் பெற்றுப் பொலிவுற்றுத் தோன்றினாள். அவள் தோற்றத்தில் கண்ட இம்மாற்றம் தோழியை வியப்புக் குள்ளாக்கிற்று. அம் மாற்றத்திற்காம் காரணத்தை அறிய அவள் உள்ளம் துடித்தது. காணாத எதையேனும் கண்டு விட்டனளோ எனவும் எண்ணினாள். அவளை அணுகினாள். "ஏடி பெண்ணே! இம் மாற்றத்திற்குக் காரணம் யாது? நேற்றுவரை யில்லா அழகு, இன்று உனக்கு எங்கிருந்து வந்தது? காணாது கலங்கிய காதலரைக் காணும் பேறு பெற்ற காரிகையர்பால் காணலாம் பேரழகு பெற்று விளங்குகின்றனையே! நீயும் நின் காதலனைக் கண்டாயோ? வாராது வருந்திய அவன் வந்து அருள் பண்ணினனோ? அவன்பால் அப் பண்பைக் காணல் இயலாதே! காதல் நோயால் கடுந்துயர் கொள்ளும் கன்னியரைக் கண்ணீர் வெள்ளத்தில் ஆழ்த்துவது அன்றோ அவன் நாட்டு வழக்கம். நாரை போலும் அவன் நாட்டுப் பறவைகளும் அத்தகைய கொடுமையுடையவாகுமே! வாடைக் காற்று வந்து அசைக்க அசையும் தாழையின் தாழ்ந்த கிளைகளில் ஊசல் ஆடல்போல் இருந்து மகிழும் நாரைகள், அம் மகிழ்ச்சியால் பிறர் துயரை அறிய மாட்டாது, காதலரைப் பிரிந்திருப்பார் அவரை நினைந்து நள்ளிரவிலும் துயில் இழந்து வருந்தியிருப்பரே; அவர் வருத்தத்தை நம் குரல் ஒலி மேலும் வளர்க்குமே என எண்ணி இரக்கம் கொள்ளாது, அந்நள்ளிரவிலும் ஓயாது ஒலிக்கும். அத்தகைய கொடுமை மிக்க நாட்டில் பிறந்த அவன் நம்பால் அருள் கொள்வது இயலாதே! பிறர் துயர் காணும்

பேரருள் உள்ளம் அவனுக்கு உண்டாகாதே! அவன், ஈண்டு இந்நிலையில் வந்திரான்; அங்ஙனமாகவும், அவன் வந்து அன்பு காட்டி அருள் பாலிக்கப் பெற்றாய்போல் பேரழகு பெற்று விளங்குகின்றனையே! இப் புதுமைக்காம் காரணம் யாதோ?" என வினவினாள்.

தன் துயர்நிலை உணர்ந்து வினாவிய தோழியை அப் பெண் அன்போடு அணைத்து அருகில் இருத்திக் கொண்டு, "தோழி! நீ நினைப்பது போலவே, காதலன், நான் காண இவண் வந்திலன். ஆனால் நனவில், நண்பகலில் நாம் அறிய வாராத அவன், இன்று இரவு என் கனவில் வந்தான்! நனவில் காணப் பெறாத காதலனைக் கனவிற் கண்டதும் களி கூர்ந்தது என் உள்ளம். காதலனைக் கண்டதும் அவன் முன் சென்று நின்று, 'அன்ப! என்னை முதன்முதலாகக் கண்ட அன்று, 'அன்பே! என் ஆருயிரே! உன்னைப் பிரியேன்! பிரிந்தால் பெருந்துயர் உறுவேன்! அத் துன்பத்தைத் தாங்கிக் கொண்டு உயிர் வாழ மாட்டேன்!" என்று உறுதி உரைத்த நீ, இன்று மறந்து விட்டாய். ஆகவே, அன்று கவர்ந்து கொண்ட என் நலனை என்பால் ஒப்புடைத்துச் செல்,' எனக் கூறி வழி மறித்து நின்று வழக்காடினேன் போலவும், என் துயர் நிலை கண்ட அவன், அந்நிலையே, அவனைக் காணாமையால் என்னை விட்டுக் கழிந்து போன அழகெல்லாம் மீண்டு வந்து சேர அடையுமாறு என்னை ஆரத் தழுவிக்கொண்டு, 'பெண்ணே! இனி நின்னை இமைப் பொழுதும் பிரியேன்; கலக்கத்தைக் கைவிடு!' எனக் கூறி அருள் செய்வான் போலவும், காதலனைக் காணாமுன் கலக்கம் என்பதையே அறியாமையால் கட்டுக்கடங்காது திரிந்து தன் உரிமை நிலைகெட்டு

அழிந்த உள்ளம் உடையோளாய நான், அவனைக் கண்டதும், வாய்விட்டு அழுது, அவனை வழி மறித்து, 'ஏடா! என்னை மறந்ததோடு நில்லாமல், என் மார்பிற் கிடந்து துயின்ற மகிழ்ச்சியையும் மறந்து விட்டனையோ?' எனக் கேட்டுப் புலம்பினேன் போலவும், அதுகேட்ட அவன், 'கண்ணே! காதலி! என்னால் நீ நெடிது வருந்தினை; வலையில் அகப்பட்டு வருந்தும் மயில் போல், தாயும் தந்தையும் அமைத்த காவலால் கட்டுண்டு பெரிதும் துன்புற்றனை; அத்துன்பமெல்லாம் என்னால் வந்ததன்றோ? நின் வருத்தத்திற்குக் காரணமாய நான் அது தீர்க்க நினையாது, நின்னை மேலும் வருத்தி விட்டேன். என் பிழையைப் பொறுத்துக் கொள்வாயாக!' எனக் கூறியவாறே, அவன் தலை என் கால்களிற் படியும் வண்ணம் வணங்கியதைப் போலவும், அவன் அவ்வாறு வணங்கி நிற்கவும், 'பிழை புரிந்து பெருந்துயர் அளித்துவிட்டு, இப்போது வந்து வணங்கி நிற்கின்றனனே, என்னே இவன் கொடுமை!' என்ற எண்ணமே ஆட்சி செய்திருந்தமையால், அவன் மார்பில் கிடந்து மணக்கும் மாலையையே கோலாகக் கொண்டு அவனை நையப் புடைப்பேன் போலவும், அது கண்ட அவன், 'பெண்ணே! என்னை இவ்வாறு வருத்த நான் செய்த பிழைதான் யாதோ? பிழை புரியாத ஒருவனைப் பிடித்து வருத்தும் உன் அறியாமையை என்னென்பேன்!' எனக் கூறித் தப்பிப் போகப் பார்ப்பான் போலவும் கனாக் கண்டேன்.

"தோழி! நான் கண்டது கனவே யாயினும், அவனை அக் கனவில் தெளிவாகக் கண்டேன். தோழி! கனவு நனவாகும் என நல்லோர் கூறக் கேட்டுளேன் ஆதலின், கனவில் வந்த காதலன், நாம் அறிய நனவிலும் வருவன்

*என நம்பினேன். அந்நம்பிக்கையே, அழிந்த என் அழகை யெல்லாம் என்பால் கொண்டு வந்து சேர்த்து விட்டது. அப் பண்டை அழகோடு, இவ்வுள்ள நிறைவால் உண்டாய புதுப் பொலிவும் சேர்ந்து கொள்ளவே, உன் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் உருவு நலம் பெற்று விட்டேன் நான்!" எனக் கூறினாள்.*

"தோள் துறந்து அருளாதவர் போல், நின்று
வாடை தூக்க வணங்கிய தாழை
ஆடு கோட்டிருந்த அசைநடை நாரை
நளி இருங்கங்குல், நந்துயர் அறியாது
அளி இன்று பிணிஇன்று விளியாது நரலும்
கானலம் சேர்ப்பனைக் கண்டாய் போலப்
புதுவது கவினினை' என்றியாயின்,
நனவின் வாராநயன் இலாளனைக்
கனவிற் கண்டு யான் செய்தது கேள் இனி;

அலந்தாங்கு அமையலென் என்றானைப் பற்றி என்
நலம்தாரா யோஎனத் தொடுப்பேன் போலவும்,
கலந்து ஆங்கே என் கவின்பெற முயங்கிப்
புலம்பல் ஓம்பு என அளிப்பான் போலவும்,

முலையிடைத் துயிலும் மறந்தீத் தோய்என
நிலையழி நெஞ்சத்தேன் அழுவேன் போலவும்
வலையுறு மயிலின் வருந்தினை பெரிது எனத்
தலையுறமுன் அடிப் பணிவான் போலவும்,
கோதை கோலா இறைஞ்சி நின்ற
ஊதையஞ் சேர்ப்பனை அலைப்பேன் போலவும்,

யாது என் பிழைப்பு என நடுங்கி ஆங்கே
பேதையைப் பெரிது எனத் தெளிப்பான் போலவும்,
ஆங்கு,
கனவினால் கண்டேன் தோழி! காண்தகக்
கனவில் வந்த கானலம் சேர்ப்பன்
நனவில் வருதலும் உண்டு என
அனைவரை நின்றது என் அரும்பெறல் உயிரே."

*வரைவிடை ஆற்றாது வருந்திய தலைவியது கவின் கண்டு வினாவிய தோழிக்கு, அத் தலைவி தான் கண்ட கனவு நிலை உரைத்தது.*

2. தூக்க – அசைக்க; வணங்கிய – வளைந்த; 5. அளி – அருள்; விளியாது – ஓயாது. நரலும் – கூவும். 10. அலந்தாங்கு – பிரிந்தவிடத்து; அமையலென் – வாழேன். 11. தொடுப்பேன் – வாதாடுவேன். 13. புலம்பல் ஓம்பு – வருந்தாதே. மறந்தீத்தோய் – மறந்தாய். 18. இறைஞ்சி – வணங்கி. 19. ஊதை – கடற்காற்று வீசும். அலைப்பேன் – அடிப்பேன். அனைவரை – அந்நம்பிக்கையின் எல்லையில்.

12

# எம்போல் இனைதியோ?

**மா**லைக் காலம் அது; பகற் பொழுதிற்குக் காரண மாய்ப் பேரொளி வீசிய வெப்பம் மிக்க கதிர்களைத் தன்பால் ஒடுங்கிக் கொண்டு ஞாயிறு மறைந்துவிட்டான். பல்லூழிக் காலமாகப் பயின்று வந்த உலகியல் முறை யெல்லாம் தடுமாறிப் போக, உலகம் ஒடுங்கும் ஊழி முடிவில், உலகில் வாழும் பல கோடி உயிர்கள் அனைத்தையும், அவ்வுயிர்களைப் படைத்த உலக முதல்வன் தன்பால் ஒடுக்கிக் கொள்வது போலும், அஞ் ஞாயிற்றின் மறைவை அடுத்துக், கண்ணும் கருத்தும் மயங்குதற்குக் காரணமாய கார் இருள் வந்து பரவிய நிகழ்ச்சி, தன் நாட்டில் நல்ல அறவாழ்வு நிலைபெறுமாறு நாடாண்டு வந்த அரசன் மாண்டு மறைந்து போனானாக, அவன் பின், தானும் அறமல்லனவே செய்து பழகித் தன்னாட்டையும் அறநெறியில் வாழவிட மாட்டாத அறிவுக் குறைபாடுடையனாய ஒரு கொடுங்கோலன் ஆட்சிப்பீடம் ஏறியதுபோல் தோன்றிற்று. பேரோளி வீசும்

*பகற் காலத்திற்கு விடையளித்துவிட்டுக் காரிருள் பரவும் இரவிற்கு வரவேற்புக் கூறுகின்ற அம் மாலைக் காலம் கொடுமையே உருவாய்க் காட்சி அளித்தது.*

*இடும்பைக்கோர் இருப்பிடமாய் விளங்கிய அம் மாலைக் காலத்தில் கடற்கரை நோக்கிச் சென்றாள் ஒரு காரிகை. காதல் இன்பம் வாய்க்கப் பெறாமையால் கலங்கித் துயர் உறுபவள் அவள். அவளைக் கண்டு, அவளுக்குக் காதல் இன்பத்தின் சுவையை உணர்த்தி, அவள் உள்ளத்தில் காதற் கனலை மூட்டிவிட்ட அவள் காதலனைப் பார்த்துப் பல நாட்களாயின. அவன் அவளைக் காண வருவது நின்று விட்டது. அதனால் செய்வதறியாது சிந்தை நொந்திருந்த அவளை, அம்மாலைக் காட்சிகள் மேலும் வருத்தின. அவ் வருத்தம் சிறிதே மறந்திருக்க விரும்பியே அவள் கடல் நோக்கிச் சென்றாள். ஆனால், அந்தோ! ஆங்கும் அவளுக்குத் துன்பமே காத்துக் கிடந்தது. கண்ணெதிர் கண்ட அக் கருங்கடல், ஓயாது அலையெழுப்பி ஓ என இரைந்து கொண்டிருந்தது. அவ்வலையொலி, அவளுக்குக் காதலனை இழந்து வருந்தும் காரிகையரின் அழுகை யொலியை நினைவூட்டுவதாய் இருந்தது. அவ்வளவே; கடலை நோக்கினாள். 'ஏ கடலே! ஓயாது எழுந்து ஒலித்து அழும் நின் அலை ஒலி, கடல் நாட்டுக் காவலனாய என் காதலன், நான் பற்றுக்கோடின்றிப் பாழுற்று வருந்தும் வண்ணம் வாராது போனானாக, அவனை நினைந்து நைந்துருகும் என் பொருட்டு இரங்கி நீ வருந்துவதால் எழுந்த அழுகை ஒலியோ? அல்லது, காதலன் கைவிட்டுப் போகக் கலங்கிக் கண்ணீர் சொரியும் என்போல், நீயும் காதலனை இழந்து கலங்குகின்றனையோ?" எனக் கேட்டுக் கலங்கினாள்.*

கடல் அவளுக்கு விடை அளிக்காது போகவே, கடற் காட்சியால் நம் கவலை மிகுவதல்லது குறையாது எனக் கண்டு, கடற்கரையை விடுத்து ஊர்ப் பொதுவிடத்தை அடைந்தாள். அவள் உள்ளம் ஆங்கும் அமைதி கண்டிலது. மன்றின் நடுவே, வானுற ஓங்கி வளர்ந்திருந்தது ஒரு பனை மரம். அதன் உச்சியில் ஓலைகளுக்கிடையே கூடுகட்டி வாழ்ந்திருந்த அன்றிற் பறவை ஒன்று உரத்த குரல் எடுத்து ஓயாது கூவிக் கொண்டிருந்தது. அதன் குரலொலி அடங்கியிருந்த அவள் காதல் நோயைக் கிளறி விட்டது. அதனால் அன்றிலை நோக்கி, "ஏ அன்றிலே! அன்பு காட்டி இன்பம் அளிக்கவல்ல என் காதலன் வந்து என்னை வாழ்விக்காமையால், நல்லதை அழித்து அல்லதை மேற்கொண்டு விட்டனனே என எண்ணி வருந்தும் என்பால் இரக்கம் கொண்டு வருந்திக் கூவுகின்றனையோ? அல்லது உயிருக்கினிய துணைவனாய் இருந்து வாழ வேண்டிய கணவன் பிரிந்து போய் விட்டானாக வருந்தி வாடும் என்னைப் போல், நீயும் உன்னைக் கைவிட்டுப் போன காதலனை நினைந்து வருந்துகின்றனையோ?" எனக் கேட்டு வாய் விட்டுப் புலம்பினாள்.

அவ்வாறு புலம்பியிருப்பவள் செவிகளில், ஆனிரைகளை ஓட்டிக் கொண்டு ஊர் புகும் ஆயர், அவற்றைத் தொடர்ந்து வருங்கால் எழுப்பும் குரலொலி வந்து புகுந்தது. இன்ப ஊற்றாய் ஒலித்த அக்குழலோசை அவளுக்குத் துன்பவுருவாய் வந்து ஒலித்தது. உள்ளம் துயர்க்குள்ளாகவே, அவள் வாய் அவளை அறியாதே, "ஆயர் குழலினின்றும் தோன்றித் துயர் தரும் குழலிசையே! நடுங்கும் பனியோடு இருளசூழத் தொடங்கி

விட்டது. இந் நிலையில் வரினும், காதலன் செய்த கொடுமைகள் எல்லாம் மறைந்து போய், அவன் புகழ் உயர்ந்து விடும். ஆனால், அந்தோ! அவன் வந்திலனே என வருந்தி அழும் என் பொருட்டு நீயும் வருந்தி அழுகின்றனையோ? அல்லது, இனியன அளித்த என்னை மறந்து வாழ்வானை நினைந்து வருந்தும் என்போல் நீயும், நின் மனக்கு இனியானை இழந்து வருந்துகின்றனையோ?" என வாய்விட்டுக் கேட்டு வருந்தினாள்.

இவ்வாறு தன் அகத்துறு துயரை அடக்கிக் கொள்ள மாட்டாது வாய்விட்டுப் புலம்புவதால், அவள் களவொழுக்கத்தை அறிந்து கொண்ட அவ்வூர் அம்பல் மகளிர், பலப்பல கூறிப் பழிக்கத் தலைப்பட்டனர். அப்பெண்ணின் உயிர்த்தோழியாய், அவள் மேற்கொண்ட களவொழுக்கத்திற்கு உற்ற துணை புரிந்த தோழி, அவள் துயர் நிலையைக் கண்டு கவலையுற்றாள்; காதல் நோயாலும், களவொழுக்கம் கண்டு ஊர்ப் பெண்டிர் உரைக்கும் அலராலும் அப்பெண்ணிற்கு யாது நேருமோ என அஞ்சினாள். மேலும், அவள் துயர் துடைக்கப் பெறாது மேலும் மேலும் பெருகுமேல் அவளால் அதைத் தாங்கிக் கொள்வது இயலாது; அவள் உயிரிழந்து போவள் என உணர்ந்து, உளம் நொந்து கொண்டாள். அதனால், தம் காதலர்பால் சென்று தம் காதல் நோயைக் கூறல் பெண்டிர்க்கு அழகாகாது என எண்ணி வாயடைத்துக் கிடப்பது கூடாது எனத் துணிந்தாள். அவனூர் அடைந்து அவனைக் கண்டாள். "அன்ப! இவள் காதல் நோய் தாங்கும் அளவில் நில்லாது பெருகி விட்டது. அவள் ஓயாது அழுது கொண்டே உள்ளாள். அதனால் அவள் காதல் ஊரார்க்குப் புலனாகி விட்டது. அவர்கள் அலர்

கூறி அவளைப் பழிக்கத் தலைப்பட்டு விட்டனர். அவளை இந்நிலையில் விட்டுவைத்தல் ஆகாது. மேலும், அன்ப! தன் இன்ப நுகர்விற்கு இனிய துணை புரிந்தோரைத் துயர் கொள்ளச் செய்வது அறிந்தோர்க்கு அழகாகாது. அவள் துயரை இன்றே போக்குதல் வேண்டும். அதைப் போக்க வல்லனும், போக்க வேண்டியவனும் நீயே, நீ அதைப் போக்கக் கருதாது வாளா கிடப்பின், உன்பால் அறக்குற்றம் வந்து அடையும். அக்குற்றம், ஒருவரைப் பற்றி வருத்தும் நோயின் திறத்தையும், அதைப் போக்கவல்ல மருந்தையும் அறிந்த மருத்துவன், அம்மருந்தை அறியேன் என மறைப்பதால், அம் மருத்துவனுக்கு உண்டாம் கேட்டினும் கொடிதாம். அக் கொடுமைக்குள்ளாவது ஆன்றோர் வழிவந்த உனக்கு ஆகாது. ஆகவே, அன்ப! இன்றே வந்து வரைந்து கொண்டு அவள் இன்னலை அகற்றுவாயாக!" என வேண்டிக் கொண்டாள்.

"தொல்லூழி தடுமாறித் தொகல் வேண்டும் பருவத்தால்
பல்வயின் உயிரெல்லாம் படைத்தான்கண் பெயர்ப்பான்
[போல்
எல்உறு தெறுகதிர் மடங்கித் தன் கதிர்மாய
நல்அற நெறி நிறீஇ உலகாண்ட அரசன்பின்
அல்லது மலைந்திருந்து அறநெறி நிறுக்கல்லா
மெல்லியான் பருவம்போல் மயங்கிருள் தலைவர
எல்லைக்கு வரம்பாய இடும்பைகூர் மருள் மாலை!

பாய்திரை பாடு ஓவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்!
'தூவறத் துறந்தனன் துறைவன்' என்று அவன்திறம்
நோய்தெற உழப்பார்கண் இமிழ்தியோ? எம்போலக்
காதல் செய்து அகன்றாரை உடையையோ நீ?

மன்றுஇரும் பெண்ணை மடல்சேர் அன்றில்!
நன்று அறை கொன்றனர் அவர் எனக் கலங்கிய
என்துயர் அறிந்தனை நரறியோ? எம்போல
இன்துணைப் பிரிந்தாரை உடையையோ நீ?
பனிஇருள் சூழ்தரப், பைதலம் சிறுகுழல்!
இனிவரின் உயரும்மன் பழி எனக் கலங்கிய
தனியவர் இடும்பை கண்டு இனைதியோ? எம்போல
இனியசெய்து அகன்றாரை உடையையோ நீ?

எனவாங்கு,
அழிந்து, அயல் அறிந்த எவ்வம் மேற்படப்
பெரும்பே துறுதல் களைமதி பெரும!
வருந்திய செல்லல் தீர்த்த திறன்அறி ஒருவன்
மருந்து அறை கோடலின் கொடிதே, யாழநின்
அருந்தியோர் நெஞ்சம் அறிந்துஉக விடினே."

*தலைவி ஆற்றாமையைத் தோழி தலைவற்குக் கூறியது.*

1. ஊழி – ஊழிக்காலம் முதலா வரும் உலகியல் நெறி; 3. எல் – பகற்பொழுது; உறு – விளங்குதற்குக் காரணமான. தெறுகதிர் – காயும் கதிர். 5. அல்லது – அறமல்லது; மலைந்து – மேற்கொண்டு. 6. மெல்லியான் – அறிவுக் குறைபாடுடையான்; 7. எல்லைக்கு – இரவிற்கு; இடும்பைகூர் – துன்பம் மிக்க. 8. பாடு – ஒலி; ஓவா – ஓயாது ஒலிக்கும். பனிக்கடல் – குளிர்ந்த கடலே. 9. தூ – பற்றுக்கோடு; 10. தெற – வருத்த; உழப்பார் – வருந்துவார். இமிழ்தியோ – ஒலிக்கின்றனையோ. 13. நன்று – நல்லதை; அறைகொன்றனர் – அழித்தனர். 14. நரறியோ – கூவுகின்றனையோ. 16. பைதல் – துயர்தரும்; 18. இனைதியோ – வருந்துதியோ. 21. அழிந்து – வருந்தி; எவ்வம் – நோய். 22. பெரும் பேதுறுதல் – மிகவும் பித்தேறுதல். 23. செல்லல் – நோய். 24. அறைகோடல் – மறைத்தல். 25. அருந்தியோர் – இன்பம் அளித்தவர். உக – கெட்டுப் போமாறு.

13

# தொடத் தொட நீங்கும்

அரசியல் உணர்வினைச் செல்வமும் கல்வியும் சிறக்கப் பெற்ற பெருங்குடி மக்களே யல்லாமல் அவர் கீழ்ப் பணிபுரியும் ஏவல் மகளிரும் பெற்றிருக்கும் பெருமை யுடையது ஒரு நாடு. அந்நாட்டு அரசன் நல்லனாயின், அவன் ஆளும் நாடு செல்வத்திற் சிறந்திருக்கும். நாடாளும் அரசன்பால் உலக மக்களை யெல்லாம் உறவாகக் கொண்டு ஓம்பும் உள்ளமும், உயிர்போகும் நிலை வந்துற்ற விடத்தும் உரைத்த சொல் பொய்த்துப் போகா உரமும், வேண்டியார் வேண்டாதார் எனப் பாராது அனைவர்க் கும் ஓர் அறம் வழங்கும் நடுவுநிலைமையும் ஆய அரசர்க்கு இன்றியமையா அருங்குணங்கள் என்றும் நீங்காதிருத்தல் வேண்டும். அவ்வரும் பெரும் குணங்களின் பிறப்பிடம் இவன் என, உலகோர் அவனைப் புகழ்ந்து பாராட்டுதல் வேண்டும். அத்தகையோன் ஆட்சி மேற்கொண்டக்கால், தன் நாட்டில் செல்வமும், சிறந்த ஒழுக்கமும் மேன்மேலும் ஓங்கவும், அவன் பொய் வழங்காதிருத்தலோடு, அப்பொய்

தன்னாட்டு மக்களிடத்தும் தலைக்காட்டா வண்ணம் அறவே ஒழித்தும் ஆளுவனாயின், அவன் நாட்டில் ஊழி ஊழிக் காலமளவும் உளவாகும் பெருஞ் செல்வம் பெருகும். அத்தகைய பேரரசு ஊழ்வினைப் பயத்தால் அழிந்து விட்டால், அந் நாட்டுப் பெருஞ் செல்வமும் அவனோடு அழிந்துவிடும் என்ற நல்லரசின் நெறிமுறை களையும், தன் நாட்டுக் குடிகளைப் பிறர் அழிக்கா வண்ணம் அரணாய் நின்று காத்து, அவர்க்கு அரணாய் காத்துக் கொள்ளும் நல்லரசன் நாற்படைக்கே பகைவர் களைப் பாழ் செய்யும் பேராற்றல் உண்டு. அப்படை நுழைய நுழையப், பகைவர் அவ்விடங்களை விட்டு அகன்று மறைந்து போவர் எனக் கோலின் பெருமையே கொற்றத்தின் பெருமையாம் எனப் பெரும் படை இயல்பையும், எல்லோரும் கற்றல் வேண்டும். அதிலும் இளமையிலேயே கற்றல் வேண்டும்; முதுமை வந்துற்றபின் அது முடியாது; அது முடியாமையால் கல்லாதே மூப்புற்ற ஒருவனுக்கு அகத்தில் தெளிவு உண்டாகாது; உள்ளத்தில் ஒளி உண்டாகாது; அகக் கண் ஒளி அற்றுப் போனால் புறக் கண்ணால் பெறலாகும் பயனும் இல்லாகும் எனக் கல்விச் சிறப்பையும் அவர்கள் — அப்பணிமகளிர் — தெளிவாக உணர்ந்திருந்தனர்.

அத்தகைய பேரறிவு வாய்ந்தாரைப் பணிமகளி ராகப் பெறும் பேறு பெற்றிருந்தாள் ஒருத்தி. அவள் கணவன் பொருளீட்டும் கடமை மேற்கொண்டு வெளிநாடு சென்றிருந்தான். சென்றவன் செல்லுங்கால் கூறிய கால வரையறையும் கடந்து போகவும் வாரானாகவே அப்பெண் நனிமிக வருந்தினாள். ஒருநாள் மாலை அவன் வருகையை எதிர்நோக்கி வீட்டின்

வாயிற்கண் வந்து நின்றாள். அந்தணர் அழல் ஓம்பிக் கொண்டிருந்தனர் ஒருபால்; கழிகளில் காலையில் மலர்ந்த நெய்தல் மலர்கள் கூம்பத் தொடங்கின; ஆனிரை பின்வரும் ஆயர்ஊதும் குழலோசை காற்றில் மிதந்து வந்து மெல்ல ஒலித்துக் கொண்டிருந்தது. கணவன் பிரியாதிருந்த காலத்தில் அவள் உள்ளத்தில் இன்பம் ஊற்றெடுத்துப் பாய உதவிய அந்நிகழ்ச்சிகள், அவன் அண்மையில் இல்லாமையால் இன்னல் தருவனவாய்த் தோன்றின. அவள் அகத்துயர் மிகுந்தது. அறிவு மயங்கிற்று; பணிப் பெண்கள் அருகில் நிற்கின்றனரே; தன் அகத்துயரை அவர் அறியக் காட்டிக் கொள்வது அழகல்லவே என எண்ணி அடங்கியிருப்பது அவளால் ஆகாது போயிற்று. "அந்தோ! அந்தணர் வளர்க்கும் இச் செந்தழல் காட்சி, என் அகத்தில் அடங்கியிருக்கும் காதற் கனலை மூட்டி விடுகிறதே! காலையில் மலர்ந்த கழி நெய்தல் இம்மாலை யில் கூம்புவதைக் காணும் என் அகமலரும், அவன் தந்த காதல் நோயால் கருகித் தன் கடமையை மறந்து அடங்கி ஒடுங்கி அழிகின்றதே! ஆயர் குழலோசை செவிவழிப் புகுந்து என் அகத்தே சென்று ஒலிக்க, அவ்வகக்கண் அவன் அன்பின்மை அறிந்து அழ, என் புறக்கண்களும் பூப்போலும் தம் பொலிவிழந்து போமாறு புலம்பத் தொடங்குகின்றனவே! அந்தோ! நான் என் செய்வேன்?" என வாய்விட்டுப் புலம்பினாள்.

மாலைக் காட்சிகளைக் கண்டு மகிழ்ந்து நின்ற அப்பணி மகளிரின் காதுகளில் அவள் புலம்பல் ஒலி சென்று புகுந்தது. நிறைந்த கதிர் பரப்பி நின்று காய்ந்த ஞாயிறு மறைய, அதனோடு பகற் பொழுதும் மறைந்து போகும் நிகழ்ச்சி, நாடாளும் நல்லரசன் இறந்து போக,

அவனோடு அந்நாட்டின் செல்வமும் நில்லாது அழிந்து போகும் நிகழ்ச்சியையும், உலக உயிர்கள் எல்லாம் தம் தொழில் மறந்து உளம் மடங்கி அடங்குமாறு இருள் பரவும் காட்சி, கல்லாது முதிர்ந்த முதியோன் உள்ளத்தில் அறிவொளி இழந்து போக ஆணவம் ஆட்சி புரியும் நிகழ்ச்சியையும் நினைவூட்ட, அந்நினைவால் தம்மை மறந்திருந்த அம் மகளிர், தம் தலைவியின் துயர் ஒலி கேட்டுத் துணுக்குற்று அவளை நோக்கினர். அவள் பொன்னிற மேனி பசலை படர்ந்து பாழுற்ற காட்சியைக் கண்டு கண்ணீர் சிந்தினர்.

அந்நிலையில் போன அவள் கணவனும் வந்து சேர்ந்தான். இனியும் அவள் அருகில் இருப்பது ஆகாது; அதற்குத் தேவையும் இல்லை என உணர்ந்து அவ்விடம் விட்டு அகன்றனர். ஆயினும், தலைவியின் துயர் நிலை கண்டு துடித்துக் கலங்கிய அவர் கண்கள், அவள் கணவன் வரப்பெற்றுக் களிக்கும் காட்சியையும் காணத் துடித்தன. அதனால் அவளும், அவள் கணவனும் காணாவாறு, மறைவான ஓர் இடத்தில் ஒளிந்திருந்து அவரை நோக்கினர்.

கணவனைக் கண்டவுடனே, அவள் கவலையும், கண்ணீரும் இருந்த இடம் தெரியாது மறைந்து போக, அவள் களிப்புற்றாள். அவன் கைப்பட்டவுடனே அவள் மேனியை மூடிக் கிடந்த பசலையும் அகன்று விட்டது. அக் காட்சி கண்டு அகமகிழ்ந்த அம்மகளிர், தலைவன் தொடத் தொடத் தலைவியின் பசலை அகன்று போன காட்சி, அறவழி நாடாளும் நல்லரசன் பெரும்படை நுழைய நுழையப் பகைவர் படை நில்லாது அழிந்து மறையும் காட்சியை மனக்கண் முன் காட்ட மகிழ்ந்தனர்.

*தாம் கண்டு மகிழ்ந்த அக்காட்சி நலனைத் தம்மொத்த பிற பணி மகளிர் பாலும் கூறி, அவரையும் மகிழ்ச்சியில் திளைக்கப் பண்ணினர்.*

"நயனும், வாய்மையும், நன்னர் நடுவும்
இவனில் தோன்றிய இவைஎன இரங்கப்
புரைதவ நாடிப் பொய்தடிந்து இனிது ஆண்ட
அரைசனோடு உடன்மாய்ந்த நல்லூழிச் செல்வம்போல்
நிரைகதிர்க் கனலி பாடொடு பகல்செலக்
கல்லாது முதிர்ந்தவன் கண்இலா நெஞ்சம்போல்
புல்இருள் பரந்தரூஉம் புலம்புகொள் மருள்மாலை

இம்மாலை
ஐயர் அவிர் அழல் எடுப்ப, அரோ என்
கையறு நெஞ்சம் கனன்று தீ மடுக்கும்;

இம்மாலை
இருங்கழி மாமலர் கூம்ப, அரோ, என்
அரும்படர் நெஞ்சம் அழிவொடு கூம்பும்;

இம்மாலை
கோவலர் தீங்குழல் இனைய, அரோ, என்
பூவெழில் உண்கண் புலம்புகொண்டு இனையும்;

எனவாங்கு,
படுசுடர் மாலையொடு பைதல் நோய் உழப்பாளைக்,
குடிபுறம் காத்துஓம்பும் செங்கோலான் வியன்தானை
விடுவழி விடுவழிச் சென்றாங்கு அவர்
தொடுவழித் தொடுவழி நீங்கின்றால் பசப்பே."

*பிரிவிடை ஆற்றாத தலைவியது ஆற்றாமை தலைவன் வர நீங்கினமை கண்டு வாயில்கள் தம்முள்ளே கூறியது.*

1. நயன் – கலந்து உறவாகக் கோடல். 2. இரங்க – புகழ. 3. புரை – உயர்வு. தவ – மேன்மேலும் மிக. நாடி – ஆளும் முறைகளை ஆராய்ந்து. தடிந்து – கெடுத்து. 4. நல்லூழிச் செல்வம் – நல்ல முறையால் வந்த செல்வம். 5. கனலி பாடொடு – ஞாயிற்றின் மறைவோடே. 6. கண் – ஈண்டு ஞானக்கண். 9. ஐயர் – அந்தணர். அவிர் – விளங்குகின்ற. அரோ – அசை. 10. கனன்று – கொதித்து. மடுக்கும் – கொளுத்தும். 15. இனைய – வருந்த. 18. பைதல் நோய் – காம நோய். 19. வியன்தானை – பெரியபடை. 20. விடு வழி – விட, போகவிட; சென்றாங்கு – பகைவர் படை அழிந்தாங்கு.

# 14

## ஊக்கினன் ஊசலை

எழுதா ஓவியம் போலும் எழில் உடையாள் ஓர் இளம் நங்கை கடற்றுறை நகர் ஒன்றில் வாழ்ந்திருந்தாள். அவள் தன்னைப் பார்க்க நேரும் ஆடவரைப் பார்த்த அளவிலேயே பித்தேறப் பண்ணும் பேரழகுடையவள். கருநீல மலர் இரண்டு இணையாக நின்று மலர்ந்தாற் போல் தோன்றும் அவள் கருவிழிகள் மருண்டு மருண்டு நோக்கும் மாண்புடையவாம். அதனால், மடமையும் இளமையும் வாய்ந்த பெண்மானின் விழிகளை வென்ற வீறுடையவாம். மழை மேகமும் விரும்புமாறு கருத்து நீண்ட கூந்தல்; கருங்கடல் நீர் அளிக்கும் வெண் முத்துக்களை வென்ற வெண்பற்கள் ஆகிய இவைபோலும் இயற்கை நலம் உடையாள்; தன் மெல்லிய தோள்களில் அணிந்திருந்த நல்லணிகள் அவள் செல்வ வாழ்விற்குச் சிறப்பளித்துச் சான்று பகர்ந்திருந்தன.

இவ்வாறு இயற்கை அழகும் செயற்கை நலமும் ஒருங்கே வாய்க்கப் பெற்று விளங்கிய அவள்பால்,

அக்கடல் நாட்டு ஆடவர் அனைவரினும் அறிவாலும் உருவாலும் அன்பாலும் ஆண்மையாலும் சிறந்துவிளங்கிய இளைஞன் ஒருவன் காதல் கொண்டான். அவளை இமைப்பொழுதும் பிரியாது வாழும் அவள் உயிர்த்தோழி யின் துணையால், அவள் உள்ளத்தில் இடம் பெற்றான். காதலால் கட்டுண்டு, அவர்கள் களிப்புக் கடலில் ஆழ்ந்து, தம்மை மறந்து மகிழ்ந்தனர்.

அன்று முதல் அவளுக்கு அவனே எல்லாம். பெற்ற தந்தையும், பேணி வளர்த்த தாயும், பெரிய சுற்றமும் அவளுக்கு அந்நிலையில் பொருளற்றவராயினர். அவனை இன்றி உயிர் வாழ்தல் அவளால் இயலாது. அவனை ஒருநாள் காணாதிருக்க நேரினும், அவள் கண் கலங்கத் தொடங்கினாள். அந்த அளவிற்கு அவர் காதல் வளர்ந்து விட்டது. ஆனால், அவன் அவள்போல் மனைவிக் குள்ளாகவே மடங்கியிருக்கத் தக்கவனல்லன். கடனாற்றப் பிறந்த காளைப் பருவம் உடையவனாதலின், கல்வி குறித்தும், பொருள் குறித்தும், காவல் குறித்தும் அவன் ஆற்ற வேண்டிய கடமைகள் கணக்கில. காதல் கொண்டு விட்டதனால் அக் கடமைகளைக் கைவிட்டு விடுதல் அவனால் இயலாது. அவற்றுள் யாதேனும் ஒன்று குறித்து அவன் அவ்வப்போது போய்விடுவதால், இடையிடையே ஒரு சில நாட்கள், அவளைக் காண வாராது போவதும் உண்டு. அவனைக் காண மாட்டாதிருப்பது ஒரு சில நாட்களேயாயினும், அச்சிறு பிரிவும், அவளுக்குப் பெரும் பிரிவுபோல் தோன்றிப் பெருந்துயர் அளிக்கும். அச்சிறு பிரிவையும் தாங்க மாட்டாது தளர்ந்து போவாள். அப்போதெல்லாம் தோழி எதை எதையோ கூறி, அவளை ஆற்றியிருக்கப் பண்ணுவாள். ஆனால் அது அத்துணை

எளிதில் ஆகிவிடுவதில்லை. அவள் கவலையை மாற்றத் தோழி கற்றும் கண்டும் பெற்ற தன் பேரறிவுத் திறனை யெல்லாம் பயன்படுத்த வேண்டியிருக்கும். அப்போதும் அவள் கவலை மாறாது.

ஒருமுறை யாதோ ஒரு கடமையை முன்னிட்டுச் சென்ற இளைஞன் நெடுநாட்களாகியும் வந்திலன். அவன் வாராமை கண்டு அவள் வருந்தினாள். அவள் வருத்தத்திற்குக் காதல் இன்பம் பெற மாட்டாமையே பெரிய காரணமாம். ஆயினும் அஃது ஒன்றே சிறந்த காரணமாகாது. "மணப்பருவம் வாய்க்கப்பெற்றவள் நான். அதனால் என்னை மணம் பேச எத்தனையோ பேர் வருவர். களவின்பக் குறைபாட்டினால் என் உடல் நலத்தில் உண்டாகியிருக்கும் குறைபாட்டினைக் கண்டு என் மணத்தை விரைவில் முடித்துவிடத் துடித்து நிற்கும் தாய், என் காதலை அறியாமையால், என்னை அவருள் யாருக்கேனும் மணம் முடித்துக் கொடுப்பதும் செய்து விடுவள். அந்நிலை உண்டாயின், என் காதல் என்னாம்? என் கற்பு என்னாவது? அந்நிலை நேர்வது காதலன் வரைவு முயற்சியை விரைந்து மேற்கொள்ளாமை யாலன்றோ? என் காதலுக்கோ, கற்பிற்கோ குறை நேரா வண்ணம் வரைந்து கொண்ட பின்னர் பிரிந்து போய் நெடிதுநாள் வராதிருப்பினும் பெருங்கேடின்றாம். ஆனால், அந்தோ! அவன் அது செய்திலனே!" என்ற எண்ணத் தொகுப்பால் எழுந்த கவலையே அவளைப் பெரிதும் வருத்திற்று.

அப் பெண்ணின் மனநிலையை அறிந்தவள் தோழி. அதனால், 'வரைவு முயற்சியினை விரைந்து மேற்கொண்டிலனே! ஒருகால் வரையாதே இருந்து

விடுவனோ?'' என அஞ்சியிருப்பாளை அணுகிப், “பெண்ணே! நீ நினைப்பது போல் நிகழ்ந்து விடாது. நம் காதலர் அத்துணைக் கொடியவர் அல்லர். மேலும் பிரிந்துபோய் மறந்து வாழ்வதால் நமக்குண்டாம் துயர்க் கொடுமையை அறியாதவரும் அல்லர். நின்பால் பேரன்பு கொண்டுள்ளார் அவர். பிரிவால் உளவாகும் பெருந் துயரை அறிந்தவர். அவர் அத்தகையர் என்பதை முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சியொன்றால் நான் அறிந்துளேன். உன் மனம் காதல் துயரில் ஆழ்ந்து போயிருப்பதால் அந் நிகழ்ச்சியை மறந்து விட்டது போலும்.

“பெண்ணே! முன்னொரு நாள், இன்றேபோல், நம் காதலர் நாள்தோறும் தவறாது வரும் வழக்கத்திற்கு மாறாக வாராது நின்று விட்டார். அவ்வொரு நாள் பிரிவையும் உன்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. நீ மிகவும் வருந்தி விட்டாய். அம்மட்டோ! அவன் அன்பையும் ஐயுறத் தொடங்கினாய். அணி விளங்கும் உன் தோளழகு ஒன்றிற்கே தன் உள்ளத்தைப் பறிகொடுத்து உன்மீது காதல் கொண்ட அவர், அன்று நம்முன் காட்சி அளித்த கடல் தெய்வத்தைக் காட்டிப் ‘பெண்ணே! உன்பால் பேரன்பு கொண்டேன். உன்னை இனி ஒரு நாளும் மறவேன்; ஒருபொழுதும் பிரியேன்!’ என ஆணையிட்டுக் கூறிய வாய்ச் சொற்களையும் வழுவ விட்டனரோ என எண்ணி வருந்தினை. உடன் இருந்து, உன் துயர்க் கொடுமையினைக் கண்ணுற்ற நான், அத் துயரை நீ சிறிதே மறந்திருக்குமாறு, உன்னை அழைத்துக் கொண்டு, கானற்சோலைக்குச் சென்றேன்.

“ஆங்கே, தம் இன மீன்களையே கொன்று தின்று நெடிது நாள் உயிர் வாழ்ந்து உரம்பட்ட உடல் வாய்ந்த

சுறா மீன்கள் உறுதி வாய்ந்த கொம்புகள் சிலவற்றை ஒன்றாகக் கோத்துப் பண்ணிய பலகையை, யாழோசை எழுந்தாற்போல் ஓயாது ஒலிக்கும் வண்டுகள் சுற்றிச் சுற்றி வந்து பறக்கும் வண்ணம் மடல் விரியும் மலர்களை நிறையக் கொண்ட தாழை மரத்தின் விழுதுகளால் திரித்துக் கொண்ட கயிற்றால் கட்டிப் புன்னை மரக்கிளை யில் மாட்டி, ஓர் ஊசல் ஆக்கினேன். உறுதி உடையதாக ஆக்கி அவ்வூசல் ஒப்பற்ற அழகும் உடையதாதல் வேண்டும் என்ற ஆசை எழவே, கழிகளில் மலர்ந்து மணம் நாறிய நெய்தல் மலர்களைப் பறித்து நீண்ட நாரில் தொடுத்து, அம்மாலையை ஊசற் கயிற்றில் சுற்றிக் கவின் செய்தேன். பின்னர், அவ்வாறு வன்மையும் வனப்பும் உடையதாக ஆக்கிய ஊசலில் உன்னை ஏற்றிவிட்டுப், ‘பெண்ணே! உன் தோளின்பத்தைத் துறந்து வாராதவன் பண்புரைக்கும் பாக்கள் ஒரு சிலவற்றை நீ பாடு. அப்பாட்டிற்கேற்ப, நான் ஊசலை ஊக்கியும் தாழ்த்தியும் ஆட்டுகின்றேன்,’ எனக் கூறி, ஆட்டத் தொடங்கினேன். நான் ஆட்டத் தொடங்கியதும் பாடத் தொடங்கிய நீ, ‘தோழி! காதலனைக் காணாமுன் காண்பவர் கண்களைப் பறிக்கும் பெருங்கவின் பெற்று விளங்கிய என் மேனி, இக் கானற் சோலையில், அதோ நம் முன் நிற்கும் ஞாழலின் மலர்போல் பசலை படர்ந்து ஒளி இழந்துபோமாறு நம்மை மறந்து கொடுமை செய்து விட்டான். ஆனால், தோழி! அவன் செய்த கொடுமை, அவன் நாட்டு உயிரினங் களுக்கும் ஒப்பவில்லை போலும். தோழி! அதோ பார், வெண்ணிலவின் ஒளி வீழ்ந்து சிதறிக் கிடப்பது போல் காட்சி அளிக்கும் அவ்வெண் மணல்மீது ஓயாது ஓடி ஓடி ஆடி மகிழும் அவன் நாட்டு நண்டுகள்,

தம் நாட்டுத் தலைவன் செய்த தகாத செயலுக்குத் தாமும் நாணினவை போல், தத்தம் வளைகளிற் சென்று புகுந்து கொள்வதை!' என்ற பொருள் அமைய ஆக்கிய ஒரு பாடலை அழகுறப் பாடினாய்.

"அப்பாட்டு முடிந்ததும், உன் வாய் மூடிக் கொண்டது. அப் பாட்டின் பொருள் உன் பிரிவுத் துயரை நினைவூட்டி விட்டது போலும். அந்நினைவால் ஊசல் ஆட்டத்தையும் மறந்து விட்டாய். பின்புறம் இருந்தவாறே, ஊசலை உயர உயர ஆட்டிக் கொண்டிருந்த நான், உன் பாட்டொலி அடங்கிப் போகவே, ஊசலை நிறுத்தி விட்டுப், 'பெண்ணே! காதலன் மாளாத் துயர் அளித்து விட்டான் என்பது உண்மையே எனினும், அதை மனத்திற் கொள்ளாது மற்றும் ஒரு பாட்டுப் பாடுவாயாக!' எனக் கேட்டுக் கொண்டேன். நீ என் வேண்டுகோளை மறுக்க மாட்டாமையால், 'தோழி!' என் தடந்தோள்கள் நம் மென்மையால் இயல்பாகவே பேரழகுடையவாம். அவ் வழகைத் தொய்யிற் குழம்பு கொண்டு கரும்பு வடிவாய் அன்று அவன் தீட்டிய கவின் மிகு கோலம் மிகுதிப்படுத்திக் காட்டிற்று. அந்தத் தோள்கள், இன்று தம் இயற்கை வளமும் செயற்கை நலமும் ஒருங்கே இழந்து நலிவுற்றுப் போமாறு நம்மைப் பிரிந்து போய் மறந்து வாழ்கிறான். தோழி! என் காதலன் இவ்வாறு கொடுமை செய்பவனே யாயினும், அவன் நாடு அக் கொடுமையை அறியாது. அவன் செய்யும் கொடுமை, அவன் நாட்டு உயிரினங்களுக்கும் ஆகாது. தோழி! அதோ, தன் துணையோடு கூடி இணை பிரியாதிருக்கும் அவன் நாட்டு அவ்வன்றிற் பறவைகளைப் பார்; ஒன்று கலந்து வாழும் காதல் இன்பத்தால் தம்மை மறந்து மகிழ்ந்து அகவ

வேண்டிய அவை, தங்கள் நாட்டுத் தலைவன் செய்த கொடுமையால், இப்போதே துயர் உற்றுக் கிடக்கும் இப்பெண்ணின் துயர், நம் குரல் ஒலியால் மேலும் மிகும், அக் கொடுமையை நாமும் செய்தல் அறமாகாது என எண்ணி, இரவெல்லாம் ஒலி அவிந்து வாய் மூடிக் கிடக்கும் வியப்பினைக் காண்!' என்ற பொருள் அமைந்த இன்னொரு பாடலைப் பாடினாய்.

"பெண்ணே! நீ பாடிய அவ்விரு பாக்களின் பொருளாலும் காதலன்பால் நீ கொண்டுள்ள சினத்தை உணர்ந்தேன். ஆனால், நீ அவனைச் சினக்கினும், அவன் நம்மால் சினத்தற்குரியனல்லன் என்பதை நான் அறிவேன். அவன் நம்மைப் பிரிவுத் துயரில் ஆழ்த்தி விட்டா னாயினும், அது, அவன் வேண்டுமென்றே செய்ததோ, நம்பால் அவன் கொண்டுள்ள காதல் குறைந்து விட்டதால் செய்ததோ அன்று. கடமையுணர்ச்சி மிக்க அவன் உள்ளத்தின் விளைவு அது. பெண்ணே! பகைவர்க் கும் கேடெண்ணாப் பண்புடையனாய அவன், தன் காதலிக்குக் கேடெண்ணுவனோ? எண்ணான் என அவன் இயல்பறிந்த நான் நீ அவனைப் பாடுங்கால், அவனுக்குக் கொடுமையேற்றிப் பழிக்கும் பாடல்களையே பாடக் கேட்டு வருந்துகிறேன். நீ அவன் புகழ் பாட வேண்டும் என விரும்புகிறது என் உள்ளம். அவன் பழியிலான் என்பதை உன் உள்ளம் உணர்ந்தால், நீ அவன் புகழ் பாடுவாய் என அறிந்தேன். அதனால், அவன் பழியற்றவன் என்பதை உனக்கு அறிவிக்க விரும்பினேன். ஆனால் அவன் செய்த குறையொன்றே உன் கண்முன் நிற்கும் இந்நிலையில், அதை உன் உள்ளம் ஏற்றுக் கொள்ளுமோ எனச் சிறிதே அஞ்சியதாலும், குறிப்பாகக்

கூறினாலும், உன் பேரறிவு அதன் உட்பொருளை உணர்ந்து கொள்ளும் என்ற துணிவாலும், அவன் பெருமையை, அவன் நாட்டு உயிரினங்கள் மீது ஏற்றிப் 'பெண்ணே! நம் காதலன் நாட்டுக் கழிகளின் கரைகளில் வாழும் பறவையினங்கள் பார்க்கப் பார்க்கப் பேரழ குடையவாம். அவ்வழகோடு அமையாது, கேட்கக் கேட்க மகிழ்வூட்டும் மாண்பு மிகு குணங்களும் உடையவாம். தோழி! அவை எவ்வுயிரையும் கொல்லாவாம். தமக்கு உணவாகிப் பயன்படுக என ஆண்டவனால் படைக்கப் பெற்ற உயிரினங்களையும் அவை கொன்று தின்னாவாம். கழிக்கரைகளில் அமர்ந்து இரை தேடும் அவை, கழியில், எளிதிற் பெறும் அளவில், மீன் இனங்கள் பல்கி இருப்பினும், அவை அவற்றைக் குத்திக் கொன்று தின்னாவாம். அக்கழிகளில் எழுந்து கரைகளில் மோதும் அலைகள் அவ்வாறு மோதுங்கால் கொன்று கொண்டு வந்து கரைகளில் ஒதுக்கும் மீன்களை மட்டுமே உண்ணுமாம். அத்துணைப் பேரருள் உள்ளம் வாய்ந்த பறவைகள் வாழும் நாட்டிற் குரியோன் நம் காதலன். ஆகவே அவனைப் பழித்துப் பாடியது போதும். இனி புகழ்ந்து ஒரு பாட்டுப் பாடுவாயாக!' என்றேன்.

'காதலன் புகழையே பாடக் கடமைப்பட்ட நான், அவன் புகழ் பாடுமாறு தோழி கேட்ட பின்னரும், அவன் புகழ் பாடாது பழித்துப் பழித்துப் பாடுவது பண்பன்று!' என எண்ணினையோ என்னவோ, உடனே, 'தோழி! நம் காதலன் நிறைந்த அருள் உள்ளம் வாய்க்கப்பெற்ற அறவோனாவன். அத்தகையான் தன்பால் அன்புடை யாரை வருந்த விடான். தன் பிரிவால் ஒரோரொருகால் அவரை வருந்த விட்டுப் பிரிய நேரின், விரைந்து மீண்டும்

ந்து பணிந்துரைக்கும் அவன் அன்பு மொழிகள் அத் யரைப் போக்கி, அவர் ஊடலை அகற்றிவிடும். வன்பால் காணலாம் இப்பெரும் பண்பு அவன் நாட்டு யற்கைப் பொருள்களிடத்தும் இருக்கக் காணலாம். தாழி! அதோ காண். கழியில் மலர்ந்திருக்கும் காவி லரைத் தான் கொண்டு வந்து குவித்த கருமணல் மேடு டிக் கொடுமை செய்து விட்டதைக் கண்ட கடல் லைகள் தம் செயலுக்காக வருந்தி, மீண்டும் கரை நாக்கி வருங்கால், மலைபோல் உயர்ந்து வந்து, க்கழியில் புகுந்து அக்காவி மறைய மூடிவிட்ட ருமணல் மேட்டைக் கரைத்து அகற்றி அம்மலரை ாழ்விக்கும் வனப்பு மிகு காட்சியை! அலைகளின் ச்செயலுக்கு, அவை, அக்காவி மலர்பால் கொண்டுள்ள ருள் அல்லது வேறு ஏது காரணம்? அத்தகைய அருள் ணர்வு நிலவும் நாட்டில் பிறந்த அவனும், நம் துயர் ர்த்து நம் ஊடலைத் தீர்ப்பன்!' என்ற பொருள் அமைந்த ாட்டைப் பாடினாய்.

"பெண்ணே! இவ்வாறு காதலன் கொடுமை கூறிப் ழித்தும், அவன் பேரருள் உள்ளம் புலப்படப் புகழ்ந்தும் ாடியவாறே, நாம் ஊசல் ஆடிக் கொண்டிருக்குங்கால், ங்கு வந்து சேர்ந்தான் நம் காதலன். நாம் அறியாவாறு, ம் ஊசல் தூங்கும் புன்னை மரத்தின் அடியில் றைந்திருந்து நம் பாடற் பொருளைக் கேட்டு கிழ்ந்தான். தன் பிரிவால் நமக்கு உண்டாம் துன்பதை ணர்ந்தான். உடனே துன்பத்தால் துயர் உறும் உன்னைத் தற்றத் துணிந்தான். துணிந்தவன், மறைவிடம் விட்டு வெளிப்போந்து, நீ அறியாவாறு என்பால் வந்து, என்னை க்கி விட்டு, ஊசலைத் தானே ஆட்டத் தொடங்கினான். ட்டுவது அவன் என்பதை நீ அறியாமையால், நான்

ஆட்டுவதாகவே எண்ணி மகிழ்ந்து மெய்ம்மறந்து ஆடிக் கொண்டிருந்தாய். அவ்வாறு தான் காட்டும் தலையாய அன்பை, அவனால் அன்பு செய்யப்படும் நாம் அறியாவாறே செய்யும் உயர்வுள்ளம் உடையவன் அவன் என்பதை அன்று கண்டு கொண்டேன். அவ்வாறு அன்று வந்து ஆட்டி அன்பு காட்டிய அவன், நீ பிரிவால் பெருந்துயர் கொள்ளும் இப்போது வந்தும் அருள் புரியாதிரான். நீ நின் மனத்துயர் மடிந்து மகிழ மண முயற்சியோடு விரைந்து வந்து சேர்வன். வருந்தாதே!" எனக் கூறி, அவளைத் தேற்றினாள்.

"பெருங்கடல் தெய்வநீர் நோக்கித் தெளித்து என்
திருந்திழை மென்தோள் மணந்தவன் செய்த
அருந்துயர் நீக்குவேன் போன்மன்; பொருந்துபு
பூக்கவின் கொண்ட புகழ்சால் எழில் உண்கண்,
நோக்குங்கால் நோக்கின் அணங்காக்கும் சாயலாய்!
தாக்கி

இனமீன் இகன்மாற வென்ற சினமீன்
எறிசுறா வான் மருப்புக் கோத்து நெறிசெய்த
நெய்தல் நெடுநாரப் பிணித்து யாத்துக் கையுளாவ்ன
யாழிசை கொண்ட இனவண்டு இமிர்ந்து ஆர்ப்பத்
தாழாது உறைக்கும் தடமலர்த் தண்தாழை
வீழ்ஊசல் தூங்கப் பெறின்;

மாழை மடமான் பிணைஇயல் வென்றாய்! நின் ஊசல்
கடை இயான் இகுப்ப நீள் தூங்காய், தடமென் தோள்
நீத்தான் நிறங்கள் பகர்ந்து;

நாணினகொல்? தோழி! நாணினகொல்? தோழி!
இரவெல்லாம் நற்றோழி! நாணின என்பவை,

வாள்நிலா ஏய்க்கும் வயங்கொளி எக்கர்மேல்
ஆனாப் பரிய அலவன் அளைபுகூஉம்
கானல் கமழ்ஞாழல் வீ ஏய்ப்பத் தோழி! என்
மேனி சிதைத்தான் துறை.

மாரிவீழ் இருங்கூந்தல் மதை இயநோக்கு எழில் உண்கண்
தாழ்நீர முத்தின் தகை ஏய்க்கும் முறுவலாய்!
தேயாநோய் செய்தான் திறங்கிளந்து நாம்பாடும்
சேய்உயர் ஊசல்சீர் நீஒன்று பாடித்தை!

பார்த்துற்றன தோழி! பார்த்துற்றன தோழி!
இரவெல்லாம் நற்றோழி பார்த்துற்றன என்பவை
தன்துணை இல்லாள் வருந்தினாள்கொல் என
இன்துணை அன்றில் இரவின் அகவாவே,
அன்றுதான் ஈர்த்த கரும்பு அணிவாட என்
மென்தோள் ஞெகிழ்த்தான் துறை.

கரைகவர் கொடுங்கழிக் கண்கவர் புள்ளினம்
திரையுறப் பொன்றிய புலவுமீன் அல்லதை
இரைஉயிர் செகுத்து உண்ணாத் துறைவனை யாம்பாடும்
அசைவரல் ஊசல்சீர் அழித்து ஒன்று பாடித்தை.

அருளினகொல்? தோழி! அருளினகொல் தோழி?
இரவெல்லாம்? தோழி? அருளின என்பவை,
கணங்கொள் இடுமணல் காவி வருந்தப்
பிணங்கு இருமோட்ட திரைவந்து அளிக்கும்
மணங்கமழ் ஐம்பாலார் ஊடலை ஆங்கே
வணங்கி உணர்ப்பான் துறை;

என நாம்
பாட மறைநின்று கேட்டனன் நீடிய

வானீர்க் கிடக்கை வயங்குநீர்ச் சேர்ப்பனை
யான்என உணர்ந்து நீநனி மருளத்
தேன் இமிர் புன்னை பொருந்தித்
தான் ஊக்கினன் அவ்வூசலை வந்தே.”

*வரைவு நீடத் தலைவி ஆற்றாளாகத் தோழி, முன்னொருகால் தலைவன் செய்த தலையளியை நினைவூட்டி, அப்பேரன்பினன் நின்னை வருந்தவிடாது விரைந்து வந்து வரைந்து கொள்வன் என ஆற்றுவித்தது.*

6. இகல்மாற — மாறுபாடு கெட; சினமீன் — சினம் மிக்க மீன். 7. கோத்து — இணைந்து; நெறி செய்த — ஒழுங்கு பண்ணிய. 8. கையுளர் பின் — கையால் வாசித்தலை உடைய. 11. வீழ் ஊசல் — விழுதால் திரித்து இட்ட ஊசல். 12. மாழை — இளமை வாய்ந்த; மான்பிணை — பெண்மான். 13. கடைசி — உயர்தூக்கி. இருப்ப — தாழ்த்தி ஆட்ட; நீள்தூங்காய் — நீண்ட பொழுது ஆடினாய். 17. வாளி — ஒளிவீசும்; ஏய்க்கும் — ஒக்கும். 18. ஆனாப்பரிய அலவன் — சிறிது பொழுதும் ஓய்ந்திராது ஓடித்திரியும் நண்டு. அளை — வளை. 19. வீ — மலர்; மார்வீழ் — மழை மேகம் விரும்பும்; இருமை — கருமை; மதை இய — மருண்ட. 22. தாழ்நீர — ஆழ்கடலில் உண்டாகும். 24. பாடித்தை — பாடுவாயாக. 25. உற்றன — வருத்தம் உற்றன. 29. ஈர்த்த — எழுதிய. கரும்பு அணி — கரும்பு போல் தீட்டிய கோலம். 30. ஞெகிழ்ந்தான் — மெலிவித்தவன். 32. திரை உற — அலைமோத; பொன்றிய — இறந்த. 33. உயிர் செகுத்து — உயிர்களைக் கொன்று; 34. அசைவரல் — அசைந்து வருதலை உடைய; அழித்து — முன்முறைக்கு மாறுபட்டு. அதாவது, முன் இழித்துப் பாடியதைக் கைவிட்டுப்புகழ்ந்து. 37. கணம் கொள் — கூட்டமாக உள்ள; காவி — நீலோற்பலம். பிணங்கு — வளைந்து வளைந்து; இருமோட்ட — மிக உயர்ந்த. 40. உணர்ப்பான் — தீர்ப்பவன்; 43. வால்நீர் — வெண்ணிறம் விளங்கும் நீர்ப்பரப்பு. 44. நனிமருள — மிகவும் மருளும்படி, 45. தேன் — தேன் வண்டுகள். இமிரும் — ஒலிக்கும். 06. ஊக்கினன் — ஆட்டினான்.

15

# அணங்காகிய தெய்வம்

பாண்டிய நாட்டின் கடல் வாணிகம் செழிப்ப தற்குக் காரணமாய்ச் சிறப்புற்ற துறைமுகப் பட்டினம் ஒன்றில் பிறந்து வளர்ந்த ஓர் இளைஞன், தன் நாட்டுக் கடற்கரையை ஒட்டியிருந்த சிற்றூர்த் தலைவன் மகள் மீது காதல் கொண்டான்; மாந்தளிர் போலும் அவள் மேனி நலமும், நனிமிக நீண்ட அவள் தோள் நலமும், மலர்களால் நிறைந்து மாண்புறும் மலர்க்கொடி போல், உறுப்புக்கள் எல்லாம் உரிய அணிகள் அணிந்து விளங்கும் அவள் உருவ நலமும் கண்டு காதல் கொண்டான். அவளும் அவன்பால் காதல் கொண்டாள். ஆனால் காதல் கொண்டனளேனும், அவனை அதற்கு முன் அறியாள் ஆதலாலும், இன்று என் அழகு கண்டு காதல் கொள்ளும் இவன், நாளை என்னை மறந்துவிட்டால் என் பெண்மை என்னாம் என அஞ்சியதாலும், அவன் காதலை ஏற்றுக் கொள்ளச் சிறிதே தயங்கினாள். அவள் தயக்கத்தைக் கண்ட அவன், அவளை அணுகிப்,

"பெண்ணே! இனி, உன்னைப் பிரியேன். பிரிந்தால் என் உயிர் வாழாது. இது உண்மை; என் அன்பில் ஐயங் கொள்ளாதே. நான் வணங்கும் கடவுளர் மீது ஆணை!" எனக் கூறி ஆணையிட்டு அவள் அச்சத்தைப் போக்கினான். அவன் ஆணையை நம்பி அவள் அவன் காதலை ஏற்றுக்கொண்டாள். அன்று தொடங்கி அவ்விருவரும் காதலால் கட்டுண்டு மகிழ்ந்தனர். ஒருநாள் புன்னை மரச் சோலையுள் புகுந்து மகிழ்வர்; மறுநாள் அப்புன்னை மரச் சோலையை அடுத்திருந்த பன்மலர்ச் சோலையுள் புகுந்து பேரின்பம் காண்பர். மற்றொரு நாள், அடும்பங் கொடி வளர்ந்து அணி செய்து கிடக்கும் கடற்கரை மணலில் அடும்ப மலர் கொய்தும் அலவன் ஆட்டியும் ஆடி மகிழ்வர். இவ்வாறு சின்னாட்கள் கழிந்தன.

அவர் காதல் சிறுகச் சிறுக ஊரில் உள்ளார் சிலர்க்குத் தெரிந்து விட்டது. அதனால், அவர்கள் முன் போல் தடையின்றிக் கலந்து மகிழ்வதற்கு வாய்ப்பில்லாது வருந்தினர். காதலனை ஒரு நாள் காண இயலாது போயினும் அவள் கண்ணீர்விடத் தொடங்கினாள். அஞ்சி அஞ்சி வாழும் அன்பு வாழ்க்கையை வெறுத்தாள்; காதல் இன்பத்தில் அச்சமோ, அயலார் தலையீடோ அறவே கூடாது என எண்ணினாள். அத்தகைய பேரின்ப வாழ்வு, களவுக் காலத்தில் அரிதாம். அது, பலர் அறிய மணந்து வாழும் மாண்புமிகு கற்புக் காலத்திலேயே உண்டாம் என உணர்ந்தாள். அதனால் அவனை மணந்து பெறும் வாழ்வில் அவள் மனம் சென்றது. ஆனால் இளைஞன் உள்ளமோ அதற்கு மாறாகச் சென்றது. கற்புக் காலத்தில் இடையறா இன்பம் பெறலாம் என்றாலும்,

அவ்வின்பம் களவுக் காலத்து இன்பம் போல் பேரின்பம் உடையதாகாது. மேலும் திருமணத்தைத் திடுமென முடித்து விடுதலும் இயலாது. வரைவிற்கு வேண்டும் பெரும் பொருளை வேற்று நாடு சென்று ஈட்டி வருதல் வேண்டும்; அது அத்துணை விரைவில் ஆகிவிடாது. ஆகவே, திருமண நிகழ்ச்சியைச் சில காலம் கழித்து வைத்துக்கொள்ள விரும்பினான். அந்நிலையை அவளால் தாங்கிக்கொள்வது இயலாதாயிற்று. வரைவு சில நாள் கழித்து நிகழ்வது குறித்து அவள் கவலையுற்றிலள்; அதுகாறும் அவனை இடையறாது பெற்று இன்பம் நுகர்தற்கு இயலாதே என்றே எண்ணி வருந்தினாள். அதற்கு ஏற்ப, அவன் அவளைக் காண நாள் தவறாது வரினும், ஒவ்வொரு நாளில் ஒவ்வொர் இடையூறு உற்று, அவளைக் கண்டு களிப்பூட்டுவது இயலாது வறிதே திரும்புவன். அவன் வருகைக்காகக் காத்திருந்து காத்திருந்து கலங்கினாள் அவள். அதனால் அவள் துயர் மிகுந்தது.

அவள் உள்ளகம் ஆற்றொணாத் துயரில் ஆழ்ந்து போகவே, அவ்வக வுணர்வுகளோடு தொடர்பை யுடையவாய புற உறுப்புக்களும் தம் நலம் கெடலாயின. மாந்தளிர் போலும் நிறம் வாய்ந்து மாண்புற்ற அவள் மேனி, பகற் காலத்தில் ஏற்றிய கை விளக்கு சுடர்விட்டு ஒளி காட்டாது சாம்புவதுபோல் பசலை படர்ந்து பாழுற்றது. பருத்து நீண்ட அவள் தோளின் முன் கைகளில் நிறைந்திருந்த வளைகள் தாமே கழன்று போகுமாறு உடல் தளர்ந்து விட்டது. இத்தனை அணிகளையும் இவள் இடை எவ்வாறு தாங்கிக் கொள்கிறதோ எனக் கண்டோர் வியக்கக் கணக்கிலா அணி அணிந்து அழகுற்ற அவள்

திருவுருவம், அவள் அணி அணியும் வழக்கத்தை அறவே கைவிட்டமையால், மலர்ந்த மலர்களெல்லாம் உதிர்ந்து போக, உலர்ந்து போன பூங்கொடி போல் பொலிவிழந்து தோன்றிற்று.

அப் பெண்ணின் இத்துயர் மிகு தோற்றம் அவள் ஆருயிர்த் தோழியின் நெஞ்சைச் சுட்டெரித்தது. இவளை இந்நிலையில் மேலும் வருந்த விட்டு வைத்தால், இவள் வாழ்விழந்து போவள். அங்ஙனமாயின், இவளைக் காக்கும் பொறுப்பேற்றுக் கொண்டுள்ள தனக்கும் பெரும்பழி வந்து சேரும். ஆகவே, இளைஞன் வந்தால், வற்புறுத்தி வரைவிற்கு வழி காணுதல் வேண்டும் எனத் துணிந்தாள்.

எதிர் நோக்கி யிருந்த இளைஞனும் வந்தான். வந்தவனைத் தோழி எதிர்சென்று வணங்கி வரவேற்றாள். எதிர்பாரா இவ்வரவேற்பின் விளைவறிய மாட்டாது இளைஞன் விழித்தான். உடனே, அவனுக்குத் தான் உரைக்கத் துணிந்ததை உரைக்க முன் வந்தாள். முன் வந்தவள் அதை உரைப்பதற்கு முன்னர்த், "தம் படைப் பெருமையால், தம் குலப் பகைவர்களாகிய சேரனையும், சோழனையும் வென்று, அவர்க்குரிய முரசுகளோடு தம் முரசும் சேர, மும்முரசும் முழங்க நாடாளும் பாண்டிகுலப் பேரரசர், தம்மைப் பணியாத பகைவர்களைப் பாழாக்க நிறுத்தி வைக்கும் நாற்படையின் நடுவே, நிரை நிரையாக நின்று காட்சி தரும் களிற்றுப் படைபோல், ஓயாது அலைக்கும் அலை கொண்டு வந்து குவித்த மணல் மேட்டில் பல்வேறு உருவினவாய பறவை இனங்கள், தத்தம் பெடைகளோடு இரை தேர்ந்துண்டு, இணை இணையாக வீற்றிருக்க, அம்மணல் மேட்டினை அடுத்த

ஆழ்கடல் நீரில், வாணிக வளம் கருதி வெளிநாடு சென்று சென்ற இடங்களில் சிறிதும் அழிவுறாது, சிறந்த பல பண்டங்களைப் பெற்று, அப்பண்டங்களோடு வந்து சேர்ந்த எண்ணற்ற கலங்கள், வரிசை வரிசையாக நிற்கும் வாணிக வளம் கொழிக்கும் கடல் நாட்டுக் காவலனே!" என அவனையும், அவன் நாட்டு வளத்தையும் வாழ்த்துவாள் போல் வாழ்த்தி, "அன்ப! இரை தேர்ந்துண்டு கடற்கரை மணலில் களித்துத் திரியும் புள்ளினங்களும் தத்தம் காதற் பெடைகளைப் பிரியாதிருந்து மகிழ்வதையே விரும்பும் கவின்மிக்க காட்சிகளைக் கண்டும், உனக்குப் பலர் அறிய மணம் செய்து கொள்வதால் இவளைப் பிரிவின்றிப் பெற்று மகிழும் மனவலம் வாய்க்கவில்லையே! நின் நாட்டு வணிகப் பெருங்குடி மக்கள், வரைந்து மணவாழ்க்கை மேற்கொண்ட மன நிறைவால் எடுத்துச் செல்லும் வினைகளில் ஈடிலா வெற்றி கண்டு வீடு திரும்புவதைக் கண்டும், அவரைப் போல், இவளை மணந்து நிறை வாழ்வு பெற்று, வங்கம் ஏறி, வாணிகம் புரிந்து வாழும் வளமார் வாழ்வில் உன் மனம் செல்லவில்லையே! என்னே உன் இயல்பு இருந்தவாறு! இணைந்து வாழும் அப்பறவை களையும், வினை வாய்த்து வீடடைந்து மகிழ்ந்து வாழும் மக்களையும் காணும் உன் காதலி, அம்மனம் நிறை வாழ்வு தனக்கு வாய்க்கவில்லையே, அதற்கு நம் காதலன் துணை புரிந்திலனே என எண்ணி ஏங்கி வருந்துகின்றனளே!' என இடித்துரைத்தாள்.

அவ்வாறு, தான் மறைத்துமொழி கிளவியால் எடுத்துரைத்ததை எண்ணி இளைஞன் வாய்மூடி இருந்தானாக, மீண்டும் தோழியே பேசத் தொடங்கி,

"அன்ப! நின் காதலியின் கண்டோர் வியக்கும் அழ கெல்லாம் அழிந்து விட்டது. உயிர் போகும் நிலை வந்துற்றது அவளுக்கு. இவள் இன்று இவ்வாறு வருந்துவது, அவளைக் கண்டு, காதல் கொண்டு புன்னை மரத்தடியிலும், பூஞ்சோலையிலும், மணல் மேட்டிலும் களித்து மகிழுங்கால், 'பெண்ணே! பிரியேன்; அஞ்சற்க!' என ஆணையிட்டு உரைத்த உன் உரையினை அவள் உண்மை என உளங் கொண்டதன் பயனே அன்றோ! அன்ப! அவ்வாறு உன்னை நம்பிய அவளை நலியப் பண்ணுதல், நன்றோ? நம் துயர் போக்கும் துணை தெய்வமே யென நம்பி, அத் தெய்வத்தை வழிபட, அத் தெய்வம், அதற்கு மாறாகத் தன்னை வந்தடைந்த அவரைக் கொன்றழிக்க நினையுமாயின், அவர் நிலை என்னாம்! அது போன்றது உன் செயல். தன் துயர் நீக்கும் துணைவன் நீ என நம்பி, அவள் உன்னை அடைந்தாள். ஆனால் நீயோ, உன்னை நம்பி உயிர் வாழ்பவள், வாழ்விழந்து அழிவதற்குக் காரணமாய் விளங்குகின்றாய். அன்ப! உன் செயல் அறமாகாது. காதல் நோயாலும், கண்டோர் கூறும் அலராலும் அவள் அழுது மடியுமாறு விடுத்து வரையாது வருத்துவது உனக்கு அழகன்று. ஆகவே, அன்ப! அவளை வரைந்து கொள்வதாம் முயற்சிகளை விரைந்து மேற்கொள்வாயாக!" என வேண்டிக் கொண்டாள்.

"உரவுநீர்த் திரைபொர ஓங்கிய எக்கர்மேல்
விரவுப்பல் உருவின வீழ்பெடை துணையாக
இரைதேர்ந்துண்டு அசாவிடூஉம் புள்ளினம் இறைகொள,
முரைசு மூன்று ஆள்பவர் முரணியோர் முரண்தப,

நிரைகளிறு இடைபட நெறியாத்த இருக்கைபோல்
சிதைவின்றிச் சென்றுழிச் சிறப்பெய்தி வினைவாய்த்துத்
துறையகலம் வாய்சூழும் துணிகடல் தண்சேர்ப்ப!

புன்னைய நறும்பொழில் புணர்ந்தனை இருந்தக்கால்,
நன்னுதால்! அஞ்சல்ஓம்பு என்றதன் பயன் அன்றோ!
பாயின பசலையால் பகல்கொண்ட சுடர்போன்றாள்,
மாவின தளிர்போலும் மாணலம் இழந்ததை?

பன்மலர் நறும்பொழில் பழியின்றிப் புணர்ந்தக்கால்
சின்மொழி! தெளிஎனத் தேற்றிய சிறப்பன்றோ,
வாடுபு வனப்பு ஓடி வயக்குறா மணிபோன்றாள்
நீடுஇறை நெடுமென்தோள் நிறைவளை நெகிழ்ந்ததை?
அடும்புஇவர் அணிஎக்கர் ஆடிநீ மணந்தக்கால்
கொடுங்குழாய்! தெளிஎனக் கொண்டதன் கொளை அன்றோ,
பொறை ஆற்றா நுசுப்பினால் பூவீந்த கொடிபோன்றாள்
மறைபிறர் அறியாமை மாணாநோய் உழந்ததை?

எனவாங்கு
வழிபட்ட தெய்வந்தான் வலிஎனச் சார்ந்தார்கண்
கழியும்நோய் கைம்மிக அணங்கா கியது போலப்
பழிபறந்து அலர் தூற்ற, என்தோழி
அழிபடர் அலைப்ப அகறலோ கொடிதே."

*வரைவு நீடித்துப் பகற்குறி வந்தொழுகும் தலைவனைத், தோழி, தலைவியது ஆற்றாமை கூறி வரைவு கடாயது.*

1. உரவுநீர் — கடல்; 2. விரவு — கலந்த; வீழ்பெடை — விரும்பும் பெண் பறவைகள். 3. அசாவிடுஉம் — இளைப்பாறும். இறைகொள் — தங்க. 4. மும்முரசு; சேர, சோழ, பாண்டியர்க்குரிய முரசுகள்

மூன்று; இனி, வீர முரசு, தியாக முரசு, நியாய முரசு என இவையே மும்முரசு என்பாரும் உளர். முரணியோர் — பகைவர்; முரண் மாறுபாடு; தப — கெட; 5. நெறியாத்த — முறையாகக் கட்டிய; 6. சென்றுழி — சென்ற இடங்களில். 7. துறைய — துறைக்கண் வந்து நிற்கும்; கலம் — மரக்கலம். 14. வனப்பு ஓடி — அழகு கெட்டு; வயக்குறா — கழுவாத. 15. நீடு இறை — நீண்ட முன்கை 16. இவர் — படர்ந்த. 17. கொளை — கொள்கை. 18. நுசுப்பு — இடை; வீந்த — உதிர்ந்த; 22. கைம்மிக — மேலும் வளர. அணங்காகியது — வருந்தியது.

16

# பூண்க நின் தேரே!

உலகில் பிறந்தார் அறிய வேண்டுவ அனைத்தையும் அறிந்த உயர்ந்த அறிவுடையான் ஓர் இளைஞன், பேரழகு வாய்ந்த பெண்ணொருத்திபால் காதற் றொடர்புகொண்டு களித்திருந்தான். அவ்விருவர்க்கிடையே தோன்றிய காதலுறவு நாள்தோறும் வளர்ந்து பெருக உற்ற துணை புரிந்தாள் அப் பெண்ணின் உயிர்த் தோழி. அத்தோழி அறிவே உருவாய் அமைந்தவள். அது மட்டுமல்லாமல் அவ்வறிவுரைக்கும் வழி வாழ்ந்து காட்ட வேண்டும்; அதுவே அறிவறிந்ததன் பயனாம்; அவ்வாறு அறிவுரைக் கும் வழி வாழ்ந்து காட்டாதார் அவ்வறிவினைப் பெற்றதினும் பெறாதிருப்பின் அதுவே நன்றாம் என உணவுரும் நல்லுள்ளம் உடையவள். அவ்வுயர்வுள்ளம் வாய்க்கப் பெற்றிருந்தமையால், அவள், அந்நெறியிற் பிறழ்ந்து பிழை புரிவாரைக் காணின், அவர் ஆடவரே ஆயினும், தன்னினும் அறிவுச் செல்வத்தை ஆரப் பெற்றிருப்பவரே ஆயினும், அவர்க்கு அவர் புரியும்

பிழைகளை எடுத்துக் காட்டி இடித்துரைக்க முன்வரும் அஞ்சாமையும் உடன் கொண்டிருந்தாள்.

தன் காதலியின் தோழி அத்தகைய அறிவு நலம் வாய்க்கப் பெற்றவள் என்பதை அவ்விளைஞன் அறியான் போலும். அதனால், தன்னால் காதலிக்கப் பெற்றவள், தன்னைக் காதலித்துத் தனக்குப் பேரின்பச் சுவை யூட்டுபவள், துயர் உறப் பார்த்திருத்தல் பண்பன்று என்பதை உணரானாயினான். அதை உணராமையோடு அவள் படும் அத்துயர்க்கு அவனே காரணமும் ஆயினான். காதலனைக் காணாதிருப்பது காதலியர்க்கு இயலாது; ஒரு நாள் தவறினும் பெருநோயுறுவரே; அன்னார் அவனைப் பலநாள் காணாதிருக்கப் பெறின் அவர் கலக்கம் பெரிதாமே; அது எத்துணைக் கொடிதாம்! பெருங்குடியில் வந்த பெண் ஒருத்தி, தன் காதலனைக் காண அவன் விரும்பும் போதெல்லாம், விரும்பிய இடங்களுக்கெல்லாம் வருவது, அதிலும் தன் பெற்றோர் அறியாவாறு வருவது எத்துணை அருமையுடைத்து! ஒரு முறை வந்து செல்ல, அவள் எத்தனை எத்தனை இடையூறு களைத் தாங்கிக் கொள்ள நேரும்! அவ்விடையூறுகள் எல்லாம் அவளை, அவள் பெற்றோர் தர, அவர் பிறந்த ஊர் அறிய மணந்து கொண்டால் இல்லாகிப் போய் விடுமே! அதனால் மண முயற்சியை எவ்வளவு விரைவில் மேற்கொள்ளலாமோ அவ்வளவும் நன்றாமே என எண்ணிப் பாராமல், வரைவு முயற்சிக்காம் கருத்தின்றியே காலம் கழித்து வந்தான். அதனால் அப் பெண்ணின் துயர் மிகுந்தது.

அவள் துயரைத் தோழி அறிந்தாள். இளைஞன் அத்துணைப் பேரறிவு பெற்றிருந்தும், அவ்வறிவுரைக்கும்

வழியில் நடந்து காட்ட வேண்டும் என்பதை உணர்ந்திலனே என வருந்தினாள். உணராத அவனுக்குத் தானேனும் உணர்த்தித் தெருட்டுதல் வேண்டும் எனத் துணிந்தாள். அதனால் அவனூர் சென்று அவனைக் கண்டாள். அவள் ஆண்டுச் சென்றிருந்த போது, அவன் தன்னூர்க் கடற்கரையில் கடல் காட்டும் காட்சிகளைக் காண்பதில் மகிழ்ந்திருந்தான். கரிய கழிமுள்ளியும், தில்லையும் மட்டுமே வளர்ந்திருந்தமையால் அக்கானற் சோலை காண மகிழும் வனப்பு வாய்ந்திலதேனும், அக்கானற் சோலையை அடுத்திருந்த மணல் மேட்டில் வளர்ந்திருந்த தாழை அவனை மிகவும் கவர்ந்திருந்தது. குடம்போலும் பழம் தொங்க வளைந்து வளர்ந்திருந்த அம்முடத்தாழை, ஆசிரியரை அடுத்து, அன்புமிக்க மாணவனாய் இருந்து மாண்புற்ற அவன் மனத் திரையில் ஆவின் கீழிருந்து அறம் உரைக்கும் உயர் பேராசிரிய முதல்வனாகிய தக்ஷிணாமூர்த்தி, தன் கையில் தாங்கியிருந்த நீர் நிறைந்த கரகத்தை, அவ்வாலின் தாழ்ந்த கிளையில் மாட்டித் தொங்க விட்டிருக்கும் காட்சியைக் காட்டக் கண்டு களிப்புற்றிருந்தான்.

அந்நிலையில் ஆங்குச் சென்று அவனைக் கண்ட தோழி, அவனை அணுகி, “அன்ப! உன் உள்ளம் உவந்திருக்கும் இந்நிலையில் உனக்கு இன்பம் ஊட்டும் இனிய நிகழ்ச்சியை நினைவூட்டும் இத்தாழை, துன்பமிக்க என் உள்ளத்திற்கு நினைவூட்டுவது யாது என்பதை அறிவையோ? அன்ப! அத்தாழை உச்சியைக் காண். பகலெல்லாம் பல உயிர்களைக் கொன்று தின்று கொடுமை புரிந்த நாரை, ஆங்கு வந்து அமர்ந்து எவரும் விரும்பும் இனிய மணம்நாறும் தாழை மலர் மடல் விரிந்து

மலர்ந்திருப்பது போல் தோன்றும் அக்காட்சி, 'ஆங்கு அப்பெண் உள்ளத்தில் காதற்கனலை மூட்டி, அவளைக் கலங்கித் துயர்உறச் செய்த கொடியோனாய இத்தலைவன், ஈங்கு வந்து, யாவரும் போற்றும் பேரறிவாளன் போல் வாழ்கின்றனனே! என்னே இவ்வுலகியல்?' என்ற எண்ணத்தை ஊட்டி என்னை வருத்துகிறது.

"அன்ப! உலக நீதிகளையெல்லாம் ஓதி உணர்ந்தவன் நீ. உனக்கு நான் அறம் உரைப்பது என்பது பொருந்தாது. ஆயினும், நீ அறிந்த அவ்வறவுரைகளை, இன்றையசூழ்நிலையால் நீ மறந்திருப்பதும் கூடும். ஆகவே, அவற்றுள் இன்றியமையாச் சிலவற்றை எடுத்துக்கூறி நினைப்பூட்டுவேன், கேள். அன்ப! வறுமையுற்று வருந்தி வருவார்க்குத் தம்மால் இயன்றதை அளித்து உதவுவது இல்வாழ்க்கையின் அடிப்படை அறமாம். தன் அருளை நம்பிவந்து தன்னை அடைந்தவரைப் பிரியாதிருப்பதே, உலக உயிர்களைப் பேணி வளர்ப்பதன் முதற்படியாம். காதல் கொண்ட காரிகையைப் பலர் அறிய மணந்து வாழ்தலே மக்கட்பண்பாடாம் என்பது போலும் உலகியல் முறைகளுக்கு ஒப்ப உயிர் வாழ்தலே பண்பு எனப் போற்றப்படும். தன் சுற்றத்தார் தனக்கு எத்தகைய பெருங் கேடு செய்யினும், அவர் கேட்டைக் கனவிலும் கருதா திருப்பதே அன்பாம். உலகில் வாழ்வார் அனைவரும் அறிவுடையராகி விடுதல் இயலாது; அறிவின்மையால் அவருட் சிலர் கூறத் தகாதன கூறி விடுவதும் உண்டு. அங்ஙனம் அவர் யாதேனும் கூறுவாராயின், அவர் அறியாமையை நினைந்து, அவர் கூறியனவற்றைப் பொறுத்துக் கொள்வதே அறிவாம். ஒருவர்க்கு ஓர் உறுதிமொழி அளித்தக்கால், அளித்த அவ்வுறுதி

மொழியை எத்தனை ஆண்டுகள் கழியினும், எவ்வளவு இடர்ப்பாடு உறினும், மறவாது காப்பதே செறிவாம். செய்யும் செயல்களெல்லாம் ஒரு நிகரன அல்லவாம். பலர் காணச் செய்வனவும் உள. ஒருவரும் உணர்ந்து கொள்ளாவாறு செய்ய வேண்டுவனவும் உள. அவ்வாறு பிறர் அறியாவாறு காக்க வேண்டுவனவற்றை எப்பாடு பட்டேனும் மறைத்துக் காப்பதே நிறையாம். தமக்கு வேண்டியவர் ஒரு குற்றம் புரிந்து விடுவராயின், அவர் நம்மவர் என்று பாராமல், அவர் செய்த குற்றத்திற்குக் கொலையே தண்டமாம் என அறநூல்கள் கூறுமாயின், அவரைக் கொல்லத் தயங்காமையே முறையாம். பகைவர் அழிவைக் காண விரைவது மனத்தின் இயல்பு; அவரை அழிப்பதற்கு ஏற்ற காலம் வரும்வரை அதனால் பொறுத் திருப்பது இயலாது. ஆனால், அதற்கிடையில் யாதேனும் செய்து விட்டால், அதனால் தமக்கே கேடாய் முடியு மாதலின், அக்காலம் வரும்வரை தன் சினத்தை அடக்கி ஆள்வதே பொறையாம்.

“அன்ப! அறநூல் உரைக்கும் பேரறங்களுள் பெரிதும் அறிந்து மேற்கொள்ள வேண்டிய பெருமை உடையன இவை. இவ்வுண்மைகளை உணர்ந்து கொள்வதோடு, அவை கூறும் நெறியில் நிற்றலும் வேண்டும். நின்று நீள்புகழ் பெறுவது நின் கருத்தாயின், அன்ப! காதல் இன்பம் பெறத் துடிக்கும் உன் காதலிக்கு அவ்வின்பத்தை நிறைய அளிப்பாயாக. அவளை இமைப்பொழுதும் பிரிந்து வாழ எண்ணாதே. உலகியல் முறைப்படி ஊர் அறிய மணந்து கொள். உன் அன்பைப் பெற மாட்டாமையால் அழிந்து போகும் வண்ணம் அவளைக் கைவிட்டு விடாதே. காதலி கலங்கக், கைவிட்டு

வாழ்கின்றனனே என்ற சினமிக்கமையால் சிந்தை செயல்படுவது மறந்து நானும் என் தோழியும் ஏதேனும் கூறத் தகாதன கூறியிருப்பின், நின் பெரிய உள்ளம் அதைப் பொறுத்துக் கொள்ளுமாக. பிரியேன் என அன்று உரைத்த உன் உரை பொய்த்துப் போகாவாறு பேணிக் காப்பாற்றுவாயாக, உங்கள் களவொழுக்க உறவினை ஊரார் அறிந்து கொள்வராயின் அலர் கூறிப் பழிப்பர் ஆதலின், அதை அவர் கூறியவாறு மறைத்துக் காத்து மணவாழ்வு மேற்கொள்வாயாக. களவின்ப வாழ்வு குறைபாடுடையது என்பதை அறிந்தும், அதில் ஆழ்ந்து போகும் உன் அறிவை ஒறுத்து அடக்குவாயாக.

"அன்ப! பேரற நூல்களைப் பெருகக் கற்றவன் நீ. அவ்வாறு கற்ற நீ அவை கூறும் இந்நெறி முறைகளை மேற்கொண்டு வாழ்தல் வேண்டும். அதில் நீ தவறி விட்டாய். அதுவே நினக்குப் பெரும் பழியாம். நீயே அறிந்து மேற்கொள்ள வேண்டிய இவ்வறங்களை நீ மறந்து வாழும் இந்நிலையில், நான் நினைப்பூட்டிய பின்னரும் மேற்கொள்ளக் கருதாயேல், அது நினக்குப் பெருங் கேடாம். அவள் தந்த காதல் இன்பம் உண்டுகளிப்புற்ற நீ, அவளை அழிய விடுவது அறமாகாது. பால் குடித்தார் ஒருவர், பாலைக் குடித்து விட்டு, அப்பாற் குடத்தைக் கவிழ்த்து அழித்ததற்கு ஒப்ப அறக்கொடிதாம். அக்கொடுமைக் குற்றம் உனக்கு வந்து வாய்க்காவாறு, உன் பொருட்டு வருந்துவாள் வருத்தம் ஒழியும்வண்ணம் அவளை வரைந்து வாழ்வளிக்க, உன் தேர் விரையுமாக!" என வேண்டிக் கொண்டாள்.

"மாமலர் முண்டகம் தில்லையோடு ஒருங்குடன்
கானல் அணிந்த உயர்மணல் எக்கர்மேல்

சீர்மிகு சிறப்பினோன் மரமுதல் கைசேர்த்த
நீர்மலி கரகம்போல் பழம் தூங்கும் முடத்தாழைப்
பூமலர்ந் தவைபோலப் புள் அல்கும் துறைவ! கேள்;

ஆற்றுதல் என்பது, ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்;
போற்றுதல் என்பது, புணர்ந்தாரைப் பிரியாமை;
பண்பெனப் படுவது, பாடறிந்து ஒழுகுதல்;
அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை;

அறிவெனப் படுவது, பேதையார் சொல் நோன்றல்;
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை;
நிறைவெனப் படுவது மறைபிறர் அறியாமை;
முறையெனப் படுவது கண்ணோடாது உயிர்வௌவல்;
பொறை யெனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்.

ஆங்கதை அறிந்தனி ராயின், என்தோழி
நன்னுதல் நலன் உண்டு துறத்தல், கொண்க!
தீம்பால் உண்பவர் கொள்கலம் வரைதல்;
நின்தலை வருந்தியாள் துயரம்
சென்றனை, களைமோ; பூண்கநின் தேரே."

*வரையாது வந்தொழுகும் தலைவனைத், தோழி உலகியல் அறிவு கூறி வரைவு கடாயது.*

1. மாமலர் — கரியமலர்; முண்டகம் — கழிமுள்ளி. 3. சிறப்பினோன் — தக்ஷிணாமூர்த்தி; முதல் — அடிமரம். 4. கரகம் — செம்பு; தூங்கும் — தொங்கும். 5. புள் — பறவை. அல்கும் — தங்கும். 6. ஆற்றுதல் — இல்லறம் ஆற்றுதல்; அலந்தவர் — வருந்தியவர். 8. பாடு — உலகியல். 9. கிளை — உறவு; செறாஅமை — கோபித்துக் கொள்ளாமை. 10. நோன்றல் — பொறுத்தல். 17. கொள்கலம் — பால் கொள்ளும் கலம்; வரைதல் — கவிழ்த்து அழித்தல். 18. நின்தலை — உன் பொருட்டு.

17

# புகுதர நீங்கிற்று

கடற்கரை மணலில் ஊர்மக்களெல்லாம் ஒருங்கே வந்து கூடினாற் போன்ற பெருங்கூட்டம்: காலம் மாலைக் காலம்; பகற்பொழுது முழுதும் பேரொளி செய்து காய்ந்த தன் கதிர்களை ஒருசேர ஒடுக்கிக் கொண்டு, ஞாயிறு மலையிடையே சென்று மறைந்து கொண்டிருந்தான். 'நாம் ஏவிய மல்லர்களின் மறத்தை அழித்து மடியச் செய்து விட்டனனே!' எனச் சினங்கொண்ட பகைவர் ஏவத், தன்மீது பாய்ந்து தாக்கிய மதம் மிக்க யானை வீழ்ந்து மடியும் வண்ணம் அதன்மீது எறிந்த கண்ணனின் ஆழிப்படை அப்பகைவர்கள் அஞ்சி ஓடுமாறு உடன் சென்று, அவ்வியானையின் உடலில் ஆழப்பதிந்து அதன் உயிர் போக்கும் காட்சி போன்று காட்சியளித்த அஞ்ஞாயிற்றின்'மறைவினைக் கண்டு மனம் மகிழ்ந்த மக்கள் கூட்டம், ஞாயிற்றின் ஒளி மறையச் சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டே வந்தது. ஒரு சிலர் மட்டும் கடற்கரை மணலில் அமர்ந்து, கவலை தோய்ந்த முகத்தினராய்க்

கடற்பரப்பையே நோக்கியவாறு காத்துக்கிடந்தனர். அவர்களெல்லாம், வாணிகம் கருதி வங்கம் ஏறிக் கடற்கடந்து சென்ற தத்தம் கணவன்மாரையும், தந்தையரையும், மைந்தர்களையும், அண்ணன் தம்பிமார்களையும் எதிர் நோக்கியிருப்பவராவர்.

வங்கம் ஏறிச் சென்றவர்களின் வருகையைக் காண வேண்டிய ஆர்வ மிகுதியால், அவர்கள், அம்மாலைக் காலத்தின் கொடுமையையும் பொருட்படுத்தினாரல்லர். கரையில் பரவும் இருளைக் காண வேண்டும் என்ற வேட்கை மிகுதியால், கடல் ஆரவாரம் செய்துகொண்டே, கரை நோக்கி விரைவதுபோல், கடலோர நீர், கரை நோக்கிப் பெருகிப் பாய்ந்தது. மலர்களில் படிந்து தேன் உண்டு திரிந்த வண்டுகள் மாலை வரவால் ஒளி மயங்கக் கண்டு, மலர்களை மறந்து அவ்விடம் விட்டு அகன்றன. அதனால் அவற்றின் ஒலி அடங்கிப் போன அக்கடற்கரை வெறிச்சோடிப் போயிற்று. கழி நீரில் மலர்ந்து மணம் நாறிய மலர்கள் வாய் மூடி வதங்கிப் போயின. உலகில் வாழும் அளவில் கோடி உயிர்கள் அனைத்தும் ஒரு சேர நடுங்கி அஞ்சுமாறு உலகை ஒருங்கே விழுங்கி அழிப்பது போல் இருள் சூழ்ந்து கொண்டது. அந்நிலையில் கொடிய பனி வேறு ஆங்குக் கூடியிருந்தோரை நடுங்கப் பண்ணிற்று. அந்நிலையிலும் அவர்கள் அவ்விடம் விட்டு அகன்றாரல்லர்.

அவ்வாறு ஆங்குக் காத்துக் கிடந்தவருள் நனி இளமைப் பருவத்தளாய நங்கை யொருத்தியும் இருந்தாள். அவளை அண்மையில் மணந்து கொண்ட அவள் கணவன் வாணிகம் கருதிக் கடல் கடந்து போயிருந்தான். அவள், அவன் மீது கொண்ட கரை கடந்த காதலால்,

அவன் பிரிவைத் தாங்கிக் கொள்ள மாட்டாது தளர்ந்து போயினாள். அவனைக் காணப் பெறாமையால் அவள் கண்கள் கலங்கினாள். அவன் வாராமை கண்டு அவள் சிந்தை செயலழிந்து நொந்தது. அவன் வந்து இன்பம் தாராமையால் இடர் உற்றது அவள் உள்ளம். வந்து அருள் கூர்ந்து அளிக்கும் அன்பு கலந்த இன்பத்தால் தணிவ தல்லாது, வேறு மருந்தாலோ, மந்திர மொழிகளாலோ தீரலாகாப் பெருநோய் அளித்த அவன், அந்நோய் என் உயிரைக் கொள்ளை கொள்வதன் முன் வந்து காத்திலனே!' என எண்ணிக் கலங்கினாள். இவ்வகை எண்ண அலைகளால் கலங்கிய உள்ளத்தோடு, அவன் வருகையை எதிர் நோக்கிக் காத்துக் கிடந்த அவள், தன்னைச் சூழ மக்கள் உள்ளனரே, தன் உள்ளத் துயர் அவர்க்குப் புலனாதல் கூடாதே, அவர் அஃது அறிந்து கொண்டால் அவனைப் பழிப்பரே, கணவனைக் கண்டோர் பழிக்கப் பார்த்திருப்பது கற்புடை மகளிர்க்குப் பொருந்தாதே, அதிலும் அவர் அவனைப் பழிக்கத் தானே காரணமாவது தனக்கு இழுக்காமே என, இவற்றுள் எதையும் அவள் எண்ணிப் பார்த்திலள். எண்ணிப் பார்க்கும் நிலையில் அவள் உள்ளமும் இல்லை. அதனால், தன் கண் முன்னே, கரை காண மாட்டாது பரந்து கிடந்த கடலை இமை கொட்டாது பார்த்திருந்த அவள், அக்கடல் அலை எழுப்பும் ஒலியைக் கேட்டதும், "எளிதில் அழிந்து போகாத காதல் நோயை எனக்கு அளித்த கணவன் என்னை மீண்டும் வந்து காணும் கருத்திலனாய்க் கலம் ஏறிச் சென்று விட்டான். அந்நினைவால் வருந்தும் என்னை இக்கடும் பனியும் கொடுமை செய்கிறது. அதனால் மாளாத் துயரில் ஆழ்ந்து போன என் உள்ளம்

கலங்கிக் கண்ணீர் வடிக்கிறது. இந்நிலையில், என் அருகிருந்து ஆறுதல் அளித்து அருள் புரிய வேண்டிய வரெல்லாம், என் நிலை கண்டு ஏதும் புரிந்திலர். ஆனால் என் முன் கிடந்து ஓயாது அலை எழுப்பும் இக்கடல் மட்டும் என் நோயைத் தன் நோயாகக் கொண்டு, உளம் நொந்து ஓலம் இடுகிறது. இது என்ன வியப்போ?

"காதல் நோயுற்றமையால் நான் இழந்து போன என் நலத்தை மீண்டும் என்பால் தந்து துணைபுரிவார் எவரும் இலரே என நினைந்து நைந்துருகும் என்னை, இக்கொடிய பனி மேலும் கொடுமைக் குள்ளாக்குகிறது. அதனால் துயருறும் என் நிலை கண்டு இரங்கி வருந்துவார் ஒருவரும் இலராக, இதோ என் முன் நின்று காட்சியளிக்கும் இம் மணற் குன்று, என் நிலைக்கு இரங்கி, உள்ளம் நெகிழ்ந்து உருகுவதுபோல், அலை வந்து அலைக்குந்தோறும் சிறுகச் சிறுகக் கரைந்து உருவிழந்து போகிறதே, இது என்ன வியப்போ?

"மாண்டு மடிந்தாலாவது என் மனத்துயர் மறையும். ஆனால், அவ்வாறு இறந்து போகாது இருந்து துயர் உறும் வண்ணம் வாராதிருந்து வருத்தும் என் காதலன் செயல் கண்டு செயலற்றுப்போன என் உள்ளம், மயங்கி மடங்கிக் கிடக்கின்றதாக, என் நிலை கண்டு இரங்குவதுபோல், இம்மரங்கள் எல்லாம் இலை குவிந்து வருந்துகின்றனவே! இது என்ன வியப்போ!" என வாய் திறந்து புலம்பினாள்.

அவள் புலம்பலொலி ஆங்கிருந்தோர் கருத்தை அவள்பால் ஈர்த்தது. அவர்கள் அவள் நனி இளமைப் பருவமும், அவள் நெஞ்சை வருத்தும் காதல் நோயின் கொடுமையும் கண்டு, அவள் நிலைக்குப் பெரிதும் இரங்கினர்; அந்நிலையில், சில கலங்கள் கரை வந்து

சேர்ந்தன. அவற்றிற்கிடையே தன் காதலனுக்குரிய கலமும் இருக்கக் கண்டாள். அவ்வளவே. அக்கலக் காட்சி, அவள் கணவன் வருகையைக் காட்டிவிடவே அவள் கலக்கம் இருந்த இடம் தெரியாது அழிந்தது; கண்களில் நீர் மறைந்தது; களிப்புக் களிநடம் புரிந்தது.

அவள் சற்று முன் கலங்கிக் கண்ணீர் விட்ட காட்சியைக் கண்டு வருந்திய மக்கள், கணவனைக் காணப் பெற்றதும் களிப்புக் கடலில் ஆழ்ந்து போன அந்தக் காட்சியையும் கண்ணுற்றனர். அவள் துயர் தீருமா என எண்ணிப் பார்க்கவும் இயலாதிருந்த அந்நிலை மாறி அவள், அவள் கணவனைப் பெற்று மகிழும் அந்நிலை வந்து வாய்ந்தது, அம்மம்ம அரிதினும் அரிதாம்! கண்ணிற் கெட்டிய தொலைவெங்கும் நோக்கினும் கரை புலப் படாத நடுக்கடலில் கலம் ஒன்று கவிழ்ந்து போகக் கடலில் வீழ்ந்து, நீந்த மாட்டாதோ, நீந்தவல்ல ஆற்றலை இழந்தோ, அக்கடல் வாழ் உயிரினங்கட்கு உணவாகியோ இறந்து போவது உறுதி. அது எந்நேரத்தில் வாய்த்து விடுமோ என எண்ணி இடர் உற்ற ஒருவர், தன் கண்முன், புணையாகிப் பயன்பட வல்ல பலகை ஒன்றை அலை கொண்டு வந்து அளிக்கப் பெறுவதோடு, அப்புணை, அவனை, அவன் சேர வேண்டிய துறைக்கண் இடர் இன்றிக் கொண்டு சேர்க்கவும் செய்யுமாயின், அவன் மகிழ்ச்சிக்கோர் எல்லை காணல் இயலுமோ? அவன் மகிழ்ச்சி அவள் மகிழ்ச்சியாயிற்று. 'கணவன் வருவன் என எண்ணு வதற்கும் இல்லையே! எப்போது வருவான் என அறிந்து கொள்வதும் இயலாதே! அதுகாறும் என் உயிர் அழிவுறாது வாழும் என்பதற்கு உறுதி இல்லையே! என வருந்தி யிருந்தவளின் வருத்தமெல்லாம் ஒருங்கே

*மறைதலோடு, அவள் உள்ளம் மகிழ்ச்சி வெள்ளத்தால் நிறையும் வண்ணம், பிரிந்து போன கணவன், அவள் எதிர்பாரா நிலையில் வந்து சேரக் கண்டு மனங்களித்துச் செருக்குற்ற அவளையும், வந்து வாழ்வளித்த அவள் கணவனையும் வாழ்த்தினர்.*

“மல்லரை மறம் சாய்த்த மலர்த்தண்தார் அகலத்தோன்
ஒல்லாதார் உடன்றுஓட உருத்துஉடன் எறிதலின்
கொல்யானை அணிநுதல் அழுத்திய ஆழிபோல்
கல்சேர்பு ஞாயிறு கதிர்வாங்கி மறைதலின்
இருங்கடல் ஒலித்து ஆங்கே இரவுக்காண் பதுபோலப்
பெருங்கடல் ஓதநீர் வீங்குபு கரைசேரப்,
போஒய வண்டினால் புல்லென்ற துறையவாய்ப்
பாயல்கொள் பவைபோலக் கயமலர் வாய்கூம்ப
ஒருநிலையே நடுக்குற்று இவ்வுலகெலாம் அச்சுற
இருநிலம் பெயர்ப்பன்ன எவ்வங்கூர் மருள்மாலை,

தவலில்நோய் செய்தவர்க் காணாமை நினைத்தலின்
இகல் இடும்பனிதின எவ்வத்துள் ஆழ்ந்து ஆங்கே
கவலைகொள் நெஞ்சினேன் கலுழ்தரக் கடல்நோக்கி
அவலம் மெய்க்கொண்டது போலும்; அஃது
எவன்கொலோ?

நடுங்குநோய் செய்தவர் நல்காமை நினைத்தலின்
கடும்பனி கைம்மிகக் கையாற்றுள் ஆழ்ந்து ஆங்கே
நடுங்குநோய் உழந்தஎன் நலன் அழிய, மணல்நோக்கி
இடும்பைநோய்க்கு இகுவனபோலும்; அஃதுஎவன்
கொலோ?

வையினர்; நலன்உண்டார் வாராமை நினைத்தலின்
கையறு நெஞ்சினேன் கலக்கத்துள் ஆழ்ந்து ஆங்கே.
மையல்கொள் நெஞ்சோடு மயக்கத்தால் மரன்நோக்கி
எவ்வத்தால் இயன்றபோல் இலைகூம்பல் எவன் கொலோ?

எனவாங்கு,
கரைகாணாப் பெளவத்துக் கலம் சிதைந்து ஆழ்பவன்
திரைதரப் புணைபெற்றுத் தீதின்றி உய்ந்தாங்கு
விரைவனர் காதலர் புகுதர,
நிரைதொடி துயரம் நீங்கின்றால் விரைந்தே.”

*மாலைப் பொழுது கண்டு தலைவி ஆற்றாளாக, அந்நிலையில் தலைவன் வரத் தலைவி துயர் தீர்ந்து மகிழ்ந்ததை வாயிலார் கண்டு, தம்முள்ளே வாழ்த்திக் கூறியது.*

1. ஒல்லாதார் — பகைவர்; உருத்து — சினந்து. 3. ஆழி — சக்கரம்; 4. கல் — மலை. 5. இருங்கடல் — பெரிய கடல். 6. வீங்குபு — பெருகி. 7. போஒய — போய்விட்ட; வண்டு போயதால் என மாற்றுக. புல்லென்ற — தனிமையுணர்ச்சி மிக்க. 8. பாயல் — உறக்கம். கயமலர் — நீர்ப்பூக்கள். 10. பெயர்ப்பு — அழிவு. எவ்வம் — துன்பம். கூர் — மிக்க. 11. தவல் இல் — அறிவு இல்லாத. 12. இகல் இடும் — மாறுபட்டுத் துயர் தரும்; தின — துன்புறுத்த; எவ்வம் — நோய். 13. கலுழ்தர — வருத்த. 14. அவலம் — அத்துயரை. 16. கையாறு — செயலறுதல்; அதாவது அழிதல். 17. மணல் — மணல்மேடு. 18. இடுவன — கரைவன. 19. வையினர் — வாராதே தங்கிவிட்டவர். 24. பெளவம் — கடல்; கலம் — நாவாய். 25. திரை — அலை; புணை — தெப்பம்; உய்ந்தாங்கு — பிழைத்ததுபோல், விரைவனர் — விரைந்து.

# 18

## வல்லே கடவுமதி

குற்றம் அற்ற கோவேந்தர் குடியில் வந்தவன் அக்குரிசில்! வேற்படைகளை வரிசை வரிசையாகப் பொருத்தி வலிவுடையதாகப் பண்ணிய, பேரழகு வாய்ந்த நெடிய பெரிய கதவுகளைக் கொண்ட பகையரசர்களின் பேரரண்களைத் தம் களிற்றுப் படையால் அழித்துக் கைக்கொண்டு ஆளும் ஆற்றல் மிக்க அரசர் குடியில் வந்தவன் அவன். வேந்தர் குடியில் வந்த அவன்பால் வாய்மை வழுவுவது போலும் குறைபாடுகளைக் காண்பது அரிதினும் அரிதாம். வாய்மை வழுவாமை முதலாம் விழுமிய குணங்கள் பலவற்றின் வாழ்விடமாய் விளங்கினான். பேரரசர் குடியில் வந்து ஆற்றலும், அரிய பண்புகளும் அளிக்கும் புகழினைப் பெறத் துடிக்கும் உள்ளம் உடையனாய அவன், அவ்வாசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்கு வேண்டும் உடல் அமைப்பும் பெற்றிருந்தான். பகைத்து எதிர்வருவது பெரிய மலையே யாயினும், அஞ்சாது எதிர் நின்று, அதன் தாக்குதலை

எளிதில் தாங்கி அழிக்கவல்ல ஆற்றலும், அகலமும் உடையது அவன் மார்பு. வெற்றிச் செல்வம் வாய்த்தற்கு ஏற்ற வலியுடையதாய் விளங்கிய அவன் வடிவம், கண்டாரை மகிழ்விக்கும் கட்டழகும் வாய்ந்திருந்தது. அழகு நடம்புரியும் அகன்ற மார்புடையனாய அவன், தன் அரசு நிலைக்கு ஏற்ற அணிகளாலும், அழகிய மாலைகளாலும் அம் மார்பை அணிசெய்து மகிழும் மன எழுச்சியும் கொண்டிருந்தான். அரசிளங்குமரன், இவ்வாறு பிறப்பால், பேராண்மையால், அன்பால், அரிய குணங்களால், அழகொழுகும் வடிவால் சிறப்புற்றுத் திகழ்வது தெரிந்து, அவன் தன் மீது கொண்ட காதலை ஏற்றுக் கொண்டாள் ஓர் அழகு இளம் நங்கை.

அவர் நாட்டுக் கடற்கரைக்கண் இருந்த அழகிய புன்னை மரச் சோலையே, அவர்கள் ஒருவரையொருவர் கண்டு, காதல் உணர்வுகளால் தூண்டப் பெற்றுக் களிப்புற்ற இடமாம். காவல் மிக்க அச்சோலையில், நெய்தல் நிலத்து மலர்கள் அனைத்தினும் வண்ணத்தால், வடிவால், வாசனையால் மாண்பு மிகுந்த மலர்களை யுடையதான புன்னை மரத்து நிழலில், கலந்து உறவாடிய நாட்கள் பலவாம். அவ்வாறு அவர் கொண்ட காதலுணர்வு, அவ்விருவர் பெற்றோரும் அறியாவாறே வளர்ந்து உறுதி பெற்றது. அவள் அவனோடு இரண்டறக் கலந்து விட்டாள். அவன் இல்லாமல் அவளால் உயிர் வாழ்வது இயலாதாயிற்று. அவனை ஒரு நாள் காண முடியாது போயினும், அவள் நெஞ்சு நனிமிக நடுங்கலாயிற்று. ஆனால், அரசர் குடியில் பிறந்து பகை வெல்லும் பணி மேற்கொண்டிருக்கும் அவனால், எந்நேரத்திலும் அவள் பின் திரிவது இயலாதாயிற்று.

அவன் வருகை, இடையிடையே தடையுற்றுப் போய்விடும்; பல நாட்கள் அவனைக் காண்பதற்கே இயலாதாம். அந்நாட்களி லெல்லாம் அவள் நனிமிக வருந்தினாள். அவனைக் காணாமையால் அவள் அகத்தில் எழும் கலக்கம், அவனைக் காணா நாட்களின் எண்ணிக்கை வளர வளரத் தானும் வளர்ந்து பெருகலாயிற்று. அவள் உள்ளத்தைப் பற்றி வருத்திய அக்காதல் நோய், அவள் உடலையும் வருத்தத் தலைப்பட்டது. தோள் தளர்ந்தது; ஒரு காலத்தில் இறுகச் செறித்து இட்ட தொடியணி தானே கழன்றோடத் தொடங்கிற்று; தொடியணி இழந்த தோளின் தோற்றம் கண்டு அப்பெண் கண்ணீர் சொரிந்து கலங்கினாள். அழுது அழுது அக்கண்களும் அழகிழந்து போயின; குவளை மலர்க் கண்ணள் எனப் புகழ்ந்து பாராட்டப் பெற்ற அவை, அம்மலர்கள் கண்டு இகழ்தற்கு ஏதுவாய்ப் பொலிவிழந்து போயின! பொதுவாகக் கூறினால், அவள் மனநோய்வாய்ப் பட்டவளாயினாள்.

அவள் நிலை கண்டு தோழி நெடிது வருந்தினாள். அவள் உடல் நலக் கேடு கண்டு கலங்கியதினும், அது காணும் அவள் பெற்றோர் அந்நிலைக்கான காரணத்தை உசாவி அறிந்து கொள்வரோ, அவர் அறிந்துகொண்டால் இக்கன்னிப் பெண்ணின் கற்பு என்னாம், அக்காவலன் மகனின் காதல்தான் என்னாம் என்றெல் லாம் எண்ணியே பெரிதும் கலங்கினாள். மேலும் ஊரார், 'இவளை இன்னது செய்தான் இவன்' என அறிந்து, காதல் கொண்ட காரிகையைக் கைவிட்டு வாழ்கின்ற அவன் ஒரு காவலன் மகனாமே. அவன் குடிப் பண்பு அவ்வளவுதான் போலும்; அவன் வாய்மை வளமும் அன்னதோ?' என

அவனைப் பழிப்பராயின, குடிப்பிறப்பாலும், பாராட்டத் தக்க பண்புகளாலும் அவன் பெற்ற புகழ் என்னாம் என அவன் புகழ்க் கேடு குறித்தும் கவலையுற்றாள். கவலை யுற்றவள், கண்ணீர் விட்டுக் கலங்கியிருக்கும் அப்பெண் போல் தானும் கவலையுற்று விடுவதால் எப்பயனும் உண்டாகாது. இதற்கு ஒரு வழி காணுதல் வேண்டும்; வாய் மூடிக் கிடப்பதால் பயன் இல்லை; ஆனால், எதையும் செய்தல் அவளால் இயலாது. அதையும் நானே செய்தல் வேண்டும்!' என உறுதி பூண்டாள்.

உடனே, ஒரு நாழியும் கழியாது, அவன் ஊர்க்குச் சென்று அவனைக் கண்டாள். ஆங்கு அவன் கடற்கரை யருகே அமர்ந்து, காற்று விரைந்து அடிக்க அடிக்க மலை போல் எழும் அலைகள், கடல் அடியினின்றும் வெளிப்படும் வலம்புரிச் சங்குகள் இணை இணையாகத் தோன்றித் தம்மோடே அலைப்புண்டு வரக் கரையை நோக்கிப் பாய்ந்து, அக்கரைக்கண், காற்று எழுப்ப எழுந்து பெருங் கோட்டை போல் காட்சியளிக்கும் மணல் மேட்டின் உச்சிக்கண் மோதி மோதி மீளும் காட்சியைக் கண்டு, அக்காட்சி, தன் நாற்படையின் நடுநாயகமாய் விளங்கும் யானைப்படை, பாகர் செலுத்த விரைந்து ஓடித், தத்தம் வெண்ணிறத் தந்தங்களால், பகைவர்க்குரிய கோட்டை வாயிலை அடைத்து நிற்கும் வலிய நெடிய கதவுகள் பிளந்து போமாறு பல முறை மோதி மோதி அழிக்கும் வெற்றிப் புகழ் விளங்கும் அக் காட்சியை நினைவூட்ட, நினைந்து, நெஞ்சுக்குள்ளே மகிழ்ந்திருந்தான். அவனை அந்நிலையில் கண்ட தோழி, “அலைகடல் காட்சியில், தன் படை அமர் வெல்லும் காட்சியைக் கண்டு களிப்புறும் இவன் ஊரார் உரைக்கும் அலரால்

இவன் புகழ்க் கோட்டை அழிவுறுவதை அறிந்திலனே, என்னே இவன் இயல்பு!" எனத் தனக்குள்ளே எண்ணி எள்ளி நகையாடினாள்.

நகையொலி கேட்டு, அவன் அவளைத் திரும்பி நோக்கினான். உடனே, அவள் அவனை அணுகி, "அன்ப! உலகில் பிறந்தார் ஒவ்வொருவரும் தாம் பிறந்த குடியின் பெருமையைக் குன்றின்மேல் ஏற்றி வைத்த விளக்கென விளங்க வைக்கவே விழைகின்றனர்; விரைகின்றனர். ஆனால் நீயோ, அக் குடிப் புகழ் குன்றுவதற்கு ஏதுவாய சிறுமைகளையே செய்து சீரழிகின்றனை. பெரியோர் தம் வாய்ச்சொல் வழுவாதிருத்தல் வேண்டும்; அதுவே தம்மை வாழ்விக்கும்; தம் உயர் புகழிற்கு அதுவே உற்ற துணையாம் என அறிந்து, எப்பாடு பட்டேனும், எத்தகைய இடர் நேர்ந்தபோதிலும், சொன்ன சொல்லை நின்று காக்கின்றனர். ஆனால் நீயோ, வாய்மையில் வழுவாது நிற்பதால் விழுமிய இன்பம் வலிய வந்து வாய்க்கிறது என்பதை அறிந்தும், அதைக் காத்துக் கொள்ளக் கருதுகின்றிலை. அதனால், பிறவிக் கடன் புகழ் பெற்று வாழ்தலாம் என்ற உயர்ந்த உண்மையை உணர்ந்து, அப்புகழ் பெறப் பாடுபடுவதற்கு மாறாக, உள்ள புகழ் உருவிழந்து போதற்காம் செயல்களையே உவந்து மேற் கொள்கின்றனை. என்னே நின் மடமை!" என இடித் துரைத்தாள்.

குடிப்புகழ் காப்பதாலும், வாய்மைக்கண் வழுவாது நிற்பதாலும் தன் புகழை நிலைநாட்டத் துடித்து நிற்கும் இவ்விளைஞன், தோழி, "உன் புகழிற்குக் கேடு நிகழ்ந்து விட்டது. அதுவும் உன்னாலேயே!" என உரைக்கக் கேட்டவுடனே நிலை கலங்கி விட்டான். அக்கேடு

நிகழ்வது எவ்வாறு, அக்கேடு உண்டாகத் தான் புரிந்த பிழை யாது என்பவற்றை அறியத் துடித்தான்.

இளைஞன் உள்ளத் துடிப்பை உணர்ந்து கொண்ட தோழி, "அன்ப! உன் காதலி — என் தோழி — உன்னைக் காணா முன் — நீ அவள் உள்ளத்தைக் கவரா முன் — அவள் பேரழகு பெற்று விளங்கினாள். கண்டார் மருளும் கவின் பெற்றிருந்தாள். அத்தகையாள், உன்னை, அன்று, அப் புன்னை மரச் சோலையில் கண்டு காதல் கொண்டாள். அதன் பயன், இன்று அவ்வழகு அவளை விட்டு அகன்று விட்டது; தொடி நெகிழ்ந்து ஓடுமாறு தோள்கள் மெலிந்து விட்டன; கருவிழிகள் தம் கவின் இழந்து கலங்கின; உள்ள நோய், அவள் உடலைப்பற்றி வருத்தி விட்டது; இத்தனை கேடு உன்னால்! காதல் கொண்ட அவளை விரைந்து வந்து மணந்து கொண்டு, அவளுக்கு மனம் நிறை வாழ்வளிக்க மனங் கொள்ளாது மறைந்து வாழ்வதால் வந்த பயன் இது. நீ செய்யும் இப் பெரும் பிழையால் உன் குடிப் புகழ் குன்றிவிட்டது. 'பிரியவிடேன்! பிரிந்து வாழேன்!' என அன்று உரைத்த உரை பொய்த்து விட்டதால், புகழ்க் கேடுற்றனை நீ. அன்ப! இந்நிலை உனக்கு ஆகாது. தன் மார்பில் வறிதே கிடந்து அலையும் முத்து வடமும், மலர் மாலையும், மலையை எதிர்க்கவும் மலைக்காத உன் அகன்ற மார்பொடு பொருந்திப் பயன் பெறுவதை விரும்புகிறது அவள் உள்ளம். இது பெறா ஏக்கத்தால் நெட்டுயிர்த்து நெடிது வருந்துகிறாள் அவள். அவள் வருந்துவதால், உன் புகழ் அழிவுப் பாதையில் அடியெடுத்து வைத்து விடுமோ என அஞ்சுகிறது என் நெஞ்சு. அது நிகழா வண்ணம், உன் நெடிய வலிய தேர், அவள் வரைவு முயற்சி மேற்கொண்டு

*இன்றே விரைந்து போய் வினையாற்றுமாறு உன்னை வணங்கி வேண்டிக் கொள்கிறேன்!" எனக் கூறி வரைவு கடாயினாள்.*

"துணைபுணர்ந்து எழுதரும் தூநிற வலம்புரி
இணை திரள் மருப்பாக, எறிவளி பாகனா,
அயில்திணி நெடுங்கதவு அமைத்து அடைத்து அணி கொண்ட
எயில்அடு களிறேபோல் இடுமணல் நெடுங்கோட்டைப்
பயில்திரை நடுநன்னாள் பாய்ந்துறூஉம் துறைவ! கேள்;

கடிமலர்ப் புன்னைக்கீழ்க் காரிகை தோற்றாளைத்
தொடி நெகிழ்ந்த தோளளாத் துறப்பாயால்; மற்றுநின்
குடிமைக்கண் பெரியதோர் குற்றமாய்க் கிடவாதோ?

ஆய்மலர் புன்னைக்கீழ் அணிநலம் தோற்றாளை
நோய்மலி நிலையளாத் துறப்பாயால்; மற்றுநின்
வாய்மைக்கண் பெரியதோர் வஞ்சமாய்க் கிடவாதோ?

திகழ்மலர்ப்புன் னைக்கீழ்த் திருநலம் தோற்றாளை
இகழ்மலர்க் கண்ணளாத் துறப்பாயால்; மற்றுநின்
புகழ்மைக்கண் பெரியதோர் புகராகிக் கிடவாதோ?

எனவாங்கு,
சொல்லக் கேட்டனை ஆயின், வல்லே
அணிகிளர் நெடுவரை அலைக்கும் நின் அகலத்து
மணிகிளர் ஆரம் தாரொடு துயல்வர
உயங்கினள் உயிர்க்கும் என் தோழிக்கு
இயங்கொலி நெடுந்திண் தேர் கடவுமதி விரைந்தே."

*வரையாது வந்தொழுகும் தலைவனைத் தோழி வரைவு கடாயது.*

**நெய்தல்—10**

1. தூநிறம் – தூயநிறம். வலம்புரி – வலம்புரிச் சங்கு. 2. இணைதிரள் – இணைந்து திரண்ட; மருப்பு – தந்தம். எறிவளி – வீசும் காற்று. 3. அயில்–வேல்; திணி – தைத்து வைத்த. 4. எயில் அடு – கோட்டையை அழிக்கும்; 5. உறூஉம் – அழிக்கும். 6. காரிகை – அழகு. 12. திருநலம் – கண்டவர் வியந்து பாராட்டும் பேரழகு. 13. இகழ்மலர்க் கண்ணள் என்பதை மலர் இகழும் கண்ணன் என மாற்றுக. 14. புகர் – குற்றம். 16. வல்லே – விரைந்து. 17. அணிகிளர் – அழகு விளங்கும். அலைக்கும் – வருந்தும்: அகலம் – மார்பு. 18. துயல்வர – அசைய. 19. உயங்கினள் – வருந்தி. உயிர்க்கும் – பெருமூச்சு விடும். 20. கடவுமதி – செலுத்துவாயாக.

# 19

## ஏறுக தேரே!

கண் கவரும் அழகு மிக்க கடற்கரையில் அலை வீசும் நீர் அருகே அமர்ந்து, நீல நிறக் கடலையும் அக் கடலில் தோன்றிக் கரையில் மோதி மீளும் அலைகளையும், அவ்வலைகள் கொண்டு வந்து குவிக்கும் மணல் மேட்டையும், அம்மணல் மேட்டில் மகிழ்ந்து ஆடும் நண்டுகளையும், அந்நண்டுகள் நகர்ந்தோடுங்கால், அம்மணல் மீது வரி வரியாக விழும் கோடுகளையும் கண்டு மகிழ்ந்திருந்தான், காளைப் பருவம் பெற்ற கவின் மிக்க ஓர் இளைஞன். அக் காட்சியில் தன் கருத்திழந்து வீற்றிருந்த அவன் அருகே வந்து சேர்ந்தாள் ஒரு பெண். தோற்றம் பெருங்குடி வந்த மகளிரோ டொப்ப வளர்ந்து, அன்னோரோடு தோழமை பூண்டவள் போல் காட்டிற்று. வந்து நின்றவள் இளைஞனின் கண்ணோக்குச் செல்லும் காட்சிகளையும், அக்காட்சிகளைக் காண்பதால் அவன் முகத்தில் நிழலாடும் அவன் நெஞ்சின் அலைகளையும் உற்று நோக்கினாள்.

அவனை அணுகச் சென்று நின்று, 'அன்ப! இம்மணல் மேடும், இதன்மீது ஓடியும் உருண்டும் ஆடி மகிழும் இந் நண்டுகளும், இந் நண்டுகளின் கால்கள் ஈர்த்துச் செய்த இவ்வரிக் கோடுகளும் முறையே, ஆடஆட, மனம் கிளர்ச்சி கொள்வதல்லது சோர்வடைதல் செய்யாத சூதாடு களத்தையும், அக் களத்தில் உருட்ட உருட்ட உருண்டோடும் சூதாடு கருவிகளையும், அக்கவறுகள் உருண்டு உருண்டு ஓடியதால் வரி வரியாகத் தோன்றும் வடுக்களையும் உன் நெஞ்சிற்கு நினைவூட்டுகின்றனவோ? அத்துணை மெய்ம்மறந்து நின்று விட்டனையே!" எனக் கேட்டாள்.

அவ்விளைஞன் அப் பெண்ணை அறிவான்; அவள் அவ்விளைஞனின் காதலைக் கொள்ளை கொண்ட ஒருத்தியின் உயிர்த் தோழியாவள். இளைஞன் மீது காதல் கொண்டு களிப்புற்று வாழ்ந்த தன் தோழி, அவனைச் சின்னாட்களாகக் காண இயலாமையால் கலங்கித் துயர் உறுவதையும், பிறந்த நாள் தொட்டுக் கலக்கம் என்பதையே காணாதவள், சின்னாட்களாகக் கண்ணீரும் கம்பலையுமாக இருப்பது காணும் ஊராரும் உற்றாரும் அவள் களவில் மேற்கொண்டிருக்கும் காதலைக் கண்டு கொண்டு அவளையும், அவளுக்குக் காதல் நோய் அளித்துவிட்டுக் கவலையற்றுத் திரியும் அவனையும் அலர் கூறிப் பழிப்பதையும், அதனால் அவள் துயர் அளவிறந்து பெருகி அவள் நலத்தை அழிப்பதையும் அவனுக்குக் கூறி, அவ் வருத்தமெல்லாம் மறைய வேண்டின், அவன் அவளைப் பலர் அறிய மணந்து கொள்ளுதல் வேண்டும்; அதையும் மிக மிக விரைவில் மேற்கொள்ளுதல் வேண்டும் என்பதை அவனுக்கு அறிவிக்கவே அவள் ஆங்கு வந்திருந்தாள்.

வந்த இடத்தில் தன் தோழி வருந்த வாராதிருந்த அவ்விளைஞன், அவளை வரைந்து கொள்ளும் கருத்தின்றியிருப்பதோடு, வரையாப் பெருநிதி சேர்க்கும் கருத்துடையனாய், அப்பொருள் கிடைக்கும் வெளிநாடு போவதற்கு வேண்டும் முயற்சி மேற்கொண்டிருப்பதையும் உணர்ந்தாள் தோழி. இளைஞன் உள்ளம் பொருள் வேட்கையில் ஆழ்ந்து போய் விட்டமையால், இது இன்ப நுகர்வை மறந்து கிடக்கிறது. அதனாலேயே அவன் அவளை மணந்து வாழ மனங்கொண்டிலன் என்பதையும் கண்டு கொண்டாள். இந்நிலையில் அவள் படும் துயரை எவ்வளவுதான் எடுத்துக் கூறினாலும் அவன் உள்ளம் அதை உணர்ந்து கொள்ளாது. பொருளீட்டுவதில் சென்ற ஆசை அழிந்தாலல்லது, இன்ப நுகர்ச்சியில் அதன் நாட்டம் செல்லாது. ஆகவே, அவ்வாசை அழிதற்காம் வழியினையே முதற்கண் அறிந்து மேற்கொள்ள வேண்டும் எனத் துணிந்தாள். உள்ளம் எந்த ஒரு பொருளின்பால் ஆசை கொண்டுளதோ, அப் பொருள் நிலையற்றது, எளிதில் அழியக் கூடியது, அதனால் அது குறித்துத் தான் படும் பாடெல்லாம் பயனிழந்து போம் என்பதை உணர்ந்து கொண்டால், உணர்ந்த அப்பொழுதே அதன்பால் ஆசை அற்றுப் போகும். இவ்வுண்மையை அவள் உணர்வாளாதலின், காதலை மறந்து, காதலி கண்ணீர் சொரியக் கலங்கி நிற்பதையும் கருதாது சென்று தேடிப் பெற நினைக்கும் செல்வத்தின் நிலையற்ற தன்மையினை இளைஞன் நெஞ்சு கொளக் கூற எண்ணினாள்.

எண்ணியவள், அவன் காதலியின் தோழியாகிய தனக்குச் செல்வ நிலையாமை போலும் சிறந்த

உண்மைகளை எடுத்துரைக்கும் உரிமை இல்லை; மேலும் அவர் காதல் வளர, வாழத், துணைபுரியக் கடமைப்பட்டு, அதற்காம் வழிகாண வந்த தான், அதை விடுத்து இதைக் கூறுதல் பிறிதொன்று கூறலாய பெரும் பிழையாம் எனக் கருதினமையால், கூற முன்வந்த அவ்வறிவுரையினைத் தனித்தெடுத்துக் கூறாது, தான் கூறவந்த அவள் துயர் நிலையைக் கூறுங்கால், அவன் அதை நன்கு உணர்ந்து கொள்ளும் வண்ணம் எடுத்தாளும் உவமைகள் வழியாகக் கூறத் துணிந்தாள்.

"அன்ப! என் தோழி, உன் காதல் உள்ளம் கண்டு களித்து மகிழ்ந்தவள். இன்று, நீ அவளை மணக்க மனங்கொள்ளாது மறந்து கிடப்பதால், உள்ளம் உடைந்து உறுதுயர் உறுகின்றாள். அன்று மகிழ்ந்திருந்த மாண்புமிகு நிலை எங்கே! இன்று இன்பநிலை இழந்து இறக்கும் நிலையுற்றுக் கிடக்கும் இழிநிலை எங்கே! அன்ப! வெண் முத்துக்களை வாரி இறைத்து வைத்தாற் போன்ற மணல் செறிந்த மாண்பு மிக்க கடற்கரைக்கண், உன் அன்பை ஆரப்பெற்ற மகிழ்ச்சியால் சூதாடு களத்தில் கவறுகளைக் கையில் எடுத்து உருட்டத் தொடங்கிய போதே, முன்தாயம் இட்டால் முன் மனை கட்டி முன்னேறலாம் என எண்ணி உருட்டி, எண்ணியவாறே முன் தாயமும், அதை அடுத்துப் பத்தும் விழக் கண்ட ஒருவன் உள்ளம் எத்துணை இறும்பூது கொள்ளுமோ அத்துணை இறும்பூதுற்றவள், இன்று, நீ அவள் அன்பை மறந்து அவளைக் கைவிட்டு வாழ்வதால், தன் அக அழகும் புற அழகும் ஒருங்கே அழிந்து போக, அச் சூதாடு களத்தில் ஈரைந்து, ஈராறு எனப் பெருந்தாயம் இட வேண்டிய நேரத்தில், ஈரிரண்டு, இரு மூன்று எனச் சிறுதாயம் இட்டு,

ஆட்டமும் தோற்று, ஆட்டத்தில் பந்தயமாக வைத்த பெரும் பொருளையும் இழந்தவன் போல் இரங்கத்தக்க இழிநிலை உற்றும் இறவாது கிடக்கின்றனள்.

"அன்ப! உங்கள் காதல் விளையாட்டு பிறர் காண்பதால் இடையறவு உற்றுப் போகாவண்ணம், அதை மறைத்துக் காக்கவல்ல முடத்தாழை மரங்கள் நெருங்க வளர்ந்த முடுக்கருக்குள்ளே, நீ வந்து அன்பு காட்டத், தன்னை மறந்து இன்பத்தில் திளைத்து, சூதாடு களத்தில் ஈரிரண்டு, இரு மூன்று எனச் சிறுதாயம் இட்டால் வெற்றி எளிதில் வாய்க்கும்; அவ்வாறே விழாதோ என ஏங்கிக் கவறு உருட்ட, அவன் எதிர்பார்த்தவாறே சிறுதாயம் விழக்கண்டவன்போல், களிப்புக் கடலில் கரைகாணாப் பேரின்பம் கண்டவள், இன்று, மணப் பரிசாக அவள் பெற்றோர் வேண்டும் பெரும் பொருளை இயல்பாகவே பெற்று வாழும் பெரியோனாய நீ, அதைச் செய்யாது, மேலும் பொருளீட்டும் முயற்சிகளையே கருத்தில் கொண்டு காலம் கடத்துவதால், அச் சூதாட்டத்தில் அவன் அவ்வாறு எதிர் பார்த்ததற்கு மாறாக ஈரைந்து ஈராறு எனப் பெருந்தாயம் வீழ்ந்தமையால் ஆட்டத்தில் தோற்றுப் பந்தயப் பொருளையும் இழந்தவன்போல் பெருந்துயர் உற்றுக் கிடக்கிறாள்.

"அன்ப! நறுமணம் நாறும் நல்ல புன்னை மரத்தின் நிழலில் விரும்பி வந்து நீ அருள் புரிய, அன்று, சூதாடு களத்தில் ஒரு தாயம் வேண்டிக் கவறுகளை உருட்ட, அவ்வொரு தாயம் வீழ்ந்ததோடு, மறுதாயமும் உடன் விழப் பெற்றவன் மனச் செருக்குற்று மகிழ்வதுபோல் மகிழ்ந்தவள், இன்று, நீ வரைபொருள் ஈட்டிவந்து பின்னர் வரைந்து கொள்வேன் என வரைவிற்கு வரையறை

வைத்துப் பிரியக் கருதியதை அறிந்து, ஆட்டத்தில் வெற்றி இரு தாய அளவில் இருக்கக் கண்டு, அது பெறும் ஆசையோடு கவறுகளை உருட்டியக்கால், ஒரு தாயமே விழப்பெற்று உறுபொருள் இழந்தவன் உள்ளம்போல், நின்ற துயரில் ஆழ்ந்து கிடக்கின்றாள்.

"அன்ப! மணல் மேட்டிலும், தாழைப் புதரிலும், புன்னை நிழலிலும் உனக்குப் பேரின்பம் அளித்து உன்னை மகிழப் பண்ணியவள், இவ்வாறு உன் பிரிவால் வருந்தி வாடுவது பொருந்துமோ? அன்ப! நீ பிரிந்து சென்று பெரும்பாடு பட்டுச் சேர்க்கும் பெருஞ்செல்வத் திலும், அவள் நலம் சிறப்புடைத்து. தம்மை மறந்து மகிழ்ச்சியில் திளைக்குமாறு ஒருவரை அடைந்த மறுகணமே, அவர் மீளாத் துயரில் ஆழ்ந்து மடிந்து போமாறு அவரை விட்டுப் பிரியும் குறைபாடுடைத்து, நீ ஈட்டிவரச் செல்லும் பொருள். ஆனால் இவள் நலனோ, அத்தகைத்தன்று. இன்று உன்னை அடைந்து உனக்கு இன்பம் ஊட்டும் இவள் நலம் நீ உள்ளனவும், அவள் உள்ளனவும் உன்னை விட்டுப் பிரியாது பேரின்பம் நல்கும் நலம் உடையது. அத்தகையாள், உன் பிரிவால் ஊரார் கூறும் அலரால் அழிந்து போகாவாறு அவளை வரைந்து கொண்டு, ஆரத்தழுவி இன்பம் கொள்ளும் உரிமையினை உண்டாக்கிக் கொள்ளற்காம் வழி வகைகளை ஆராய்ந்து, அவற்றை விரைந்து வினையாற்ற, நீ இன்றே தேர் ஏறிச் செல்வாயாக! உன் பிரிவறிந்து இவளை விட்டுப் பிரிந்து போன இவள் நலமும், இவளை மீண்டும் வந்து அடையுமாக!" என வேண்டிக் கொண்டாள்.

**"இவர்திமில் எறிதிரை ஈண்டிவந்து அலைத்தக்கால்**
**உவறுநீர் உயர்எக்கர் அலவன் ஆடு அளைவரித்**

தவலில்தண் கழகத்துத் தவிராது வட்டிப்பக்
கவறுஉற்ற வடுவேய்க்கும் காமர் பூங்கடற் சேர்ப்ப!

முத்துஉறழ் மணல் எக்கர் அளித்தக்கால், முன்ஆயம்
பத்துருவம் பெற்றவன் மனம்போல நந்தியாள்,
அத்திறத்து நீ நீங்க அணிவாடி, அவ்வாயம்
வித்தத்தால் தோற்றான்போல் வெய்துயர் உழப்பவோ?
முடத்தாழை முடுக்கருள் அளித்தக்கால், வித்தாயம்
இடைத்தங்கக் கண்டவன் மனம்போல நந்தியாள்,
கொடைத்தக்காய் நீ ஆயின், எறியல்லாக் கதியோடி
உடைப்பொதி இழந்தான்போல் உறுதுயர் உழப்பவோ?

நறுவீதாழ் புன்னைக்கீழ் நயந்துநீ அளித்தக்கால்
மறுவித்தம் இட்டவன் மனம்போல நந்தியாள்,
அறிவித்து நீ நீங்கக் கருதியாய்க்கு அப்பொருள்
சிறுவித்தம் இட்டான்போல் செறிதுயர் உழப்பவோ?
ஆங்கு,
கொண்டு பலர்தூற்றும் கௌவை அஞ்சாய்
தீண்டற்கு அருளித், திறன்அறிந்து எழீஇப்
பாண்டியம் செய்வான் பொருளினும்
ஈண்டுக இவள் நலம்; ஏறுக தேரே."

*வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரியக் கருதிய தலைவனைத் தோழி, தலைவியது ஆற்றாமை கூறி வரைவு கடாயது.*

1. இவர் – பரந்து தோன்றும்; திமில் – மீன்படகு. ஈண்டி – திரண்டு. 2. அளை – ஆடிப்புரளுதல். 3. தவல் இல் – கெடுதல் இல்லாத, மனச்செருக்குக் குறையாத; கழகம் – சூதாடு களம்; தவிராது – ஆர்வம் குறையாமல்; வட்டிப்ப – உருட்ட. 4. கவறு – சூதாடு கருவி. 6. நந்தியாள் – மகிழ்ச்சியில் மிகுந்தவள். 8. வித்தம்

– சிறுதாயம். 9. வித்தாயம் – சிறு தாயம். 11. ஆயின் – பொருளீட்டும் முயற்சிகளை ஆராய்ந்து மேற்கொள்ளின்; எறியல்லாக் கதியோடி – எண்ணி உருட்டிய நிலையில் நில்லாது பெருக ஓடி, அதாவது பெருந்தாயமாகி. 18. கௌவை – அலர். 19. தீண்டற்கு அருளி – மணந்து தழுவ எண்ணங் கொண்டு; திறன் அறிந்து – திருமணத்திற்காம் வழி வகைகளை ஆராய்ந்து; எழீஇ – முயற்சி மேற்கொண்டு. 20. பாண்டியம் செய்வான் – உழைத்துப் பொருள் ஈட்டுவான். 21. ஈண்டுக – பெருகுக.

# 20

## அவர் தந்த நோய்!

"இவளுக்கு அறிவும் ஒழுக்கமும் ஊட்டி வளர்த்து உற்ற துணை புரியும் உயிர்த் தோழியாய் இருந்து காப்பாற்றுக!" எனப் பெற்றோரால் தன்பால் ஒப்படைக்கப் பட்டாளின் உடல் நலமும் உள்ள நலமும் அவள் கொண்ட காதல் நோயால் ஒருங்கே அழியக்கண்டு கலங்கினாள் ஒரு தோழி. அப் பெண்ணின் காதலன் ஒரு பெரும் வில்லாளன்; மாடு, மனை என மதிக்கத்தக்க வகை வகையான வளங் கொழிக்கும் பெரும் பொருளாளன்; நல்ல அழகாளன். அவன் ஆண்மை அழகு அளவிறந்த செல்வம் ஆகியவற்றைக் கண்டே அப்பெண் அவன்பால் காதல் கொண்டாள் என்பதை அறிந்த தோழி, அவர் காதலுக்கு வாழ்த்துக் கூறினாள். மேலும் அவனை அறிந்து, அவனோடு பழகிய சின்னாட்களுக்கெல்லாம், அவன் வாய்மை வழுவாதவன், நட்பு கோடற் கினிய நயம் உடையவன், அனைவர் உள்ளத்தையும் ஆட்கொள்ளும்

அழியா அன்புடையான் என்பதையும் அறிந்து, அவர் காதல் வளர வழிவகுத்துத் தந்தாள்.

தோழியின் துணையால் காதலர் இருவரும் களிப்புக் கடலில் ஆழ்ந்து கிடந்தனர். சின்னாட்கள் சென்றன; அவளோ பெரிய இடத்துப் பெண். வேண்டியபடி வெளியில் திரிய அவள் பெற்றோர் அவளை விட்டு வைக்கவில்லை. அதனால் தான் விரும்பும் போதெல்லாம் வெளியே சென்று காதலனைக் கண்டு மகிழும் வாய்ப்பு அவளுக்கு வாய்க்கவில்லை. ஆனால் அவள் கொண்ட காதலோ அளத்தற்கு அரியது. அதை அடக்கி வைப்பது அவளால் இயலவில்லை. ஒரு சில நாட்களில், பெற்றோர்களின் கட்டுக் காவல்களைக் கடந்து சென்று, காதலனைக் காண அவள் காத்திருந்தால், அன்று வந்து காதலி வருவாள் வருவாள் என அவள் வரும் வழிமேல் விழி வைத்து, நெடிது பொழுது காத்திருந்தும் அவள் வராமையால், அவள் இன்றும் வாராள் போலும் என எண்ணி, அவன் அவள் வருவதற்குச் சற்று முன் சென்று விட்டமையால், வறிதே மீள நேர்ந்து விழிநீர் சோர வருந்துவாள். இவ்வாறு ஏமாறிய நாட்கள் எண்ணிலவாம். அதனால் அவள் காதல் நோய் கட்டுக்கடங்காது பெருகி அவளைப் பெரிதும் வருத்திற்று. இன்னமும் சின்னாள் சென்றால் உயிரிழந்து போவளோ என அஞ்ச வேண்டியதாகி விட்டது அவள் நிலை.

தோழி அதைக் கண்ணுற்றாள். இவள் துயர் தீர்ந்து உயிர் கொண்டு வாழ வேண்டுமாயின், அதற்கு அவன் இவளை வரைந்து கொள்வதே வழியாம்; வரைந்து கொண்டால் காதல் இன்பநுகர்விற்கு இப்போதுண்டாம் இடையூறு எதுவும் இராது; இன்பக் கடலில் ஆழ்ந்து,

இவள் தன் துன்பத்தை மறந்து போவாள்; மனத்துயர் மடிந்து போவதால், இவள் மேனி நலனிழந்து போவதும் நின்றுபோம்; பண்டு போல் பேரழகு பெற்று விளங்குவள்; இவள் உடல் நலக் கேடு கண்டு உற்றாரும் உறவினரும் தன்னை ஒறுப்பதும் இன்றாம் என உணர்ந்தாள். இதை உணர்ந்தவள், வரைய வேண்டுவது இன்றியமையாதது, விரைவில் வேண்டப்படுவது என்றாலும் அம்மணத்திற் காம் முயற்சிகளை மேற்கொள்வது மகளிராகிய தம்மால் இயலாது, பெண்டிர்க்கு அது பண்பும் ஆகாது. காதலி படும் கடுந்துயர்கண்டு, திருமணத்திற்கான முயற்சிகளைக் காதலனே மேற்கொள்ளுதல் வேண்டும். ஆனால், அவனோ அதை மேற்கொள்பவனாகத் தோன்றவில்லை. அவனைக் கண்டவுடனே, காணாமையால் கொண்ட கலக்கமெல்லாம் மறைந்து போய் இவள் என்றும் போலவே எழில் மிக்குத் தோன்றுவதால், இவள் துயர் நிலையை அறிந்து கொள்ளும் வாய்ப்பினைப் பெறாமை யாலோ, களவொழுக்கம் அளிக்கும் இன்பமே பேரின்பமாம் எனக் கருதுவதாலோ, அவன் மணத்திற் கான முயற்சிகளில் மனங் கொண்டிலன். ஆனால் அவன் போக்கில் விட்டு வைத்தால் இவள் நலம் பாழாம். ஆகலின் இவள் நிலையை அவனுக்கு உணர்த்துதல் வேண்டும் எனவும் உணர்ந்தாள். அவ்வாறே ஓரிருமுறை இளைஞனைக் கண்டு குறிப்பாகவும் வெளிப்படை யாகவும் வரையும் கருத்தின்றி வந்து செல்வதால், அவன் காதலிக்குண்டாம் கேட்டினை எடுத்துக் கூறி, வரையத் தூண்டினாள். ஆனால், அவன் அப்போதும் வரைய முன்வந்திலன். அதனால் இனி நாம் கூறிப் பயனில்லை. தன் துயரைத் தன் காதலனுக்கு இவள் தானே கூறிக்

கொள்ளுதல் வேண்டும். காதலியின் துயரைக் காதலி வாயினாலேயே கேட்டால்தான் அவன் மனம் மணத்தை நாடும்போலும் என எண்ணினாள். ஆனால், அப் பெண்ணின் இயல்பறிந்த அத்தோழி, அவள் தன் காதல் நோயைத் தன் காதலன் முன் எடுத்துக் கூறவல்லளோ? அதை அவள் பெண்மை தாங்கிக் கொள்ளுமோ என அஞ்சினாள். அதனால், அவள் தன் துயரைத் தானே நாணாது எடுத்துக் கூறவல்ல ஒரு வழியினைக் கண்டாள்.

இவளைக் காண அவன் வருதல் வேண்டும். வந்து இவள் வருகையை எதிர்நோக்கித் தங்கள் மனைக்கு அணித்தாகத், தாங்கள் மெல்லக் கூறுவனவும் தெளிவுறக் கேட்கும் அண்மைக்கண் மறைந்திருத்தல் வேண்டும்; ஆனால் அவன் வருகையை இவள் அறிந்து கொள்ளுதல் கூடாது. அந்நிலையில், காதல் நோயால் கலங்குவது கூடாது. 'அது உன் பெண்மைக்கு அழகன்று. நீ அழுமாறு நின் காதலன் கேடொன்றும் செய்திலனே; அவ்வாறாக வும் கலங்குவது ஏன்?' எனப் பொய்க் கோபம் காட்டித் தான் இவளைக் கடிந்துரைத்தல் வேண்டும். அது கேட்ட வுடனே, அவள் தன் மனத் துயரை, அத் துயர் வளரத் துணை செய்யும் அவன் கொடுமைகளை மறைக்காது வாய்விட்டுக் கூறி வருந்திப் புலம்புவாள். அது அவன் காதுகளுட் சென்று புகும்; தன் களவொழுக்கத்தால் காதலி படும் துயரை அவன் கண்டு கொள்வன். உடனே ஒரு பொழுதும் வீணாக்காது ஓடி, வரைவோடு வந்து சேர்வன் எனத் துணிந்தாள். அத் துணிவோடு அவன் வருகையை ஆர்வத்தோடு எதிர் நோக்கியிருந்தாள்.

அவள் எதிர் நோக்கியிருந்தவாறே இளைஞனும் வந்தான். எதிர்பார்த்த சூழ்நிலை வாய்த்துவிட்டது. தான்

நடிக்க வேண்டிய நாடகத்தை அவளும் சிறப்புற நடித்து முடித்தாள். அப்பெண்ணும் வாய்திறந்துவிட்டாள். 'தோழி! 'ஏடி பெண்ணே! பெண்டிர்க்குப் பெற்றதாயினும் சிறந்தது நாண்; அந்நாணழிய வாழும் வாழ்வு வாழ்வெனப்படாது. ஆகவே, அந்நாணைக் காக்கும் நல்லெண்ணம் கொண்டாவது, உன் காதல் நோயைக் காட்டாது மறைத்துக் கொள்ளக் கூடாதோ!' என்று நீ கடிந்துரைக்கின்றனை. தோழி! நாணைக் காத்துக் கொள்வது இந்நிலையில் என்னால் இயலாது. இது என் ஆற்றலுக்கு அப்பாற்பட்டுவிட்டது. அதைக் காத்து நிறுத்தமுடியாத அளவிற்கு என் காதல் நோய் வளர்ந்து விட்டது. அந்நோயின் ஆற்றலொாடு நோக்க என் உயிரே நனி மிகச் சிறியதாகி விட்டது. அதன் அழிவைக் காணும் நாளும் நெடுநாள் இல்லை. உயிரின் நிலைமையே இதுவாகவும், நாணழிவு குறித்து வருந்துகின்றனையே! காதல் நோயால் வருந்தித் துயர் உறுவது ஒரு நாளா, இரண்டு நாளா, எண்ணற்ற இரவுகளாக வருந்தி வாடுகிறேன். அவ்விரவுகளாவது துயர் பெருக்கும் துணைகளைப் பெறாது தனித்து வந்து வருத்துகின்றனவா? இல்லையே! துயர் பெருக்கும் துணைகளோடன்றோ வந்து வருத்துகின்றன! அவ்விரவு களின் அமைதியைக் கெடுத்து என் துயரைப் பெருக்கும் வண்ணம் ஓயாது ஒலிக்கும் அன்றில்கள்தாம் சிலவா? அம்மம்மா! பல பல. இவை தரும் தொல்லைகளால் அல்லல் உற்று அழும் என் அகத்துயர் மிகுதியால் என் புறநலனும், அழகிய உடலுறுப்புக்கள் சுருங்கியதால் அவ்வுறுப்புகளில் கிடந்து அழிகளித்த அணிகள் அனைத்தையும இழந்துவிட்ட என் தோற்றம், பேரழகு அளித்த பீலிகளை இழந்துவிட்ட

மயில்போல் தோன்றித் துயர் விளைக்கின்றதே! மலர்ப் படுக்கையில் வீழ்ந்து கிடந்தும் என் உடல், செந் நெருப்பிடை வீழ்ந்ததுபோல் பற்றி எரிகிறதே! இவற்றிற் கெல்லாம் காரணம், நான் அவரோடு காதல் உறவு கொண்டு ஒரு நாள் நகைத்து விளையாடி மகிழ்ந்ததன் பயன் அல்லவோ?" என்று கூறி நெடுமூச்செறிந்து நின்று துயர் உற்றாள்.

அவள் அவ்வளவு கூறி வருந்தியதே போதும். அதைக் கேட்டே அவன் அவள் துயர் நிலையை அறிந்து கொள்வன். மண முயற்சிகளில் ஆழ்ந்துவிடும் அவன் மனம். ஆனால், அவன் மனம் அம் முயற்சியில் ஆழப் பதிதல் வேண்டும். நனிமிக விரைவு காட்டுதல் வேண்டும் என விரும்பினாள் தோழி. அதனால் அப்பெண் தன் துயர் நிலையினை மேலும் வாய்விட்டுப் புலம்புவதில் விருப்பங் கொண்டு, "பெண்ணே! காதலன் உன்பால் பேரன்பு கொண்டுளனே! பிரியேன் என உரைத்த அவன் உரை வளத்தை நீ உணர்ந்திலையோ? அவன், உன் செல்வ நிலைக்கேற்ற சிறப்புடையனல்லனோ? வகை மாண்ட செல்வ வாழ்வில் வாழ்பவன் அவன் என ஊரார் அவனை வாழ்த்துவதை நீ கேட்டிலையோ? உன் கண்ணொளி மகிழும் காட்சி நலம் கொண்டுள்ளவ னல்லனோ? இவ்வாறு எவ்வகையாலும் சிறப்புற்று விளங்குவான் ஒருவனைக் காதலனாகப் பெற்றமையால் களித்து மகிழ்வதல்லது கலங்கிக் கண்ணீர் விடுவது அழகோ?" எனப் பொய்யே வினவினாள். அவ்வளவுதான், அவள் மீண்டும் புலம்பத் தொடங்கி விட்டாள்.

"தோழி! நம் காதலர் சிறந்த வில் வீரர்; அவர் கையில் ஏந்தி நிற்கும் வில் விரைந்து அம்பெய்ய வல்ல

ஆற்றல் வாய்ந்தது என்றெல்லாம் ஊரார் புகழக் கேட்டுள்ளேன். வில்லேந்திச் சென்று பகைவரைப் பாழ் பண்ணும் அவர், அவ்வம்புகளில் ஒன்றை என்மீது ஏவி, என்னை அழிப்பினும் நன்றாம்! ஆனால் அவர் அதைச் செய்திலரே! 'பிரியேன்; பிரியின் உயிர் தரியேன்!' என அவர் அன்று உரைத்த சொற்களை எண்ணியல்லவோ என் ஏழை நெஞ்சு நெடுந்துயர் உறுகிறது! அவர் அச் சொல்லால் நம்மை வருத்துவதல்லது தம் கை வில்லால் வருத்துவதில்லை. அவர் வாய்ச்சொல்லால் வந்த வருத்தம் அவர் வில்லால் ஆம் வருத்தத்தைக் காட்டினும் அல்லவோ கொடுமையுடையதாக உளது!

"தோழி! நம் காதலர் வகை மாண்ட செல்வ வாழ்வினர் என்ப! அவர் செல்வம், நம் செல்வத்தினும் சிறந்ததே ஆயினும், அச் செல்வ வாழ்வால் செருக்குற்று, அவர் நம்மை வருத்துவதில்லை. அது காரணமாக அவர் வருத்தினும் அதைப் பொறுத்துக் கொள்ளலாம்; ஆனால் அவர் அதைச் செய்திலர்; அன்று அவரை முதன் முதலாகக் கண்டு காதல் கொண்ட பொழுது, அக்காத லால் களித்த நம் அக நிகழ்ச்சியால், என் கடை வாயில் சிறிதே நகை தோன்ற, பெண்கள் பிறர் முன் நகைத்தல் அவர் பெண்மைக்கு அழகன்றே என அறிந்து, அதை நான் மறைக்க முயல, என் முயற்சியை நுனித்து நோக்கி, அதன் வழியே, என் காதல் உள்ளத்தை உணர்ந்து கொண்டமையால், அன்று அவர் நம்பால் கொண்ட நட்பு என்ற நற் பண்பாலன்றோ நம்மை வருத்துகிறார்! வகை வகையாக அமைந்த செல்வ வாழ்வில் வாழும் அவர், அந் நிலையொடு முற்றிலும் முரண்பட்ட நிலையில் வாழும் நம்மை, அம் முரண்பட்ட நிலை கண்டு வருத்துகின்றனர்

அல்லரே! அப்படிப் பகைத்துப் பெருந்துயர் தரினும் நன்றாமே! அவர் பகைமை யுணர்வு கொள்வதால் நாம் கொள்ளும் வருத்தத்தினும், அவர் நட்புணர்வு மிக்கமையால் நாம் கொள்ளும் வருத்த மன்றோ நனிமிகக் கொடியதாகவுளது!

"தோழி! நம் காதலர்பால், மக்களைப் பற்றி வருத்தும் மன இருளை அகற்றும் பேரறிவும், அம் மக்களின் பகைவரைப் பாழாக்கும் பெருஞ்சினமும் உள என உலகோர் பாராட்டுவர். தோழி! அச் சினத்தீயில் ஒரு சிறு பொறியினை என்பால் செலுத்தி என்னைச் சுட்டு எரிக்கினும் சால நன்றாம்! ஆனால் அவர் அது செய்திலர். 'பெண்ணே! உன்னைப் பிரியேன்!' என உரைத்து என் உள்ளத்தை அடிமை கொண்ட அன்பு அளிக்கும் அவர் சாயல் அன்றோ என்னை வருத்துகிறது! அவர் சினத்தீ யளிக்கும் நோயினும், அவ்வன்புச் சாயல் அளிக்கும் நோயன்றோ நனிமிகக் கொடுமை உடையதாய், நம்மால் தாங்கற்கரியதாய் உளது!

"தோழி! அவர் அளித்த காதல் நோய் நம்மால் தாங்கிக் கொள்ளும் அளவில் நில்லாது நனிமிகப் பெருகிவிட்டது. அந்நோயினின்றும் நீங்கி உயிர் வாழ்தல் நம்மால் இயலாது. அஃது அரிதினும் அரிதாம். ஆயினும், அவர் அளிக்கும் இன்ப வாழ்வை என்றேனும் பெறலாம் என்ற நம்பிக்கையால் நெஞ்சு அதைத் தாங்கி நிற்கத் தன்னாலான முயற்சிகளை முன்னின்று மேற்கொள்கிறது. ஆனால், தோழி! அவரோ நம்மை மறந்து, நமக்குத் துயரளிக்கத் துணிந்தவர் போலத் தோன்றுகிறார். அவர் அந்தக் கைவிட்டுப், போகும் நம் உயிரைப் போக விடாது காக்கவல்ல நல்ல மருத்துவராய் வந்து வாழ்வளிப்பா

*ர்ராயின், அந் நல்லெண்ண நெறியில் அவர் நெஞ்சு செல்லின், நனிமிக நன்றாம். தோழி! அந் நன்னிலை நமக்கும் வந்து வாய்க்குமோ? வாய்க்குமாயின் அது எப்படி வாய்க்குமோ? என்று வாய்க்குமோ? அறியாது அழுது அழிகிறது என் உள்ளம்!" எனக் கூறிப் புலம்பினாள்.*

*தனக்கு வாழ்வளிக்கும் காதலியின் வருத்த நிலையினை, அவள் வாயுரை வழியே அறிந்த பின்னரும் இளைஞன் அவள் விரும்பும் மண வாழ்க்கையை மனங் கொள்ளாது, தன் உள்ளம் உவக்கும் களவின்பத்தையே கருதுவானல்லன். அத்துணைக் கொடியனல்லன் அவன். ஆகவே அவள் மணம் விரைவில் முடிய, மனத்துயர் மடியுமெனும் மனம் நிறைவுற்றாள் தோழி.*

"அரிதே தோழி! நாண் நிறுப்பாம் என்றுணர்தல்,
பெரிதே காமம்; என் உயிர் தவச் சிறிதே;
பலவே யாமம்; பையுளும் உடைய;
சிலவே நம்மோடு உசாவும் அன்றில்?
அழலவிர் வயங்கிழை ஒலிப்ப உலமந்து
எழில் எஞ்சு மயிலின் நடுங்கிச் சேக்கையின்
அழலா கின்று அவர் நக்கதன் பயனே.
மெல்லிய நெஞ்சு பையுள் கூரத், தம்
சொல்லினான் எய்தமை அல்லது, அவர் நம்மை
வல்லவன் தைஇய வாக்கமை கடுவிசை
வில்லினான் எய்தலோ இலர்மன்; ஆயிழை!
வில்லினும் கடிது அவர் சொல்லினுள் பிறந்த நோய்
நகைமுதலாக நட்பினுள் எழுந்த

தகைமையில் நலிதல் அல்லது, அவர் நம்மை
வகைமையின் எழுந்த தொன்முரண் முதலாகப்
பகைமையின் நலிதலோ இலர்மன்; ஆயிழை!
பகைமையிற் கடிது அவர் தகைமையின் நலியும் நோய்.

நீயலேன் என்று என்னை அன்பினால் பிணித்துத் தம்
சாயலின் சுடுதல் அல்லது, அவர் நம்மைப்
பாயிருள் அறநீக்கும் நோய்தபு நெடுஞ்சுடர்த்
தீயினால் சுடுதலோ இலர்மன்; ஆயிழை!
தீயினும் கடிது அவர் சாயலிற் கனலும் நோய்.

ஆங்கு,
அன்னார் காதலராக, அவர் நமக்கு
இன்னுயிர் போத்தரும் மருத்துவராயின்,
யாங்காவது கொல்? தோழி! எனையதூஉம்
தாங்குதல் வலித்தன்று; ஆயின்,
நீங்கரிது உற்றன்று அவர் உறீஇய நோயே."

*தலைவன் வரையாது வந்து செல்ல, வரைவுநீட ஆற்றாளாயின தலைவியின் வருத்தத்தை, அவள் வாயினாலேயே அவனுக்கு அறிவிக்க விரும்பிய தோழி, தலைவன் சிறைப் புறத்தானாக, தலைவியை ஆற்றியிரு என வற்புறுக்க, அவள் அது மாட்டாது அழுது கூறியது இது.*

2. தவ — மிக. 3. பையுள் — துன்பம். 4. உசாவும் — உரையாடும். 5. அழல் அவிர் வயங்கு இழை — நெருப்பில் உருக்கி ஓட வைத்தமையால் ஒளிவீசும் அணிகள். உலமந்து — வருந்தி. 6. எழில் எஞ்சு — அழகிழந்த. 8. கூர — மிக. 13. நகை முதலாக — நம் புன்னகை காரணமாக. 14. நலிதல் — வருந்துதல். 15. வகைமை — வகைவகையான செல்வங்கள். 18. நீயலேன் — பிரியேன்.

# 21

## துன்பமும் இன்பமும்

உயர் குடிப் பிறந்த இளைஞன் ஒருவன், ஊரார் புகழும் உயர்ந்த ஒழுக்கமுடையவனாய் வாழ்ந்திருந்தான். யானை, தன் மனம் போனபடி திரிந்து, தனக்கும் பிற உயிர்க்கும் தீங்கு செய்யாது, பாகன் ஏவியவாறே சென்று, தானும் பெருமையுற்றுப் பிறர்க்கும் பயன்படும் வண்ணம் அவ்யானையை அடக்கி ஆளும் அங்குசம் போல், நெஞ்சு அது விரும்புமாறு அலைந்து அழிந்து போகாது, நன்னெறிக் கண் மட்டுமே நின்று நிறைந்த பயன் பெற்றுப் பெருமை பெறும் வண்ணம் அந் நெஞ்சை அடக்கி ஆளவல்ல அறிவும், அவ்வறிவை நிறையப் பெற்றவர்பால் இயல்பாகத் தோன்றும் தன்னடக்கமும், செய்யத் தகாதன செய்ய நேர்ந்த வழி நிகழும் மனச் சுருக்கமாய நாணும் போலும் நல்ல பல குணங்கள் அவன்பால் குடி கொண்டிருக்கக் கண்டு, ஊரும் உலகமும் ஒருங்கே புகழ்ந்து பாராட்டின.

அத்தகையான், ஒரு நாள், பேரழகும், பெண்மை நலமும், பெருங்குடிப் பிறப்பும் வாய்ந்த பெண்ணொருத்தியைக் கண்டு, அவள்பால் கொண்ட காதலால் தன் உள்ளத்தைப் பறிகொடுத்தான். இளமையும், இனிய பல பண்புகளும் அளித்திருந்த அவன் பேரழகு கண்டு அவளும் அவன்பால் காதல் கொண்டாள். காதலின்பம் நுகர்ந்து களிகூர்ந்தான் அவன். ஆனால் அவன் பெற்ற இன்பம், அவ்வொரு நாள் அளவே நின்றது. பின்னர் அவள் காண்டற்கரியளாயினள். கண்ணொளி கூச விண்ணில் தோன்றி மறையும் மின்னற்கொடி போலவும், காட்டி மறைக்கும் கனவுக் காட்சி போலவும் அவள் மறைந்து விட்டாள். அவளைக் கண்டது ஒரு முறையே; அவளோடு கலந்து உரையாடிக் களித்தது ஒரு கணப் பொழுதே. என்றாலும், அவள் அவன் நெஞ்சில் நிலையாகக் குடிபுகுந்து விட்டாள். அவளை மறப்பது அவனுக்கு இயலாதாயிற்று. அவள் அவன் உள்ளம் கவர்ந்த கள்வியாகி விட்டாள். அவன் நெஞ்சு அவளையே சுற்றிச் சுற்றிச் சுழல வட்டமிடலாயிற்று.

நல்லதன் நலனையும், தீயதன் தீமையையும் உள்ளவாறு உணர்ந்து, நன்னெறிக்கண் நின்று பழக வேண்டிய நெஞ்சு, இவ்வாறு அவன் வயத்ததாகாது, அவள் வயத்ததாகி விடவே, அவன் அறிவு செயலற்றுப் போய்விட்டது. அறிவு அடங்கி விடவே, அவன்பால் கடந்து அவனுக்குப் பெருமை அளித்த தன்னடக்கம், அவனை விட்டு அகன்றது. அவன் ஆசை அளவிறந்து பெருகி, வரம்பிகந்து ஓடலாயிற்று. நாண் எனும் நற்பணபும் அவன்பால் நில்லாது மறைந்தது. நல்லோன், நற்குணங்களுக்கோர் உறைவிடம் என்றெல்லாம் உயர்ந்

தோரால் ஒரு காலத்தில் பாராட்டப் பெற்ற அவன், பண்பிலி எனப் பழிதூற்றப் பெற்றான். பார்த்தவர் அனைவரும் அவனைப் பழிக்கத் தலைப்பட்டனர். ஆனால், அவன் அவற்றுள் எதையும் பொருட்படுத்திலன். அவள்பால் கொண்ட ஆசை ஆட்சி புரிய, அறிவிழந்து அலைந்து கொண்டிருந்தான்.

சின்னாட்கள் சென்றன. பித்தேறியவன்போல் திரிந்து கொண்டிருந்த அவன், பண்டேபோல், பண்புடையவனாய்க் காணப் பெற்றான். அறிவுடைய பெரு மகனாய், அடக்கம் வாய்க்கப் பெற்றுக் காட்சி அளித்தான். காதல் நோயால் கருத்திழந்து அலைந்து கொண்டிருந்த அவன் நிலை கண்டு இரங்கியவர்கள், அவன் இன்று பழகும் பண்பாடு கண்டு பெருவியப் புற்றனர். அந்நோய் நீங்கி, அவன் நலம் உற்றது எவ்வாறோ என வியந்தனர். அவனோடு நெருங்கிப் பழகும் அன்புடையார் சிலர், அவன் நோய் தீர்த்த அருமருந்து யாது என அவனையே கேட்கவும் தலைப்பட்டனர்.

தன் நல்வாழ்வில் நாட்டம் கொண்டு, தன் நலம் வினவிய அப் பெரியோரை நோக்கிப், "பேரன்புடைய பெரியீர்! மின்னற் கொடி போலவும், கனவுக் காட்சி போலவும் தன் திருவுருவைக் காட்டி, என் உள்ளத்தில் காதற் கனலை மூட்டி, என் நெஞ்சம் எனக்கு உரித்தாகாது, தனக்கே உரித்தாக அதை அடிமை கொண்டு மறைந்து விட்ட, அம்மலர்க்கொடியை அடையும் வழி யாது என அறியாது விழித்தேன். இறுதியில் வழியொன்று புலப் பட்டது. என் உள்ளத்தை அவள் கவர்ந்து கொண்டதை ஒருவரும் உணர்ந்திலர் என்ற துணிவினாலேயே அவள் என் காதலை ஏற்றுக் கொண்டிலள். அவளை நான்

காதலிப்பதை, அவள் என் உள்ளத்தில் காதற் கனலை மூட்டி விட்டதை அவளூரார் அறியப் பறைசாற்றி விட்டால் என்னை ஏற்றுக் கொள்வள், என்பதை உணர்ந்தேன். மேலும் அவளூராரும், அவளைப் போலவே, காதலின் மாண்புணராதவராதலின், அவர்க்கு என் காதல் உள்ளத்தை நேரிய முறையால் எடுத்துக் காட்டினால் உணர்ந்து கொள்வார் என என் உள்ளுணர்வு உணர்த்தியதனால், அவர் உணர்ந்து கொள்ளும் வகையில் அதை அறிவிக்கத் துணிந்தது என் உள்ளம். அதனால் மடல் ஏறி மன்றம் செல்லத் துணிந்தேன்.

"பெரியோர்களே! என் உள்ளம் அம் முடிவிற்கு வந்தவுடனே, பனை மடல்களைக் கொண்டு குதிரை ஊர்தி ஆக்கினேன். பூளை, ஆவிரை, எருக்கு முதலாம் மலர்களைப் பறித்துக் கொணர்ந்தேன். அவற்றை, நீலமணியின் நிறம் காட்டும் மயிற் பீலியை இடைவிட்டு மாலையாகத் தொடுத்து, அம்மடல் மாவிற்குச் சூட்டினேன். அம்மாவோடு அவளூர் மன்றை அடைந்தேன். வண்ணங் கொண்டு தீட்டிய அவள் வடிவம் அமைந்த கிழியைக் கையில் ஏந்தியவாறே அம்மடல் மாமேல் ஏறி அமர்ந்தேன். அக்காட்சி, அவ்வூர்ச் சிறுவர்களை ஒன்று கூட்டிவிட்டது. கூட்டங்கூட்டமாய் வந்து என் குதிரையைச் சூழ்ந்து கொண்டும், ஈர்த்துச் சென்றும் எள்ளி நகைத்தனர். அவர் செய்த ஆடல் ஆரவாரத்தால், அவ் வூர்ப் பெரியோர்களும், அப் பெண்ணிற்கு உறவானவர் சிலரும் வந்து என் மாவைச் சூழ்ந்து கொண்டனர். உடனே, 'ஊர்ப் பெரியோர்களே! இதோ என் கையில் பிடித்த கிழியில் காட்சியளிக்கும் இப்

பெண்ணின்பால் கொண்ட காதல் நோயால் கருத்திழந்து போன நான் பாடப் போகும் பாட்டை நீங்கள் எல்லோரும், சற்றே நின்று கேளுங்கள்!' என்று தொடங்கிப்,

"பெரியோர்களே! என்னைப்பற்றி வருத்தி, என்னை இந்நிலைக்குக் கொண்டு வந்த இக் காதல் நோயையும், அந்நோய் தீர மருந்தாக மதித்து நான் கொண்ட இப்பனை மடலால் ஆன இக்குதிரையையும் எனக்கு அளித்தவள், என்னால் காதலிக்கப் பெற்றவளும், ஒளி விளங்கும் அணி வகையால் வனப்பு மிகுந்து விளங்குபவளும் ஆய இம்மலர்க் கொடியாவாள்.

"நெற்றியழகு வாய்ந்த இந்நங்கை நல்லாள் அளித்த காமநோய், என் அறிவால் அடக்கி ஆளற்கு இயலா அருமை உடைத்து. ஆசைகளை அடக்கி ஒரு வழி நிறுத்த வல்ல என் நிறை; குணத்தை என்பால் நில்லா வண்ணம் அழிக்கும் அத்துணை ஆற்றல் வாய்ந்தது. அக் காம நோய்க் கடலில் வீழ்ந்துவிட்ட என் உயிர், அக் கடலை நீந்திக் கடந்து கரையேற மாட்டாது கலங்குகிறது. அவ்வுயிரை, என்னைக் கைவிட்டுப் போகாவாறு காத்துக் கொள்ளும் ஆற்றல் என் கையில் இல்லை. அது என் ஆற்றல் எல்லையைக் கடந்து போய்விட்டது; உப்புப் பாத்தியில் கிடக்கும், உப்புக் கட்டியாலான ஒரு பாவை மழைத்துளி வீழத் தொடங்கியதும் சிறிது சிறிதாகக் கரைந்து, இறுதியில் உருவிழந்து போவது போல், என் ஆருயிரும் இவள் தந்த காமநோயால் சிறிது சிறிதாகத் தேயத் தொடங்கி விட்டது.

"பெரியோர்களே! என் தோள்மீதும், நான் ஏறி அமர்ந்திருக்கும் இம்மாவின் கழுத்திலும் கிடந்து நாறும்

பூளை, கொன்றை ஆவிரை முதலாம் இம்மலர்கள், விரும்பி, நானே சூடிக் கொண்டன அல்ல. மூங்கிலை வென்ற தோளழகுடையளாய இம்மங்கை நல்லாள் அளித்தனவே இவை. ஆதலின் இம் மலர்களால் ஆய மாலை சூடிக் கொண்டமைக்கு என்னை நோவன்மின்! அவளையே நோதல் வேண்டும்.

“பெரியோர்களே! என் இயல்பு கெட்டு இவ்வாறு நான் அழிதற்குக் காரணம் அவள் தந்த காம நோயல்லது பிறிதில்லை. அந்நோயால் வருந்தும் என் உயிர், எனக்கே உரித்தாய் இருந்த அவ்வுரிமையை அழித்து விட்டது. என் உயிர் என் ஆட்சி எல்லையுள் அடங்கியிராது, கீழே அழல் நின்று எரிய, அதன் வெப்பத்தால் வெம்மையுற்றுக் கொதிக்கும் நிலைபெற்ற நெய்யில் இடப்பெற்ற மெழுகுக் கட்டி, மெல்ல மெல்லக் கரைந்து, இட்ட சிறிதுபொழுதிற் கெல்லாம் உருவிழந்து போவதுபோல், அவள் தந்த காமநோய்க் கனலால் வருந்தும் என் உயிரும் மெல்ல மெல்ல அழியத் தொடங்கி விட்டது. அந்தோ! அதன் நிலை நனிமிக இரங்கற் குரித்து!

“பெரியோர்களே! நீங்கள் வாழும் இவ்வூரில் பிறந்தாள் ஒருத்தி அளித்த காம நோயால் நான் இவ்வாறு வருந்துகிறேன். வருந்தும் என் வருத்தத்திற்குக் காரணம் யாது என உங்களில் ஒருவரும் உசாவுகின்றிலீர். என் மடன் மாவை ஈர்த்துத் திரியும் இவ்விளைஞர்களும், இவ்வூருக்கும், இவ்வூரினளான என் காதலிக்கும் உறவினரல்லாதாருமே என்னை அடுத்து, என் நோய்க் காரணத்தை உசாவி, உள்ளத்திற்குச் சிறிதே ஆறுதல் அளிக்கின்றனர். இவ்வூர் வாழ் சான்றோர்களின் சால்பு

இருந்தவாறு என்னே!" எனப் பலப் பல கூறிப் பாடத் தொடங்கி விட்டேன்.

"என் ஆட்டத்தையும் பாட்டையும் அவள் அறிந்து கொண்டாள். தன்னால் காதலிக்கப் பெற்ற ஒருவன், இவ்வாறு கலங்குவது தன் பெண்மைக்குப் பெருமை யாகாது என உணர்ந்தாள் போலும். உடனே, ஊர் மன்றடைந்து, உலகத்து உயிர்களை உயர்நிலையில் வாழவைக்க வேண்டும் என்ற அன்புள்ளம் கொண்டு, அதற்காகத் தம் அகத்து எழும் ஆசைகளை அடக்கி, அதனால் அரிய காட்சி நலம் உடையராய் உயர்ந்த தவநெறி மேற்கொண்ட பெரியோர், அத்தவப் பயனாய்த் தம் உடம்பைக் கைவிட்டு உம்பர் உலகு அடைதல் போல், காம நோயால் கலங்கிய காலத்தில் கைவிடமாட்டாப் பெருந்துணையாய் நின்று காத்த இம் மடல்மா, இன்று இவன் இவளைத் தன் காதலியாகக் கைப்பற்றிக் கொண்டு இன்ப வெள்ளத்துள் இருந்து மகிழப் போவதால் இவனை விட்டு நீங்குக! இவன் அருகே இடம் பெறாது அகன்று அழிக என அருள் உள்ளம் கொண்டு, அன்பு கலந்த உரை களை உரைத்து என்னை ஆட்கொண்டாள். அதனால், யானும் பித்தம் தெளிந்து பண்டே போலும் பண்புடை யேன் ஆயினேன்!" என விளக்கம் அளித்து, அவர் வியப்பினை அகற்றினான்.

"எழில் மருப்பு எழில்வேழம் இகுதரு கடாத்தால்
தொழில்மாறித் தலைவைத்த தோட்டி கைநிமிர்ந்தாங்கு
அறிவும் நம்அறிவு ஆய்ந்த அடக்கமும், நாணொடு
வறிதாகப், பிறர் என்னை நகுபவும் நடுவுடன்
மின்அவிர் நுடக்கமும், கனவும் போல் மெய்காட்டி
என் நெஞ்சம் என்னோடு நில்லாமை நனிவெளவித்

தன் நலம் கரந்தாளைத் தலைப்படுமாறு எவன் கொலோ?
மணிப்பீலி சூட்டிய நூலொடு, மற்றை
அணிப்பூளை ஆவிரை எருக்கொடு பிணித்து யாத்து
மல்லல்ஊர் மறுகின்கண் இவள்பாடும் இஃது ஒத்தன்;
எல்லீரும் கேட்டீமின் என்று;

படரும், பனைஈன்ற மாவும் சுடரிழை
நல்கியாள் நல்கி யவை;

பொறைஎன் வரைத்தன்றிப் பூநுதல் ஈத்த
நிறைஅழியக் காமநோய் நீந்தி அறைஉற்ற
உப்பியல் பாவை உறைஉற்றது போல
உக்குவிடும் உன் உயிர்;

பூளை, பொலமலர் ஆவிரை, வேய்வென்ற
தோளாள் எமக்கு ஈத்தபூ;

உரிது என்வரைத்தன்றி ஒள்ளிழை தந்த
பரிகழி பைதல்நோய் மூழ்கி எரிபரந்த
நெய்யுள் மெழுகின் நிலையாது பைபயத்
தேயும், அளித்து, என் உயிர்;

இளையாரும், ஏதிலவரும், உளைய யான்
உற்றது உசாவும் துணை;

என்றுயான் பாடக் கேட்டு
அன்புறு கிளவியாள் அருளிவந்து அளித்தலின்
துன்பத்திற் றுணையாய மடல், இனி இவட்பெற
இன்பத்துள் இடம்படல் என்று இரங்கினள், அன்புற்று
அடங்கரும் தோற்றத்து அருந்தவம் முயன்றோர் தம்
உடம்பு ஒழித்து உயர் உலகு இனிது பெற்றாங்கே.”

*மடல் ஊர்ந்து தலைவியை எய்தியதனைத் தலைவன் தன் பாங்காயினார்க்குக் கூறியது.*

1. இகுதரு — சொரியும்; கடாம் — மதநீர், 2. தொழில் மாறி — ஏவிய தொழில்களைச் செய்ய மறுத்து; தலைவைத்த — அடக்கி ஆளும்; தோட்டி — அங்குசம்; கைநிமிர்ந்தாங்கு — கை கடந்தாற் போல். 5. அவிர் — விளங்குகின்ற. 7. தலைப்படுமாறு — அடையும் வழி; 9. பிணித்து — தொடுத்து; யாத்து — சூட்டி. 10. இஃது ஒத்தன் — இவன் ஒருவன்; 12. படர் — காம நோய். 13. நல்கியாள் — என்னால் விரும்பப்பட்டவள். 14. பூநுதல் — அழகிய நெற்றி. 15. அறை — உப்புப்பாத்தி; 16. உப்பியல் — உப்பால் ஆன; உறை — மழைத்துளி. 17. உக்குவிடும் — அழிந்துவிடும். 18. வேய் — மூங்கில், 21. பரிகழி — இயல்புகள் அழிதற்குக் காரணமான; பைதல் நோய் — காமநோய். 24. உளைய — வருத்த. 25. உசாவும் — வினவும். 29. இடம்படல் — இடம்படாது ஒழிக. 30. அடங்கு அரும் தோற்றம் — மன அடக்கம் உற்றதால் பெற்ற அரிய வடிவம்.

# 22

## தீர்த்தல் நும் கடனே

**தே**ன்போல் தித்திக்கும் மொழி; பிறைத் திங்கள் போல நெற்றி; முல்லை அரும்புகளோ என் மருளும் வெண் பற்களின் வரிசைக்கிடையே தோன்றும் இள முறுவல்; இத்தகு இயற்கை நலம் உடையாள் ஒருத்தி தான் பிறந்த குடியின் பெருஞ்செல்வ வாழ்விற்கேற்ப வகை வகையான அணிகள் அணிந்து அழகின் திருவுருவாய்க் காட்சி அளித்தாள். அவள் உருவும் திருவும் கண்டு, அவள் அறிவும் அருங்குணமும் அறிந்து, அவள் மீது காதல் கொண்ட ஓர் இளைஞன், அக்காம வெறியால் தன்னை மறந்தான்; நற்குடிப் பிறப்பும் நற்பண்பும் மிக்க நல்லோனாய அவன் நாணைக் கைவிட்டான்; குடிப் பெருமையைக் குன்றவிட்டான்; இரவு பகல் எப்பொழு தும் அவளையே நினைத்து வருந்தினான்; காதல் மிகுதி யால், கருத்திழந்து போனமையால், தான் அவளைக் காதலிப்பதுபோல், அவளும் தன்னைக் காதலித்தல் வேண்டும்; அவ்வாறு அவளும் காதலித்த வழியே அவ்வளை

மணக்க மணங் கொள்ளுதல் வேண்டும்; அப்பொழுது தான் காதல் வாழ்வில் இன்பம் காண இயலும் என்றகாதற் சிறப்பை மறந்தான்; அவளுக்குத் தன்பால் காதல் உண்டா என்பதை அறிந்து கொள்ளவும் அவன் முயன்றிலன். அவள் மீது கொண்ட காதலால் தான் அறிவிழந்து அலைதல்போல், அவள் தன் மீது காதல் கொண்டிருந் தால் அவளும் தன்னைப் போல் அலைவள்; ஆனால் அவள் அவ்வாறு அலையவில்லை; தான் அலைவதைக் கண்டும், அவள் சிறிதும் கலங்காது என்றும் போல இயல்பாகவே உள்ளாள்; ஆகவே அவளுக்குத் தன் மீது காதல் உண்டாகவில்லை; தன்னைக் காதலிக்காதவளைத் தான் காதலித்தல் கூடாது என்று எண்ணிலன்; அவளுக்குத் தன்பால் காதல் உண்டோ இல்லையோ, தனக்கு அவள்பால் காதல் உண்டாகி விட்டது; அது போதும்; அவளை எப்படியாகிலும் மனைவியாக்கிக் கொள்ளுதல் வேண்டும் எனத் துணிந்து விட்டான்.

அவள் தந்த காம நோயால் அவன் இவ்வாறு கருத்திழந்து அலைந்து கொண்டிருந்தமையால், அவளை மனைவியாக்கிக் கொள்ளும் தன் வேட்கையைத் தக்க வழியில் நிறைவேற்றிக் கொள்ளுதல் வேண்டும் என்பதை யும் நினைத்திலன்; மடலூர்ந்து பெறும் மாண்பு கெட்ட நெறியில் சென்றது அவன் மனம்; அதனால் மடலூர் தற்கு ஏற்பனவற்றை மேற்கொள்ளத் தொடங்கினான். தன்னூர்ப் பனைகள் தன்னால் ஏறலாகா உயர்வுடைய வாகவும் அவற்றில் ஏறி மடல்களை வெட்டிக் கொணர்ந்தான்; அவற்றை அரும்பாடு பட்டு மாவடி வாகப் பண்ணினான்; பின்னர், ஆவிரை எருக்கு போலும் வேண்டா மலர்களை விரும்பிப் பறித்து அழகிய மாலை

ஒன்றை ஆக்கினான்; தன் உள்ளங் கவர்ந்தாளின் உருவை ஒரு கிழியில் வரைந்து கொண்டான்; மடல் மாவின் கழுத்தில் மணி மாலையைக் கட்டினான்; தன் கழுத்தில் மலர் மாலையைச் சூட்டிக் கொண்டான்; மணி ஒலிக்க மாவை ஈர்த்துக் கொண்டு அவளூர் நோக்கிப் புறப் பட்டான்.

அப் பெண்ணின் ஊர் எல்லைக்கண், பெரியோர் சிலர் அவனைக் கண்டனர்; அவனைத் தடுத்து நிறுத்தி, இத் திருக்கோலம் கொள்ளற்காம் காரணம் யாது? அவவூரினர்பால் அவன் காணும் குறை யாது என்று வினவினர். தன்னைத் தடுத்து நிறுத்தியவர்களை இளைஞன் ஊன்றி நோக்கினான். சான்றோர்க்குரிய பண்புகள் அவர்பால் அமைந்திருக்கக் கண்டான். அதனால் அவரால் தன் குறை தீரும்; பிறர் நோய் போக்கும் பெரியோராய் அவர்கள், தன் குறை கேட்டுத் தான் விரும்பும் அப் பெண்ணைத் தனக்கு மணம் செய்து வைப்பர் என நம்பினான். அதனால் தன் காதல் நோயை அவருக்குக் கூறத் துணிந்தான்.

துணிந்தவன் உள்ளத்தில் ஓர் ஐயம் எழுந்தது. அவன் உள்ளத்தில் காமவெறியே தலை தூக்கி நின்றமையால், சான்றோர் தம் கடமைகளை மறந்திருப்பரோ? தன் குறைகளைக் கேட்பதோடு நின்று விடுவரோ? அது தீர்க்கும் அறவுள்ளம் அவர்க்கு இன்றாகிப் போமோ? - என்றெல்லாம் எண்ணி ஐயுற்றான். அதனால் ஆன்று அமைந்த சான்றோராகிய அவர்க்குத் தான் அறிவுரை கூறுதல் முறையாகாது; அப்பெருந் தகுதி தனக்கு இல்லை என எண்ணி அடங்கி விடாது, தன் குறைகளைக் கூறு வதற்கு முன்பாக, அவர்க்கு அறிவுரை கூறத் தொடங்கி,

"என்னை வழி மறித்து நிறுத்திய பெரியோர்களே! உங்களை நோக்க, நீங்கள் இவ்வூர்ச் சான்றோர் போலத் தோன்றுகின்றீர். நீங்கள் உண்மையில் சான்றோராயின், சான்றோர்க்குரிய கடமைகளுள் சிலவற்றை உமக்கு நினைவூட்ட விரும்புகின்றேன். பிறர்க்கு வந்த நோயைத் தமக்கு வந்த நோயாகக் கருதித், தம்மால் ஆவன அனைத்தையும் செய்து, அவர் நோயைப் போக்கி, அவரை வாழ வைத்தல் ஆன்றோர்க்கு அறமாம் என்ப. ஆன்றோர் கடன் இது என்பதை அறியும் அறிவு உங்கள்பாலும் பொருந்தியிருப்பின், உமக்கு என் குறைகளை விளங்க எடுத்துக் கூறுகிறேன். கேட்டு அது தீர்த்து எனக்கு வாழ்வளியுங்கள்" என அறிவித்துவிட்டுத் தான் காதல் கொண்டதை, அக்காதல் நோயால் தான் உற்ற துயரை எடுத்துரைக்கத் தொடங்கினான்.

"பெரியோர்களே! பெருமழை பெய்யும் கருமேகத்தி னிடையே தோன்றி மறையும் மின்னல் போல், இவ்வூரைச் சேர்ந்த ஒரு பெண், என் வாழ்வில் திடுமெனக் குறுக்கிட்டு மறைந்துவிட்டாள். அப்புற நலங்களால் சிறந்து விளங்கிய அவள் என் சிந்தையைத் தன் இருப்பிடமாகக் கொண்டு விட்டாள்; அவளை அவ்விடத்தினின்றும் ஒரு நாழிகைப் பொழுதும் அப்புறப்படுத்த இயலவில்லை. அவள் என் நெஞ்சில் இடங்கொண்ட அன்று என்னை விட்டு அகன்ற உறக்கம் இன்றுவரை என்னை வந்தடைந்திலது. அக்காம நோயால் மிக வருந்தும் என் உள்ளம், அந்நோயினின்றும் சிறிதே விடுதலை பெற்று அமைதி காணும் வழியாக, இம் மடலேறலினை மனத்துட் கொண்டேன். அதனால் அதற்கு வேண்டுவனவற்றோடு இவண் வந்து சேர்ந்தேன். பெரியார்களே! என் மடல் மாவைச் சிறிதே நிறுத்தி, என்

உள்ளங் கவர்ந்த அக் கள்ளியின் பெருமைகளையும், ஏனைச் சிறுமைகளையும் ஒன்றையும் விடாது பாராட்டிப் பாடுகிறேன்; நின்று கேளுங்கள்.

“பெரியோர்களே! தேன்போல் இனிக்கும் மொழியினள் என அறிந்து, அவள்பால் காதல் கொண்டேன். ஆனால் அவளோ என் மீது சிறிதும் காதல் கொண்டிலள். காதல் நோயால் தான் சிறிதும் கலங்காது என்னை மட்டும் துன்புறப் பண்ணினாள். காம நோயாகிய கரை காணாக் கடலில் வீழ்ந்து கலங்கிய நான், நண்பர்கள் உடன் இருந்து உற்ற துயர் போக்கற்காம் உபாயங்களைக் கூறித் துணை புரியவல்ல பகற்காலத்திலும், என்னைத் தனியே விடுத்து எல்லோரும் உறங்கும் இரவின் இடையாமத்திலும், கடல் அலைபோல் ஓயாது அலைக்கும் காம நோயால் நனிமிக வருந்தினேன். அவ்வாறு வருந்திய நான், இறுதியில் காம நோய்க் கடலைக் கடக்கவல்ல புணையாக இம் மடல் மாவைக் கைக்கொண்டேன். அதனால் மடல் ஏறி மன்றம் புகுந்தேன். பெரியோர்களே! என் உள்ளத்தில் காம மயக்கத்தைப் புகுத்தி விட்ட அவள் காட்டித் தந்த இம்மடல்மா, அவள் தந்த காம நோயால் அழியவிருந்த என் உயிரை அழிய விடாது காக்கவல்ல அரிய மருந்தாய் நின்று துணை புரிந்தது.

“பெரியோர்களே! என்னை இந் நிலைக்குக் கொண்டு விட்டவள், அவள் அல்லள்; என் மீது பகை கொண்ட காமன் என்னை அழித்து வருக என ஆணையிட்டுப் போக்கிய படையே என்னை இவ்வாறு ஆக்கிவிட்டது. அப்படைதான் தன் உண்மை உருவோடு வாராது, மாட்சி மிக்க அணிபல அணிந்து, மானெழில் பெற்று விளங்கும் அப்பெண்ணின் அழகுருவில் வந்துளது.

வந்த அப்படை, காண்பவர் அனைவரும் என்னை எள்ளி நகைக்கும் வண்ணம், என்னைத் தாக்கி, நாண் எனும் என்னுடைய நற்பண்பை முற்றி வளைத்து அழித்து விட்டுப், பின்னர் என் அகத்துட் புகுந்து என் உள்ளுணர்வையும் அழித்து விட்டது; பெரியோர்களே! காம நோயாகிய அக்கொடிய பகைவன், இவ்வாறு அழகு முதலாம் என் புற நலங்களையும், அறிவு முதலாம் அக நலங்களையும் அழித்துவிடவே, பாராட்டத்தக்க பண்டை நிலை இழந்து நிற்கும் எளியேனுக்கு, எழில் மிக்க நுதலினையுடையளாய அந்நங்கை நல்லாள் அளித்த இம்மடல்மா, அப்பகையால் அழிவுறாது, உட்புகுந்து உயிர்காத்துக் கொள்ளும் அரணாய் அமைந்து காக்கிறது.

"பெரியோர்களே! முல்லை அரும்பினை ஒக்கும் அவள் பற்களுக்கிடையே தோன்றும் நகையழகைக் கண்டு கருத்திழந்து அவளை அடைக்கலமாய் அடைந்துவிட்டது என் நெஞ்சு. அவளை விட்டுப் பிரிய மாட்டாது அவளையே சுற்றிச் சுற்றி வந்து உழலும், அந்நெஞ்சைப் பற்றி வருத்தும் இக்காம நோய், என் உயிரை அறவே அழித்து விடாது, இருந்து வருந்துமாறு சிறுகச் சிறுக எரிகின்றது. அந்தோ! அதன் கொடுமையை நான் எங்ஙனம் ஆற்றுவேன்! பெரியோர்களே! இப்பெண் அளித்த இக்காமக் கொடு நோய் அழல் போல் அறக் கொடிது என்றால், அவள் அளித்த இம் மடல்மா, அவ்வெரியினின்றும் பிழைத்தார் நின்று பேரின்பம் நுகர்தற்காம் நிழலாய்த் துணைபுரிகிறது.

"பெரியோர்களே! இதுவே என் நிலை. எந்நோயின் நிலை இது என்பதை நீங்கள் இப்போது அறிந்திருப்பீர்கள். அறிந்து கொண்டீராயின், தவம் செய்து, துறக்க இன்பம்

பெறுதற்கு உரியோனாய அரசன் ஒருவன், அத்தவ நெறியை மறந்து, துறக்க இன்பத்தைப் பெறலாகும் வாய்ப்பினை இழந்து போவதைக் காணும் சான்றோர், அவனுக்கு வேண்டும் அறிவுரை கூறி, அவனை அப்பிழை நெறியினின்றும் நீக்கி, நன்னெறிக் கண் உய்த்து, அவனை அவன் அடைய வேண்டிய துறக்க இன்பத்தில் கொண்டு நிறுத்துவது போல், நான் உற்று வருந்தும் என் காமநோயை அகற்றிக் காதலின்ப வெள்ளத்தில் வீழ்ந்து கரை காணும் கருத்தின்றிக் கிடந்து மகிழ்தற்காம் வழி வகைகளை அறிவித்து, என்னை வாழ்விப்பீராக!" என வேண்டிக் கொண்டான்.

"சான்றவீர்! வாழியோ! சான்றவீர் என்றும்
பிறர்நோயும் தம்நோய்போல் போற்றி அறன் அறிதல்
சான்றவர்க்கு எல்லாம் கடன் ஆனால், இவ்விருந்த
சான்றீர்! உமக்கு ஒன்று அறிவுறுப்பேன்; மான்ற
துளியிடை மின்னுப்போல் தோன்றி ஒருத்தி
ஒளியோடு உருவு என்னைக்காட்டி, அளியள் என்
நெஞ்சாறு கொண்டாள்; அதற்கொண்டும் துஞ்சேன்;
அணியலங்கு ஆவிரைப் பூவோடு எருக்கின்
பிணையல் அம்கண்ணி மிலைந்து, மணி ஆர்ப்ப
ஓங்கு இரும்பெண்ணை மடல் ஊர்ந்து என் எவ்வநோய்
தாங்குதல் தேற்றா இடும்பைக்கு உயிர்ப்பாக
வீங்கிழை மாதர்திறத்து ஒன்று நீங்காது
பாடுவேன் பாய்மா நிறுத்து.

யாமத்தும், எல்லையும் எவ்வத்திரை அலைப்ப
மாமேலேன் என்று மடல்புனையா நீந்துவேன்

தேமொழி மாதர் உறாஅது உறீஇய
காமக் கடலகப் பட்டு

உய்யா அருநோய்க்கு உயலாகும், மையல்
உறீஇயாள் ஈத்த இம்மா;

காணுநர் எள்ளக் கலங்கித் தலைவந்து என்
நாண்எழில் முற்றி உடைத்து உள்அழித் தரும்,
மாணிழை மாதராள் ஏர் எனக் காமனது
ஆணையால் வந்த படை;

காமக்கடும் பகையில் தோன்றினேற்கு ஏமம்
எழில்நுதல் ஈத்த இம் மா.

அகையெரி ஆனாது என் ஆருயிர் எஞ்சும்
வகையினால் உள்ளம் சுடுதரும் அன்னோ!

முகை ஏர் இலங்கு எயிற்று இன்னகை மாதர்
தகையால் தலைக்கொண்ட நெஞ்சு!

அழல்மன்ற, காமஅருநோய்; நிழல்மன்ற,
நேரிழை ஈத்த இம்மா.

ஆங்கதை,
அறிந்தனிராயின், சான்றவிர்! தான் தவம்
ஒரீஇத், துறக்கத்தின் வழீஇ, ஆன்றோர்,
உள்ளிடப்பட்ட அரசனைப் பெயர்த்து, அவர்
உயர்நிலை உலகமும் உறீஇயாங்கு, என்
துயர்நிலை தீர்த்தல் நும் தலைக் கடனே."

*மடல் ஏறுகின்ற தலைவன் சான்றோர்க்குக் கூறியது.*

4. மான்ற — ஒன்றொடொன்று கலந்து பெய்யும். 5. துளி — மழை. 6. ஒளி — அறிவு முதலாம் புகழ். 7. நெஞ்சாறு கொண்டாள் —

நெஞ்சை வரும் வழியாகக் கொண்டாள். 8. அணி அலங்கு; அலங்கு அணி – அசையும் – அழகு மிக்க. 9. பிணையல் – மாலை. 10. இரும் – கரிய. 10. எவ்வநோய் – காம நோய். 11. உயிர்ப்பு – இளைப்பாறி உயிர்ப்புப் பெற. 12. திறம் – பண்புகள்; ஒன்று நீங்காது – ஒன்றையும் விடாது. 14. எல்லை – பகல்; எவ்வத்திரை – நோய் அலைகள். 16. உறா அதுதான் – நோய் உறாமல்; உறீ இய – எனக்கு உண்டாக்கிய; 18. உய்யா – பிழைக்கமாட்டா; அரு – கொடிய. உயல் – பிழைக்கும் வழியாகும். 20. தலைவந்து – என்னை வந்தடைந்து 21. முற்றி – முற்றுகை இட்டு; உடைத்து – அழித்து. உள் – உள்ளுணர்வுகளை. 22. ஏர் என – அழகு என்று சொல்லும்படியாக, அதாவது அவ்வழகு உருவில். 24. ஏமம் – அரண்; 25. அகை – சுட்டு எரிக்கும். எஞ்சும் வகையால் – அறவே அழிவுறாது இருந்து துயர் உறும் வகையால் 27. அன்றோ – அந்தோ; இரங்கற் குறிப்பு. 28. முகை– முல்லை அரும்பு. 29. தகை – அழகு; தலைக்கொண்ட – அவள்பால் அடைக்கலம் புகுந்த; 30. மன்ற – உறுதியாக; நோய் – அழல்; மா நிழல் என மாற்றுக. 34. ஒரீஇ – கைவிட்டு. ஆன்றோர் அரசனை உறீஇயாங்கு என மாற்றுக; 37. நும் தலைக்கடன் – நும்முடைய தலையாய கடமை. நும்தலை – நும்மிடத்து, அதாவது நுமக்கு; கடன் – கடமையாம்.

# 23

## அறனுமாம் நுமக்கு

தமிழகத்துப் பேரூர் ஒன்றின் மன்றத்தில் ஊர்மக்கள் ஒன்று திரண்டிருந்தனர். மாலைக் காட்சிகளால் மனம் மகிழ்ந்திருந்த அவர்கள் கருத்தைக் கவரும் நிகழ்ச்சி யொன்று, ஆங்கே திடுமென நிகழ்ந்து விட்டது. அவ் ஊருக்குப் புதியவனான ஓர் இளைஞன், அம்மன்றை நோக்கி வந்து கொண்டிருந்தான். ஒரு கையில், பனை மடலால் குதிரை வடிவில் பண்ணப் பெற்ற ஊர்தி ஒன்றைப் பற்றி ஈர்த்துக் கொண்டு, மற்றொரு கையில் பெண்ணொருத்தியின் உருவம் தீட்டப் பெற்ற கிழியை ஏந்திக் கொண்டு வந்து சேர்ந்தான். பூளை, உழிஞை போலும் பூக்களால் ஆன மாலை மார்பிலும், நீலமணியும் பொன்னணியும் நெருங்க வைத்து ஆக்கினாற்போல் காட்சி அளிக்கும் மயிற்பீலியும், பொன்னிற ஆவிரை மலரும் கொண்டு தொடுத்த கண்ணி தலையிலும் கிடந்து காட்சி அளித்தன. இளைஞனின் இத் திருக்கோலக் காட்சி ஆண்டுக் கூடியிருந்தார்க்கு அரிய விருந்தாயிற்று.

அனைவரும் எழுந்து ஓடி அவனைச் சூழ்ந்து கொண்டு அவனையும், அவன் ஈர்த்து வரும் அக் குதிரை ஊர்தியையும், அவன் மார்பிற் கிடந்து புரளும் மாலையையும், அவன் தலையில் கிடந்து காட்சி அளிக்கும் கண்ணியையும் மாறி மாறி நோக்கி மருண்டு நின்றனர்.

ஊர் மன்றை அடைந்த இளைஞன், மன்றில் கூடியிருந்த மக்கள் திடுமெனச் சூழ்ந்து கொண்டு தன்னையும், தன் திருக்கோலத்தையும் வியந்து நோக்கக் கண்டதும், அவனும் அப்படியே செயவிழந்து நின்று விட்டான். அவ்வூருக்கு அணித்தாக உள்ள ஊரைச் சேர்ந்த அவன், அவ்வூரினளான ஒரு பெண்ணைக் கண்டு காதல் கொண்டிருந்தான். அவன் கையில் ஏந்திய கிழியில் தீட்டப் பெற்றிருந்த திருவுருவம் அப் பெண்ணினுடையதேயாம். அவளுக்கும் அவன்பால் காதல் உண்டு. அதனால் இருவரும் சிலநாள் கலந்து உறவாடியதும் உண்டு. ஆயினும், பெற்றோர்க்கு அடங்கி வாழும் அவளால், அவன் விரும்பியபோதெல்லாம், அவனை வரவேற்று இன்பம் அளிக்க இயலவில்லை. அதனால் அவன் நனிமிக வருந்தினான். அவன் அவள் பெற்றோரை அடுத்து, அவளை மணம் செய்து தருமாறு வேண்டியிருத்தல் வேண்டும். ஆனால், அவன் புதியவனே ஆதலின், அவர்கள் தம் மகளை அவனுக்குத் தர இசைந்திலர் போலும். காதலியைக் கண்டு மகிழ்தற்கு இயலாமையால், இயல்பாகவே கலங்கியிருந்த அவன், அவள் பெற்றோர் மறுத்துரை கேட்டு மேலும் கலங்கி விட்டான். கலக்க மிகுதியால் கருத்திழந்து போனான். அதனால் தன்னைச் சேர்ந்த சான்றோர் சிலரை, அவள் பெற்றோர்பால் அனுப்பி மணம் பேசி முடிக்கும் மணமுறையை மறந்தான்.

வலிய வரைந்து கொள்ளும் முறையல்லா முறையில் சென்றது அவன் மனம். அதன் விளைவே அவன் கொண்ட இத்திருக்கோலம். மாண்பு மிகு பெரியோர் துணை கொண்டு பெற வேண்டிய திருமணத்தை மடல் துணை கொண்டு பெறத் துணிந்து விட்டான்.

அத் துணிவோடும், அதற்கு வேண்டும் துணை களோடும் அவளூர் மன்றை அணுகியவன், ஆங்கு அவ்வூரார் சிலர், தன்னைச் சூழ்ந்து கொள்ளக் கண்டு, அவர்பால் சினம் கொண்டான். "தம்மூரினளான ஒரு பெண்ணால் பித்தேறியுள்ளான் இவன் என உணர்ந்து அது தீர்க்க முன் வாராத இவர்கள் என்னைக் சூழ்ந்து கொண்டு, எள்ளி நகைப்பார் போல் என்னை நோக்கு கின்றனரே! என்னே இவர் அறவுள்ளம்! இவர் அன்பு இருந்தவாறுதான் என்னே!" என்று எண்ணிச் சினந்து சிந்தை நொந்தான். அவர்கள் உணர்ந்து கொள்ளாத தன் காதல் உறவை, காதல் கொண்ட இருவரை ஒன்று கூட்டி வாழ வைப்பது ஊர்ப் பெரியோர்களாய தம் கடமையாம் என அவர் உணராத அவர் கடமை யுணர்வினை அவர்க்குத் தானே உணர்த்த விரும்பினான். தான் உணர்த்த உணர்ந்தாவது, அவர்கள் தன் காதலுக்குத் துணை புரிவர் என நம்பினான்.

அதனால், வந்து சூழ்ந்து கொண்டு, தன்னையும், தன் உடைமைகளையும் வியப்புணர்வு தோற்றும் தம் விழி களால் மருண்டு நோக்கி நிற்பாரைப் பார்த்து, "என்னைப் பண்டு அறியாதவர் போலவும், இதற்கு முன் எவரும், எங்கும் செய்து அறியாத ஒரு செயலைச் செய்து நிற்பேன் போலவும், என்னை விழித்து நோக்கும் இவ்வூர்ப் பெரியோர்களே! கையில் பிடித்து ஈர்த்து வரும் இது,

வெறும் பனைமடல் அன்று. அப் பனை மடலால் ஆன மாவென்று உணருங்கள். பூளை உழிஞை போலும் மலர்களால் மாலை தொடுப்பது வழக்கம் இல்லையே என்ற உணர்வு உங்கள் உள்ளத்தில் எழுவதால், என் மார்பிற் கிடந்து மணக்கும் அம் மலர்களால் ஆன இம் மாலையெனக் கொள்ளாது, தனித்தனி மலர்களாம் என்று கொண்டு மருளன்மின். புனத்தினின்றும் புதியனவாகப் பறித்துக் கொணர்ந்த அவை தனி மலர்கள் அல்ல; அம் மலர்களால் ஆன மாலையே; அவற்றை நானே தொடுத்தேன்; மனம் விரும்பியே சூடிக் கொண்டுள்ளேன். இதோ, என் தலையில் கிடப்பது, மணியிடையிட்டுப் பொன்னால் பண்ணிய தலை முடியன்று; நீல மணியின் நிறம் விளங்கும் மயிற்பீலியையும் பொன்னிற ஆவிரை மலரையும் கொண்டு தொடுத்த தலை மாலையாகும். பெரியோர்களே! என்னை இக்கோலம் கொள்ளச் செய்து விட்டாள் ஒருத்தி. திருமாலின் திருக்குமரனாகிய காமன் என் பண்பையும், பேரறிவையும் அழிக்கத் திருவுளம் கொண்டு விட்டான் போலும். அதைச் சாதித்துக் கோடற் பொருட்டு, அவன் உலகில் உள்ள அழகை யெல்லாம் ஒன்று திரட்டி உருவாக்கினாற் போலும் ஒரு பெண்ணைப் படைத்து என்பால் போக்கினன். அவள் நுதலழகு, தொடி யணிந்த தோளழகு, இருளை வெல்லும் தன் கருங்கூந்தலை ஐவகையாக அவள் முடித்திருக்கும் அழகு, அழகெலாம் சேரத் தோன்றும் அவள் சிரிப்பொலி ஆகிய இந் நலங்களைக் கண்டு நான் என் அறிவை இழந்து விட்டேன். என் நெஞ்சு நெக்குவிட்டு நெகிழ்ந்து விட்டது. அந் நெகிழ்ச்சியினூடே, அவள் உட்புகுந்து, என்னை ஆட்டி அலைக் கழிக்கத் தலைப்பட்டு விட்டாள். இவ்வாறு நான்

அவளுக்கு அடிமைப்பட்டு விட்டேன் என்பதை அவளுக்குக் காட்டவே ஆங்குச் செல்கிறேன்; அதற்காகவே இத்திருக்கோலமும் கொண்டுள்ளேன். என் நிலை காணும் நீவிர், இப்படியும் ஓர் இளைஞன் இருப்பனோ என எண்ணி, என்னைக் காணவும் நாணாதீர்கள். அப்படியாகி விட்டேன் நான். அந்த வழிக்கு வந்தவன் நான். என் செய்வேன்? பெரியோர் களே! இவ்வாறு ஆகிவிட்டேன் நான். இவ்வாறு கெட்டுவிட்டது என் அறிவும். என்றாலும், நீங்கள், நான் பாட வேண்டும் என்று விரும்புவீராயின், எப்படியாவது பாடுகிறேன். ஆடு என்று நீங்கள் ஆணையிட்டால் அவ்வாறே ஆடுகிறேன். எங்ஙனமாவது தங்கள் ஆணையை நிறைவேற்ற வல்லேன். பெரியோர்களே! நான் கொண்ட இக் காமநோயைப் போக்கும் மருந்தாக என் காதலியாகிய நும் ஊர்ப் பெண் அளித்த இம் மடல் மாவைச் சிறிது பாடட்டுமா?" என்று வினவினான்.

அவன் அவ்வாறு வினவியும், அவர்கள் வாய் திறந்திலர். அவனை விழித்து நோக்குவதையும் கைவிட்டிலர். அதனால் அவனுக்கு அவர்பால் சினம் மிகவே, அவர்க்கு அவர் செய்யத் தவறிய கடமைகளை நினைவூட்டத் துணிந்தான். உடனே, "பெரியோர்களே! திங்களைப் பாம்பு கௌவிக் கொண்டது போலும் காட்சி வானத்தில் அவ்வப்பொழுது தோன்றுவதை நீங்களும் கண்டிருப்பீர். அக் காட்சியைக் காணும் சான்றோர், பாம்பால் திங்கள் துயர் உறுவது இல்லையாகவும், அவர் நல்லுள்ளத்தின் பயனாய்த் திங்களுக்குப் பாம்பால் பெருந் துன்பம் நேர்ந்து விட்டதாக நினைப்பர். நினைக்கும் அவர்களால், திங்களை அணுகி அதன் துயர்போக்குவது

இயலாது. இயலாது என்பதால் வாளா இருந்து விடாது, "அந்தோ! திங்கள் அரவின் வாய்ப்பட்டு விட்டதே!" என்று கூறி வருந்துவதையாவது செய்வர். பெரியோர் களே! அதுவன்றோ சான்றோர் பண்பு! அவர் அல்லவோ உண்மைச் சான்றோர்! இவ்வூரிலும் சான்றோர் உளர் என்கின்றனர். இவ்வூர் வாழ் பெண்ணொருத்தியால் உண்மையில் துயர் உறுகிறேன் நான். துயர் உற்றுத் துடிக்கிறேன் என்பதை அவர்க்கு, அவர் ஊர் நடுவே இருந்து உரத்த குரல் எடுத்துக் கூறி வருந்துகிறேன். நான் கொண்டுள்ள நோயும், அவர் தீர்க்கும் அளவில் உளது. நிலைமை இதுவாகவும், கண்டோர் உயிர் வெளவும் அவள் கண்ணொளி கண்டு, அக் கண்ணொளி அளித்த காதல் நோயால் என் நெஞ்சு நிலைகெட்டு அழிவதைக் கண்டும் அவர்கள் என்மீது கண்ணோட்டம் செலுத்துவதும் செய்திலர். என்ன சான்றோர் இவர்கள்!

"பெரியோர்களே! தன்னால் தீண்டப் பட்டவர் உயிரைத் திடுமெனப் போக்கும் கொடிய நஞ்சுடைய நல்ல பாம்பும் ஆன்றோர் அவை புகுமாயின் உயிர் பிழைத்துப் போம். அப் பாம்புபோல் நஞ்சுடையேனல்லன் நான். மாறாக அரவு தீண்டி அழிவார்போல், இவ்வூர்வாழ் ஒருத்தியின் கண்ணொளி செய்த காமநோய் தீண்டிக் கலங்குகிறேன். அவ்வாறு கலங்கும் நான், இப்போது இவ்வூர்ச் சான்றோர்கள் சூழ்ந்திருக்கும் மன்றின் இடையேதான் நிற்கிறேன். அவரிடையே இருந்தும் அழியப் போகிறேன். நச்சரவையும் வாழ்விக்கும் அந்நல் லுள்ளம் இவ்வூர்ச் சான்றோர்க்கு மட்டும் வாய்த்திலது போலும்! தம் ஊரினளாய ஒருத்தி அளித்த, உயிர்

போக்கும் என் நோயை அறிந்தும், அறியாதவர்போல் உள்ளனர். என்னே இவர் சால்பு!

"பெரியோர்களே! வெள்ளத்தினிடையே, விரைந்து ஓடும் சுழியினிடையே சிக்கினான் ஒருவனைக் காணின், கரைக்கண் நிற்பவர் ஓடிக் காத்தல் தலையாய கடமை யாகும். கரைக்கண் நிற்பவர்க்கு நீந்த வாராதாயின்; அந்நிலையில், 'அஞ்சாதே, அப்படியே சென்று, துணி ஒன்றினை அவரை நோக்கி வீசி, அதைப் பிடித்துக் கொண்டு, இப்படி வந்து கரையேறு என்பன போல்வன கூறினாலும் போதும். அதுவே அவனுக்கு ஊக்கம் அளித்து உயிர் பிழைக்க உதவக் கூடும். கரைக்கண் நிற்பவர் எவரும் இதைச் செய்வர். காதலி காட்டிய காம நோய் வெள்ளத்தில் வீழ்ந்து கரைகாணாது கலங்குகிறேன் நான். இதைக் கண்ணெதிரே காணுகின்றனர் இவ்வூரார். இவ்வெள்ளத்தினின்றும் என்னைக் கைகொடுத்துக் கரை சேர்க்கும் திறன் அவர்பால் உளது. ஆனால், அவர் அதைச் செய்திலர். அஞ்சாதே என்று ஒரு சொல் கூறவும் அவர் உள்ளம் இடந்தரவில்லை போலும். என்னே இவர் சால்பு!"

என்று ஏதிலார் முன் கூறுவது போல் கூறி, அவர் குறையினைச் சுட்டிக் காட்டினான். அது கேட்டும் அவர்கள் வாய் திறந்திலர். அவர் போக்கினை இளைஞன் கண்டான். இவ்வாறு, யாரிடமோ கூறுவதுபோல் கூறிப் பயன் இல்லை. குறை தீர வேண்டுமேல் அவரை நேரிடையாகவே இரந்து குறை கூற வேண்டும் எனத் துணிந்தான். அதனால், "பெரியோர்களே! என் நோய் இன்னது என்பதை உங்களுக்குத் தெளிவுறத் தெரிவித்து விட்டேன். இனி நீங்கள் செய்ய வேண்டுவது. நோய்

*போக்கும் வழி யாது என்பதை ஆராய்ந்து, அவ்வழியை விரைந்து மேற்கொள்வதே ஆம். அந் நல்லுள்ளம் உங்கள்பால் உண்டேல், என் அறிவை மயக்கும், என் மனத்தை மருட்டும் இக் காமநோய் என்னை விட்டு அகலச் செய்யுங்கள். அதைப் போக்கவல்ல மருத்துவம் அறிந்தவள், உங்கள் ஊர்ப் பெண்ணே ஆவள். அவள் உள்ளத்தில் அந்நல்லுணர்வு தோன்றுமாறு செய்வ தொன்றே நீங்கள் செய்ய வல்ல நற்றொண்டாம். அதைச் செய்யின், உங்களுக்கு அறப் பயனோடு புகழ்ச் சிறப்பும் உண்டாம். ஆன்றோர்களே! அந் நற்பணியை, இன்றே, இப்போதே செய்து எனக்கு வாழ்வளிப்பீராகுக!" என வேண்டிக் கொண்டான்.*

"கண்டவிர் எல்லாம் கதுமெனவந்து ஆங்கே
பண்டறியா தீர்போல நோக்குவீர்; கொண்டது
மாஎன்று உணர்மின்; மடல்அன்று; மற்றுஇவை
பூஅல்ல; பூளை உழிஞையோடு யாத்த
புனவரையிட்ட வயங்கு தார்ப்; பீலி
பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி

அடர்பொன் அவிர் ஏய்க்கும் ஆவிரங் கண்ணி,
நெடியோன் மகன் நயந்து தந்தாங் கனைய
வடிய வடிந்த வனப்பின் என்நெஞ்சம்
இடிய இடைக்கொள்ளும் சாயல் ஒருத்திக்கு
அடியுறை காட்டிய செல்வேன்; மடியன்மின்;
அன்னேன் ஒருவனேன் யான்;

என்னானும் பாடு எனில்பாடவும் வல்லேன்; சிறிது ஆங்கே
ஆடு எனில் ஆடலும் ஆற்றுகேன்; பாடுகோ?
என்னுள் இடும்பை தணிக்கும் மருந்தாக

நன்னுதல் ஈத்த இம்மா;
திங்கள் அரவுறின் தீர்க்கலார் ஆயினும்
தம்காதல் காட்டுவர் சான்றவர்; இன்சாயல்
ஒண்தொடி நோய் நோக்கிற்பட்ட என் நெஞ்சநோய்
கண்டும் கண்ணோடாது இவ்வூர்;

தாங்காச் சினத்தொடு காட்டி உயிர் செகுக்கும்
பாம்பும் அவைப்படின் உய்யுமாம்; பூங்கண்
வணர்ந்துஒலி ஐம்பாலாள் செய்த இக்காமம்
உணர்ந்தும் உணராது இவ்வூர்;

வெஞ்சுழிப் பட்ட மகற்குக் கரைநின்றார்
அஞ்சல் என்றாலும் உயிர்ப்பு உண்டாம்; அஞ்சீர்ச்
செறிந்தேர் முறுவலாள் செய்த இக்காமம்
அறிந்தும் அறியாது இவ்வூர்;
ஆங்க

என்கண் இடும்பை அறீஇயினென்; நுங்கண்
தெருளுற நோக்கித் தெரியுங்கால், இன்ன
மருளுறு நோயொடு மம்மர் அகல
இருளுறு கூந்தலாள் என்னை
அருளுறச் செயின், நுமக்கு அறனுமார் அதுவே."

*மடல் ஏறுவேன் என்று, தலைவன் கண்டார்க்குக் கூறியது.*

1. கதுமென – விரைந்து; 5. புனவரை – புனத்திடத்தில், தார் – மாலை, 6. பிடியமை– கட்டிப் பிடிக்கவல்ல; பீலிநூலொடு ஆயிரங்கண்ணி; மணி கட்டிப் பொன் அவிர் ஏய்க்கும் கண்ணி எனக் கூட்டிப் பொருள் செய்க. 7. நெடியோன் மகன் – காமன்; 9. வடிய வனப்பு – கண்டவர் உயிர் அழிய அமைந்த அழகு, வனப்பின் – வனப்பால் 10. இடிய – இடிந்து போக.

# 24

# கொடுத்தார் தமர்

புறப்பகை அகப் பகைகளாய இருவகைப் பகையும் அற்றது பாண்டி நாடு. பாண்டியவரின் படை வளம், அந் நாட்டின்பால் பகை கொண்டிருந்தாரைப் பணிந்து திறை கொடுத்துப் பகையொழித்து வாழப் பண்ணிற்று. அந்நாடு பெற்றிருந்த ஆன்றோர்ச் செல்வம், ஆகூழ் இழந்து, ஒரோவொருகால், அறநெறியில் பிறழ்ந்து விடுவார் சிலரையும், தன் பெருமையால் பண்டேபோல் பேரற நிலையில் வாழப் பண்ணும்.

அறக் கேடோ, பொருட் கேடோ, இன்பக் கேடோ அறியாப் பெருமை மிக்க அப் பாண்டி நாட்டில், இளைஞன் ஒருவன் வாழ்ந்திருந்தான். பாண்டி நாட்டுப் பெருங்குடி மக்கள்பால் பொருந்தியிருக்க வேண்டிய பண்புகளெல்லாம் அவன்பால் பொருந்தியிருந்தன. அவன் ஓர் ஆற்றல் மிக்க பெரு வீரன். களம் புகுந்தால், பகைவர் படை மீது அஞ்சாது பாய்ந்து அழிக்கவல்ல குதிரையே அவன் கண்முன் தோன்றும். எவரும் ஏற

அஞ்சும் அதன் மீது ஏறி அமர்ந்து கொண்டால், அது அவனுக்கு அடங்காது, தான் விரும்புவது போல் திரிந்து கொடுக்காது, அவன் ஆட்டுமாறெல்லாம் ஆடி, அவனுக்கு வெற்றிப் புகழைத் தேடி அளிக்கும். களத்தில் இரக்க உள்ளம் இழந்து, போர் வெறி கொண்டு அலையும் அவன் அருளை அறியாதவனல்லன். அமரின் போது கல்லினும் வல்லிதாய்த் தோன்றும் அவன் உள்ளம், இல்லாமையால் தன் முன் வந்து இரந்து நிற்பாரைக் காணின், நெருப்பிடை வீழ்ந்த நெய்யினும் மெல்லிதாய் நெகிழ்ந்து விடும். அவன் ஒரு பெருங் கொடையாளி. உலகமே திரண்டு வரினும் உதவத் தவறான். அதற்கு ஏற்ப, உலகத்து உயிர்களுக் கெல்லாம் உணவளித்து ஓம்புதற் கேற்ற ஊக்கம் மிக்கது அவன் உள்ளம். ஆற்றல், அறம் ஆகிய இரு பெரும் பண்பு களால் பெருமையுற்ற அவன்பால், அறிவுச் செல்வமும் ஆரப் பொருந்தியிருந்தது. சொல் வளம் அறிந்து, பயன் நிறைந்தனவும், பண்பு மிக்கனவும் ஆய சொற்களையே வழங்கவல்ல பேரறிவாளர் நிறைந்துள்ள அவையிடையே நின்று, அவர்க்ளும் வியக்கும் வகையில் தான் கற்ற கல்விப் பொருளை வகைப்படுத்தி உரைக்கும் உயர்ந்த கல்வி வளம் அவன் உள்ளத்தில் ஊற்றெடுத்துப் பாய்ந்தது.

இவ்வாறு, அறிவாலும் திருவாலும் ஆற்றலாலும் சிறந்திருந்த அவன், மக்கட் பிறவி எளிதில் வாய்க்கலாகா மாண்புடையது, அது பெற்றார், அப் பிறவியால் பெற்ற பெருவாழ்வை மேலும் மாண்புடையதாக்கும் நல் லொழுக்க நெறியில் நிற்க வேண்டுமே யல்லாது, அதற்கு மாறுபட்ட நெறியில் சென்று மாண்பிழந்து போதல் கூடாது; அவ்வறிவு வாய்க்கப் பெற்றவர், அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையும் அளிக்க வல்ல ஆக்கச்

செயல்களை மட்டுமே ஆற்றுதல் வேண்டும்; அதை விடுத்துத், தம் மனம் போனபடியெல்லாம் செயல்பட்டுச் சீரழிதல் கூடாது என்பன போலும் திருந்திய சிந்தையும் வாய்க்கப் பெற்றிருந்தான்.

இவ்வாறு எல்லா வகையாலும், எல்லாராலும் போற்றிப் புகழப் பெற்ற அவனை, ஒரு பெண்ணின் பேரழகு தனக்கு அடிமை கொண்டு விட்டது. இளமை உணர்ச்சிகளால் உந்தப் பெற்ற அவன், அவள்மீது காதல் கொண்டு விட்டான். ஆனால், அவன் உள்ளத்தில் காதல் வித்துக்களைத் தூவி வளர்த்துவிட்ட அவள் கிடைத்தற்கு அரியளாயினாள். அவன் உள்ளத்தில் நிலை பெற நின்று விட்ட அவள், அவன் கைக்கு அகப்படாத் தொலை வினள் ஆயினாள். அவள் நிறைமதி போலும் பேரழகி யாதல் கண்டு நெகிழ்ந்தது அவன் உள்ளம். ஆனால் அவளோ, நீரிடையே தோன்றும் நிறைமதியின் நிழல்போல், கைகளால் பற்றிக் களிப்புறுதற்குக் கிட்டா அருமையுடையவளானாள். உலகத்தார் அனைவரும் ஒருங்கே போற்றிப் புகழக், கீழ்வானில் தோன்றி, வான வீதியில் உலா வரும் ஞாயிறு போலும் பெரும் புகழ் உடையவள் என்பதை அறிந்து உருகிற்று அவன் உள்ளம். ஆனால் அவளோ, அஞ்ஞாயிறு எவராலும், எவ்வகை யாலும் அணுகுதற்கு இயலா அருமையுடையதாதல் போல், அவன் காதலுக்குக் கிட்டாக் காரிகையாய்க் காணப்பட்டாள். இடி உமிழுமாறு இருண்டு திரண்ட கருமேகங்கள் சூழ்ந்த வானில், இருளின் கொடுமையைக் கெடுத்து, ஒளி காட்டும் மின்னல் போலும் வனப்பினள் அப் பெண் என அறிந்து, அவள் காதலுக்காக ஏங்கிற்று இளைஞன் நெஞ்சம். ஆனால் அவளோ, கையால் பற்றற்கு

இயலா அக் கொடி மின்னல் போல், அவனால் அடை தற்கு அரியளாயினாள்.

அவள் அரியள் என்பதை அறிந்தும், அவள்பால் கொண்ட காதலை அவன் கைவிட்டிலன். மாறாக, அது அளவிறந்து வளர்ந்து பெருகிற்று. அவன் உள்ளம், காதல் உணர்வால் நிறைந்து விடவே, அவன் அறிவிழந்த வனானான்; ஆற்றல் இழந்தவனானான்; அருளை மறந்தது அவன் மனம். மடல் ஏறி மன்றம் புகவும், கண்ணிற் படுவார் ஒவ்வொருவரிடத்திலும், தன் காதல் நோயைக் கூறி, அந்நோய் தீர்த்துத் துணை புரியுமாறு இரந்து வேண்டிக் கொள்ளவும் துணிந்து விட்டது அம்மனம். அவ்வாறே, ஒரு நாள், அவன் மடன் மாவோடு, அவளூர் மன்றம் அடைந்து, மடல் ஏறி மாண்பிழந்தான். அவனை அந்நிலையில் சிலர் கண்டனர். பாண்டி நாட்டுப் பண்பாட்டுப் பெருமையினைப் பாராட்டும் பேருள்ளம் படைத்தவர், அப்பெரியோர். பகைவர் வந்து பணிந்து திறைதரப் பெற்றுப் பகை யொழித்துப் பாராளும் பாண்டியன் பெருமையை அப்பொழுதுதான் பார்த்துத் திரும்பிய அவர்கள், அப்பாண்டி நாட்டில், இத்தகைய அறமல்லாச் செயல் நிகழக் கண்டு, பாண்டி நாட்டின் பெருமைக்கும் இழுக்கு வந்துற்றதே என எண்ணி இரங்கினர். அவ்வெண்ணத்தில் ஆழ்ந்து பாண்டி நாட்டின் புகழ்க் கேடு குறித்துக் கண்ணீர் விட்டுக் கொண்டிருக்குங்கால், அவ்வூர்ச் சான்றோர் சிலர் ஆங்கு வந்தனர். வந்தவர்கள் இளைஞனை அணுகி, மக்கட் பிறவியின் மாண்பை மறந்து மடல் ஏறி அறமல்லாதன புரியும் அவன் அறிவு கெட்ட நிலை கண்டு வெகுண்டு, வெறுத்தனர். ஆனால் இளைஞன் அது குறித்துக் கவலை

யுற்றிலன். மாறாக, அறநெறி வாழ்வளிக்கும் விழுமிய சிறப்பினைத் தனக்கு உரைக்க வல்ல சான்றோர்க்குக், குதிரை ஊர்ந்து களம் புகுந்து போரிட்டுப் புகழ் நாட்ட வல்ல பேராண்மை, உலகமே வறுமையுறினும், அதுகண்டு உளம் கலங்காது, அவ்வுலகனைத்திற்கும் உணவளித்து ஓம்பவல்ல ஊக்கமும் உரமும் வாய்ந்த உள்ளம், கல்வியில் வல்லாரும் கண்டு வியக்குமாறு சொல்லாட வல்ல கல்விச் செல்வம் முதலாம் சிறப்புக்களை ஒருங்கே பெற்றிருந்த தன் பண்டைப் பெருமையினையும், அப் பெருமை யனைத்தும் அறவே அழிந்து போக, மடல்மா ஏறி மன்றில் உலாவவும், ஒருவரை அடுத்து இருகை ஏந்தி இரக்கவும், கல்லாரும் எள்ளி நகைக்கவும், தன்னைக் காதல் நோய்க் கடலில் ஒருத்தி தள்ளி விட்டதையும் விளங்கக் கூறினான்.

தன் பண்டைப் பெருமைகளை, அவற்றை இழக்கப் பண்ணிய காதல் நோயை, அக்காதல் நோயை அளித்து விட்டுக் காண்பதற்கும் அரியளாகி மறைந்து விட்ட அவ்வூர்ப் பெண்ணை, அவள் பேரழகு நிலையைக் கூறிய இளைஞன், அந்த அளவோடு நின்றிலன். அவன் பெற்று வருந்தும் காதல் நோய், அவனை அந்த அளவோடு விட்டிலது. காதல் நோய் மிகுதியால் கருத்திழந்து கிடப்பதால், "சான்றோர்களே! மக்கட் பிறவி பெறுதற் கரிய பெருமை யுடையது என்பதை அறிவேன். மக்கட் பிறவி வாய்க்கப் பெற்றவர், அறம், பொருள், இன்பங்களைப் பயக்கும் அருஞ்செயல்களையே ஆற்றுதல் வேண்டும் என அறநூல்கள் கூறுகின்றன என்பதையும் அறிவேன். சான்றோர்களே! அவ்வற நூல்கள் மற்றொன்றையும் அறிவித்துள்ளன; அதை நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள். ஆனால் அதை நான் அறிவேன். மக்களாய்ப் பிறந்தவர், அறம், பொருள், இன்பம்

பயப்பனவே ஆற்றுதல் வேண்டும் எனக் கூறும் அவ்வற நூல்களே, அம்மக்கள், யாதோ ஒரு காரணத்தால் தம் இயல்பு கெட்டு இயங்கும் காலத்தில், தம் மனம் போனபடி யெல்லாம் திரிந்து, தாங்களும் மாண்பிழந்து போவதோடு, அவ்வாறே திரியுமாறு பிறர்க்கும் அறிவுறுத்தி, அறம் பொருள், இன்பம் ஆகிய இவற்றுள் எதன்பாலும் சாராப் பயனற்ற செயல்களைச் செய்யவும் உரிமையுடையவராவர். அவ்வகையால் காதல் கைகூடப் பெறாது வருந்தும் இளைஞர், இவ்வாறு மடலூர்ந்து மன்றில் திரிவதும் இழுக்கில்லை என்றும் கூறுகின்றன. அதை நீவிர் அறிந்திலீர் போலும்!" என அச் சான்றோர்க்கே அறம் உரைக்கவும் துணிந்து விட்டான்.

அவன் அவ்வாறு உரைக்கக் கேட்ட சான்றோர், அவன்பால் கொண்ட சினம் தணிந்தனர். அவனைப் பண்டே அறிந்த அவர்கள், அவன் கூறியன யாவும் உண்மை என்பதை உணர்ந்தனர். அறிவிழந்து அறம் பிறழ்ந்து போனது அவன் குற்றம் அன்று; அவனை அந்நிலைக்குக் கொண்டுவிட்ட காதல் நோயே குற்றம் உடைத்து என உணர்ந்தனர். உடனே, அவன் கூறிய கூற்றின் துணையால், அவனை அந்நிலைக்குக் கொண்டு விட்ட அவ்வூர்ப் பெண் யாவள் என அறிந்து, அவளை அவனுக்கு மணம் செய்து அளிக்குமாறு அப்பெண்ணின் பெற்றோரைப் பணித்து, இளைஞன் துயர் தீர்த்து அகன்றனர். அவனும், மேற்கொள்ள இருந்த மடல் ஏறலாம் அறம் அல்லாச் செயலைக் கைவிட்டு அக மகிழ்ந்தான்.

இளைஞனின் மடலேறும் முயற்சி கண்டு, பாண்டி நாட்டில் அறம் பிறழ்ந்து விட்டதோ என மனம் கலங்கி பெரியோர், அவ்வூர்ச் சான்றோரால் அது கைவிட

*பட்டமை கண்டு, "பாண்டி நாட்டில் பேராண்மை வாழ்வதைப் போலவே, பேரறமும் வாழ்கிறது! வாழ்க பாண்டியர் பேராண்மை! வாழ்க அப் பாண்டி நாட்டு அறவாழ்வு!" என வாழ்த்தி அகன்றனர்.*

"அரிதினில் தோன்றிய யாக்கை புரிபு, தாம்
வேட்டவை செய்து, ஆங்குக்காட்டி, மற்று, ஆங்கே
அறம் பொருள் இன்பம் என்று அம்மூன்றின் ஒன்றன்
திறம் சேரார் செய்யும் தொழில்கள் அறைந்தன்று
அணிநிலைப் பெண்ணை மடல்ஊர்ந்து ஒருத்தி
அணி நலம் பாடி வரற்கு.

ஒரொருகால் உள்வழிய ளாகி, நிறைமதி
நீருள் நிழல்போல் கொளற்கு அரியள் போருள்
அடன்மாமேல் ஆற்றுவேன் என்னை; மடன்மாமேல்
மன்றம் படர்வித்தவள்; வாழி சான்றீர்!

பொய்தீர் உலகம் எடுத்த, கொடிமிசை
மையுறு மண்டிலம் வேட்டனள், வையம்
புரவூக்கும் உள்ளத்தேன் என்னை இரவூக்கும்
இன்னா இடும்பை செய்தாள்; அம்ம சான்றீர்!

கரந்தாங்கே இன்னா நோய் செய்யும்; மற்று இஃதோ
பரந்த சுணங்கின் பணைத்தோளாள் பண்பு.

இடிஉமிழ் வானத்து இரவு இருள் போழும்
கொடிமின்னுக் கொள்வேன் என்றன்னள், வடிநாவின்
வல்லார்முன் சொல்வல்லேன் என்னைப், பிறர்முன்னர்க்
கல்லாமை காட்டியவள்; வாழி சான்றீர்!

என்றாங்கே,
வருந்தமா ஊர்ந்து மறுகின்கண் பாடத்

திருந்திழைக்கு ஒத்த கிளவிகேட்டு, ஆங்கே
பொருந்தாதார் போல்வல் வழுதிக்கு அருந்திறை
போலக் கொடுத்தார் தமர்."

*தலைவன் மடல் ஏறத் தமர் அஞ்சித் தலைவியைக் கொண்டு வந்து கொடுத்ததைக் கண்டோர் பாராட்டியது.*

1. புரிபு – மாறுபட்டு, 2. வேட்டவை – மனம் போனபடி. 5. பெண்ணை – பனை; பாடிவரற்கு (நூல்கள்) அறைந்தன்று எனக் கொண்டு வந்து கூட்டிமுடிக்க. 8. போர் – போர்க்களம். 9. அடல்மா – கொடிய குதிரை. ஆற்றுவேன் – திறம்படப் போர் செய்ய வல்லேன். 11. உலகம் – உலகத்து உயர்ந்தோர்; எடுத்த – புகழ்ந்த; கொடி – கீழ்த் திசை. 12. மண்டிலம் – ஞாயிறு; வேட்டனள் – விரும்புதற்கு அரியது போலும் அரியள்; வையம் – உலகத்து உயிர்கள். 13. புரவு – காத்தல்; இரவு – யாசித்தல். 15. கரந்து – ஒளிந்து. 16. சுணங்கு – தேமல் படர்ந்த. 17. போழும் – பிளக்கும். 18. வடிநா – பயனிலவும், பண்பிலவுமாய சொற்களைப் பயிலாத நாக்கு. 23. கிளவி – சொல்லாடல்; 24. பொருந்தார் – பகைவர்; போர்வல் வழுதி – போரில் வல்ல பாண்டியன்.

# 25

# தெளிந்து நலம் பெற்றாள்

நாணம் மடம் முதலாம் நற்பண்புகள் நிறைந்து, நல்ல குடியில் பிறந்த நங்கை யொருத்தி, தன் உள்ளம் விரும்பும் நல்லோன் ஒருவன்பால் காதல் கொண்டாள். காதல் இன்பத்தில் சில நாள் களித்து மகிழ்ந்தனர் இருவரும். ஆனால், அவர் காதலை அவர் பெற்றோர் அறியாராதலின், காதலின்ப நுகர்வில் இடையூறு பல குறுக்கிடக் கண்டு கவலை கொண்டனர். அதனால் இருவரும் பலர் அறிய மணந்து வாழும் வாழ்வில் மனங் கொண்டனர். அதற்கான முயற்சிகளை விரைந்து மேற்கொள்வதாக வாக்களித்து இளைஞன் வீடு சென்றிருந்தான்.

நாட்டு நடப்பு அவன் முயற்சிக்குக் குறுக்கிட்டது. நாட்டில் போர் மூண்டு விட்டது. நாட்டைக் காக்க, இளைஞன் களம் புக வேண்டியதாகிவிட்டது. காதலியைக் கண்டு நிகழ்ந்ததைக் கூறி விடைபெற்றுச் செல்வதற்கும் காலம் இல்லாது போயிற்று. ஆனால் அவளோ, காதலன்

வாக்களித்தவாறே, வரைவிற்காம் ஏற்பாடுகளோடு வருவன் என நம்பி, அவன் வருகையை ஒவ்வொரு நாளும் ஆர்வத்தோடு எதிர்நோக்கியிருந்தாள். ஆனால் நாள் பல ஆகியும் அவன் வந்திலனாகையால் அவள் காதல் நோய் அளவிறந்து பெருகிற்று. காதலித்த அவன் கை விட்டு விடுவானோ என ஐயுறவும் தொடங்கி விட்டாள். அவ்வையம் எழவே, அங்ஙனமாகிவிடின் தன் நிலை என்னாவது என எண்ணி இடருற்றாள். அவள் மன நிலையே மாறிவிட்டது. பித்தம் தலைக்கேறிவிட்டது. தன் நிலையை மறந்தாள். பெண்மைப் பண்புகளை இழந்தாள். தன் காதல் வாழ்வைப் பெற்றோர் அறியார்; அவர் அதை அறியாவாறு மறைத்து வைத்தல் வேண்டும் என்பதை யெல்லாம் அறவே மறந்தாள். வீட்டை விட்டு வெளியே செல்லாவாறு இற்செறிக்கப் பட்டவள் என்ற உணர்வும் அவள் உள்ளத்தை விட்டு அகன்றது. வீட்டை விட்டு வெளியேறினாள். பூஞ்சோலைகளிலும், பொதுவிடங் களிலும், அலையத் தலைப்பட்டாள். காதல் என்பது என்ன என்பதை அறியாத கன்னிப் பருவத்தில், தோழியரோடு கூடி ஆடும் ஆட்டங்களுக்கு இடை யிடையே மகிழ்ச்சி மிகுதியால் நகை தோன்றினும், பல் தெரியச் சிரிப்பது பெண்களுக்குப் பண்பாகாது என்ற உணர்வால், முள்போலும் கூரிய தன் பற்கள் புறத்தே புலனாகா வண்ணம் வாய் மூடிக் கிடக்க, அகத்தில் எழும் நகைக் குறிப்பு கண் வழியாகவும் முகம் வழியாகவும் மட்டுமே புலப்படச் சிரித்துப் பழகியவள், வழங்கும் சொற்கள் அண்மையில் உள்ளவர்க்கும் கேளாவாறு மெல்லப் பேசும் பண்புடையவள், இரு வரிசைப் பற்களும் விளக்கமாகத் தோன்றுமாறு, வாய் திறந்து வெடிபடச்

சிரிக்கவும், கேட்பவர் காது செவிடுபட உரத்த குரல் எடுத்துப் பேசவும் தலைப்பட்டாள். அவ்வாறு சிரித்துக் கொண்டே யிருப்பவள், திடுமெனச் சிரிப்பதை விடுத்து, கருநீலமலர் இரண்டு இணையாக மலர்ந்தாற் போலும் கவினுடைய கண்ணின் இமைகள் இரண்டினும் நீர் நிறையுமாறு அழத் தொடங்கி விடுவள்.

அவள் நிலையை அவ்வூரார் கண்ணுற்றனர். பெண்டிர்க்குரிய பண்புகளால் நிறைந்தவள் அப்பெண் என்பதை அறிந்த அவர்கள், அத்தகையாளையும் தன் பெண்மையை மறக்கப் பண்ணும் கொடுமை காதலுக்கு இருப்பதை உணர்ந்தனர். “காதலன் காதலியரின் இரு உள்ளங்களும் ஒன்றுபடத் தோன்றும் காதல் வாழ்வில், அவர்கள் அக்காதல் இன்பத்தை வேட்கை தீர நுகர்வதற்கு முன்பே, அவருள் ஒருவரை அரியராகும்படி பிரியச் செய்து காதல் இன்பத்தை நிலையற்றதாக்கி விடும் இந் நிலைமையை ஆராய்ந்து பார்த்தால், யாழை மீட்டு இசையை எழுப்ப, அதிலிருந்து எழுந்த பண்ணின் இனிமையை, அவ்விசையை இருந்து கேட்போரின் காதுகள் நுகரத் தொடங்கியவுடனே, யாழின் நரம்பு அறுந்து போகும் நிலைமையைக் காட்டிலும் நனிமிகக் கொடிது!” எனக் காதலின் இயல்பை வெறுத்துப் பழித்தனர். “அந்தோ தழைத்து வளர்ந்து கறுத்து நீண்ட கூந்தலையுடைய இப்பெண்ணின், காண்பவர் நெஞ்சை வருத்தும் இப்பண்பு கெட்ட நிலை நம் உள்ளத்தையும் வருத்தத்திற்கு உள்ளாக்கி விடுகிறது. என்றாலும் இவளை இமைப் பொழுது காணாதிருப்பதும் நம்மால் இயல வில்லை. நம் நெஞ்சு வருந்தினும் வருந்துக. அணுகி இவளைக் காண்போம். அணுகியவுடனே அகன்று

விடாமல், இவள் சிதைந்து பிறழ்ந்து செய்யும் செயல்களை இறுதிவரை இருந்து காண்போம்!" எனத் தம் உள்ளத்தை உறுதியாக்கிக் கொண்டு அப் பெண்ணைச் சூழ்ந்து கொண்டனர்.

கண்கள் நீர் சொரியக் கலங்கி நிலங்கவிழ்ந்திருந்த அப்பெண், ஒரு பெரிய கூட்டம் தன்னைச் சூழ்ந்து நின்று தன்னையே உற்று நோக்குவதை உணர்ந்தாள். தலை நிமிர்ந்து அவர்களை நோக்கினாள். உடனே அழுவதை விடுத்தாள். அவர்களை அணுகி, "ஊர்ப் பொதுமக்களே! உங்கள் உங்கள் வேலைகளைப் பார்த்துப் போகாது என்ன காரியம் செய்கின்றீர்கள்?'' என்று அவர் குறித்து இரங்கினாள். அவர்கள் தன்னைப் பார்க்கும் பார்வை இரக்கம் கொண்டு பார்ப்பதாகத் தோன்றுவதற்குப் பதிலாக எள்ளி நகைப்பது போல் தோன்றிற்று போலும்! உடனே, "நீங்கள் என் நிலை கண்டு எள்ளி நகைக் கின்றீர்களோ? நகையுங்கள். ஆனால் நான் படும் இக் காதல் நோயை எனக்கு அளித்தவனுக்குரிய, அணைந்தக்கால் இன்பமும், அணையாக்கால் துன்பமும் அளித்து மாயம் செய்யவல்ல. மார்பைத் தழுவி இன்புறும் அந்நிலை எனக்கு வாய்த்து விடுமாயின், பிறகு என்னைக் கண்டு எள்ளி நகையாடுவது உமக்கு இல்லாகிவிடும்!" என்று கூறி அடங்கினாள்.

சிறிது நாழிகை கழிந்ததும், மீண்டும் அவர்களை நோக்கித், "தோழி! நீ படும் துயர்தான் யாதோ?" என்று என்னைக் கேட்கின்றீர்களோ? காதல் நோய் அளித்து என்னை இவ்வாறு வருந்த விட்டவன் இவன் என்றும், எனக்குற்ற நோய் இது என்றும் தெளிவாக உணர்ந்து உரைக்கும் அறிவுத் திறம் என் அகத்தில் இருக்குமாயின்,

நெய்தல் மலர் நிகர்க்கும் என் கண்கள், இவ்வாறு அழுது அழுது ஒளி இழந்து போகுமோ? அத்திறம்தான் என்னை விட்டு எப்போதோ சென்று விட்டதே!" என்று கூறி ஓய்ந்தாள்.

வாயடைத்துக் கிடந்த அந்நிலை சிறிது பொழுதே. மீண்டும், "நான் ஆட இழைத்த மணல் வீட்டில், 'காதல் கைகூடுமோ கூடாதோ? கூடுமேல், இக்கூடலின் இருதலையும் கூடுக! கூடாதேல், இக்கூடல் கூடாதாகுக!' என்று எண்ணியவாறே கூடல் இழைந்திருக்குங்கால், இளம்பிறை போல் கூடாத கூடல் என் கண்களுக்குப் பிறைத்திங்களாகவே காட்சி அளித்தது. உடனே, 'இப்பிறை என் வருத்தத்தை மேலும் வளர்த்து விடுமே என்ற அச்சத்தால், என் மேலாடையால் அதை மூடி மறைத்துக் கொண்டேன். சிறிது நாழிகை கழிந்தது. 'இப்பிறை, மாண்பு மிக்க கொன்றை மலர் அணிவோனும், நீல மணிபோலும் கண்டம் உடையோனுமாகிய சிவபெருமானுக்கு உரியதாயிற்றே! அவன் இதைக் காணாமல் கலங்கு வானே!' என்ற எண்ணம் எழுந்தது. உடனே, 'நம் துயர்தீரப் பிறர் துயர் உறல் கூடாது என்ற தெளிந்த உள்ளம் உடையோம் யாம். ஆகவே, வெளியே விட்டால், இது நம்மை வருத்தும் என்பதை எண்ணிப் பாராமல், நெஞ்சே! அவன் அணியுமாறு இதை வெளியே விடுத்து, வள்ளல் தன்மை உடையை ஆகுக!' என்று கூறி, என் நெஞ்சை வற்புறுத்தி, அதை விடுத்தேன்.

"பின்னர் இரவு வரவே, காதலர் நினைவு வந்தது. எங்கும் பேரிருள் சூழ்ந்து கொண்டது. ஊர்க்காவலர் தவிர்த்து ஏனையோர் உறங்கி விட்டனர். அவர் நினைவால் விழித்திருந்த எனக்கும் சிறிதே உறக்கம்

வந்துவிட்டது. அவ்வளவே. ஊர்க் காவலரையும் ஏமாற்றி விட்டு, என் கனவின் வழியாகக் காதலன் வந்துவிட்டான். உடனே, காவலரால் பிடிக்க மாட்டாத அவனை, நான் பற்றிக் கொண்டேன். அவன் வடிவழகைக் காணக் கண்களை மெல்லத் திறந்தேன். என்ன வியப்பு! பற்றியிருந்த பிடிக்குள்ளேயே அவன் எவ்வாறோ மறைந்து விட்டான். மறைந்து போன அவன், என்னை நினைத்து மீண்டும் வருவானோ? அவன் வாராமையால் வருந்தும் நான், அவன் வந்தால் வரவேற்காது வெறுத்து ஊடி இருப்பது என்னால் இயலுமோ?" என ஊராரை நோக்கி உசாவினாள்.

சிறிது பொழுது எங்கும் அமைதி. பொதுமக்களையே பார்த்துப் பிதற்றிக் கொண்டிருந்தவள், திடுமென எழுந்து, வானத்தில் விளங்கும் ஞாயிற்றை நோக்கினாள். "கதிர்களுள் ஒன்றையேனும் பிறர்க்குத் தந்து உதவாது அவ்வளவையும் ஒருவனாகவே பெற்றுக் காயும் ஞாயிறே! நீ மேலைத் திசை மலையிடையே சென்று மறைவா யாயின், உன்னை ஒன்று வேண்டிக் கொள்கிறேன். என் காதலன் இந்தப் பகுதியில் எங்கும் இலன். நீ செல்லும் உலகில் யாண்டேனும் இருந்தால் அவனைத் தேடித் தருவதே நினைவாய்த் தேடிப் பிடித்து என் கையில் கொண்டு வந்து தர வேண்டுகிறேன். அவ்வாறு தந்தால், என் உள்ளமாகிய அகலில், காதல் நோயாகிய நெய் வார்த்து, உயிராகிய திரியைக் கொளுத்தி எடுத்த தீ அவியும். அதைச் செய்து அருள வேண்டுகிறேன்!" என வேண்டிக் கொண்டாள்.

ஞாயிற்றினிடத்திலிருந்து எவ்வித விடையும் வந்திலது. அதனால் காதலனைத் தேடித் தருவது தன்னால்

இயலாது என ஞாயிறு கருதுகிறான்; அதனாலேயே அவன் வாய் மூடிக் கிடக்கிறான் எனக் கருதினாள் போலும். உடனே ஞாயிற்றை மீண்டும் நோக்கினாள். "குற்றமற்ற ஞாயிறே! மலையிடைப் புகுந்து மறைந்துவிடக் கருதி விட்டாயாயின், உன்னை ஒன்று வேண்டிக் கொள்கிறேன். நீ மறைந்துவிட்டால் ஈண்டு இருள் சூழ்ந்து கொள்ளும். காதலனைத் தேடிப் பிடிக்க இயலாது போகிவிடும். ஆகவே, என் மார்பிலும் தோளிலும் தொய்யில் எழுதி மகிழ்விப்பதை விடுத்துத் துயர் செய்யும் அவனைத் தேடிப் பிடிக்கத் துணை செய்யும்படி, உன் கதிர்களிற் சில என் கை விளக்காகத் துணை புரியுமாறு தந்து செல்வாயாக. நீ மீண்டும் காலையில் கடலிடையே தோன்றும் போது உன்பால் ஒப்படைத்து விடுகிறேன்!" என்று கூறிக் கேட்டாள்.

ஞாயிறு ஏதும் பதில் தந்திலது. அதனால், காதல் நோய் அளித்தவனை மறந்து கைவிடுவதை விடுத்துத் தேடி அலைவது பயனில செயலாம் என ஞாயிறு கருதுகிறது போலும்; ஆகவேதான் அது தனக்கு ஏதும் விடையளித்திலது என்று கருதினாள் போலும். அதனால், "ஞாயிறே! காதலன் விரும்பி என்னைக் கெடுத்தான் என்பது உண்மை. என்றாலும் அவ்வாறு கெடுத்தவனைத் தேடி அடைவதல்லது என்னால் வேறு என்ன செய்ய முடியும்? ஆகவே, அவனைத் தேடி அடையத் துணைபுரிவாயாக!" என மீண்டும் வேண்டிக் கொண்டாள்.

ஞாயிறு அதற்கும் பதில் அளித்திலது. அது மட்டுமன்று; அவள் கூறியவற்றை நின்று கேட்கும் விருப்பமும் அற்று, அது தன் தொழில் மேற்கொண்டு மறையத் தொடங்கி விட்டது. அடிவானில் சென்று

சேர்ந்து விட்டது. மாந்தளிர் நிறம் போன்ற மாலை வெய்யில் மன்றத்தில் ஓங்கி வளர்ந்திருக்கும் பனை மரத்தின் உச்சியில் மட்டுமே ஒளி காட்டிற்று. அதைக் கண்டாள் அப் பெண். ஞாயிறு, காதலனைத் தேடித் தரவோ, தேடிப் பெறத் துணை புரியவோ செய்யாது போயினும், அவனை அடையத் துடிக்கும் தன் செயல் தவறுடையதன்று; அஃது உலகத்தோடு ஒட்டிய செயலே என்பதையாவது உணர்தல் வேண்டும் என விரும்பினாள். உடனே ஞாயிற்றின் மாலை வெய்யிலை விளித்தாள். "காதலர் காதலித்த மகளிரை மறந்து, அம் மகளிர் காதல் நோயால் வருந்தி மெல்லிய தம் தோள்கள் வாடி வனப்பிழக்கும்படி துயர் செய்யினும், அம்மகளிர், அவர் அழகில் கருத்திழந்து வருந்துவதல்லது, அவர் செயல்களின் நன்மை தீமைகளை ஆராய்வதை நான் பார்த்ததில்லை. உலகம் தோன்றிய அந்நாள் தொட்டு இவ்வுலகிற்கு ஒளிகாட்டும் நீ, அந்நாளிலிருந்து இந்நாள் வரை அவ்வாறு நிகழக் கண்டிலை யாயினும், கேட்டாவது அறிவையோ?" எனக் கேட்டாள். ஆனால், ஞாயிறு அதையும் மனத்திற் கொள்ளாதே மறைந்து விட்டது.

ஞாயிறு மறையவே, அவள் அதை விடுத்துத் தன்னைச் சூழ்ந்து நின்றாரை அணுகினாள். "பெரியோர்களே! காதலன் அளித்த காமநோய் நெருப்பாக நின்று சுடுகிறது. என்றாலும் அதைப் புறம் தோன்றாவாறு மறைத்துக் கொள்வேன். அதுமட்டுமன்று, இவ்வாறு நான் வருந்தவும், என் வருத்தத்தைப் போக்காது, வந்து வேடிக்கை பார்க்கும் இவ்வுலகை அழித்துவிடக் கருதுவதும் செய்யேன். கருதியிருந்தால் அதற்கு என் கண்ணீர் ஒன்றே போதும்; காதல் நோயால் வெப்பம்

மிகுந்து வெளிப்படும் என் கண்ணீரைத் தெளிப்பே னானால், இவ்வுலகம் வெந்து அழிந்து போகும். ஆனால், அத்தகைய கொடிய உள்ளம் எனக்கு இல்லாமையால், அந்நீரை என் கண்ணிமைக் குள்ளேயே அடக்கி மறைத்து விடுவேன்.

"பெரியோர்களே! இவ்வாறு நான் கொண்ட காதலும், அவன் வந்து அன்பு செய்யாமையால் வந்துற்ற காதல் நோவுமாகிய இவ்விரு துன்பங்கள், இருபுறமும் நின்று என் உயிரை வருத்துகின்றன. அவற்றைப் புறம் தோன்றாவாறு காத்துக் காத்து என் உயிரும் மெலிந்து விட்டது. அது தன்னால் தாங்கும்வரை அவற்றைப் பொறுத்து விட்டது. இனியும் அவற்றைத் தாங்குவது அதனால் இயலாது. இந்நிலை மேலும் நீண்டால், என் உயிர் அழிந்து விடும். ஆகவே, என் காதல் நோயைக் களைந்துஎன்) உயிரைக் காக்க விரைந்து வாருங்கள்!" எனக் கூறி வேண்டிக் கொண்டாள்.

இந் நிகழ்ச்சி ஒரு நாள் அன்று, இருநாள் அன்று, பல நாள். இரவு பகலாக இவ்வாறே பிதற்றித் திரிந்தாள். வருந்தி அழுதாள். இரவும் பகலும் காதல் இன்பம் பெற மாட்டாது கொன்னே கழிகின்றனவே. என எண்ணிப் பெருமூச்செறிந்தாள்.

ஒருநாள் இரவு அவன் திடுமென வந்து சேர்ந்தான். அவனை ஆரத் தழுவி அகம் மகிழ்ந்தாள். அவள் மன மயக்கம் அறவே மறைந்தது. பண்டேபோல், பெண்மை யெலாம் சேரப்பெற்ற பெண்டிர் திலகமாய்க் காட்சி அளித்தாள். நீர் என்றோ மண் என்றோ பிரித்துக் கூற மாட்டாது கலங்கிய நீர், தேற்றாங் கொட்டை இடப் பெற்றதும், தெளிந்து விடுவதுபோல், மனத்தெளிவு பெற்ற

*அம்மங்கை நல்லாளின் மாண்பு கண்டு பாராட்டினர் அவ்வூரார்.*

"புரிவுண்ட புணர்ச்சியுள் புல்ஆரா மாத்திரை,
அருகுவித்து ஒருவரை அகற்றலின், தெரிவார்கண்
செயநின்ற பண்ணினுள் செவிசுவை கொள்ளாது
நயம் நின்ற பொருள்கெடப் புரியறு நரம்பினும்,
பயன் இன்று மன்றம்ம காமம்; இவள் மன்னும்
ஒள்நுதல் ஆயத்தார் ஓராங்குத் திளைப்பினும்
முள்நுனை தோன்றாமை முறுவல் கொண்டடக்கித், தன்
கண்ணினும் முகத்தினும் நகுபவள் பெண்இன்றி
யாவரும் தன்குரல் கேட்ப நிரைவெண்பல்
மீஉயர் தோன்ற நகாஅ நக்கு ஆங்கே
பூஉயிர்த்தன்ன புகழ்சால் எழில் உண்கண்
ஆஇதழ் மல்க அழும்.

ஓஒ! அழிதகப் பாராதே, அல்லல் குறுகினம்;
காண்பாம் கனங்குழை பண்பு;"
என்று எல்லீரும் என்செய்தீர்? என்னை நகுதிரோ?
நல்ல நகாஅலிர் மற்கொலோ, யான் உற்ற
அல்லல் உறீஇயான் மாய மலர்மார்பு
புல்லிப் புணரப் பெறின்,
'எல்லா! நீ உற்றது எவனோ? மற்று' என்றீரேல், என்சிதை
செய்தான் இவன் என உற்றது இது என
எய்த உரைக்கும் உரன்அகத்து உண்டாயின்,
பைதலவாகிப் பசக்குவ மன்னோ, என்
நெய்தல் மலர்அன்ன கண்?

**நெய்தல்—14**

கோடுவாய் கூடாப் பிறையைப், பிறிது ஒன்று
நாடுவேன் கண்டனென் சிற்றிலுள்; கண்டு ஆங்கே
ஆடையால் மூஉய் அகப்படுப்பேன், சூடிய
காணான் திரிதருங் கொல்லோ, மணிமிடற்று
மாண்மலர்க் கொன்றை யவன்!

தெள்ளியேம் என்றுரைத்துத் தேராது ஒருநிலையே
வள்ளியை ஆகென நெஞ்சை வலியுறீஇ,
உள்ளி வருகுவர் கொல்லோ? உளைந்துயான்
எள்ளி இருக்குவேன் மற்கொலோ? நள்ளிருள்
மாந்தர் கடிகொண்ட கங்குல் கனவினால்
தோன்றினனாகத் தொடுத்தேன்மன்; யான் தன்னைப்
பைஎனக் காண்கு விழிப்ப யான்பற்றிய
கையுளே மாய்ந்தான் கரந்து.

கதிர்பகா ஞாயிறே! கல்சேர்தி யாயின்
அவரை நினைத்து நிறுத்து என்கை நீட்டித்
தருகுவை யாயின், தவிரும் என் நெஞ்சத்து
உயிர்திரியா மாட்டிய தீ.

மையில் சுடரே! மலைசேர்தி நீயாயின்
பௌவநீர்த் தோன்றிப் பகல் செய்யும் மாத்திரை
கைவிளக்காகக் கதிர்சில தாராய், என்
தொய்யில் சிதைத்தானைத் தேர்கு.
சிதைத்தானைச் செய்வது எவன்கொலோ எம்மை
நயந்து நலம் சிதைத்தான்.

மன்றப் பனைமேல் மலை மாந்தளிரே! நீ
தொன்று இவ்வுலகத்துக் கேட்டும் அறிதியோ?

மென்தோள் ஞெகிழ்த்தான் தகையல்லால் யான் காணேன்
நன்று தீதென்று பிற.

நோய் எரியாகச் சுடினும் சுழற்றி என்
ஆயிதழ் உள்ளே கரப்பன் கரந்தாங்கே
நோயுறு வெந்நீர் தெளிப்பின், தலைக்கொண்டு
வேவது அளித்து இவ்வுலகு.

மெலியப் பொறுத்தேன் களைந்தீமின் சான்றீர்!
நலிதரும் காமமும் கௌவையும் என்றுஇவ்
வலிதின் உயிர்காவாத் தூங்கியாங்கு என்னை
நலியும் விழுமம் இரண்டு.

எனப்பாடி;

இனைந்து நொந்து அழுதனள்; நினைந்து
நீடுஉயிர்த்தனள்;
எல்லையும் இரவும் கழிந்தன என்று எண்ணி, எல்லிரா
நல்கிய கேள்வன் இவன் மன்ற; மெல்ல
மணியுள் பரந்த நீர்போலத் துணிவாம்
கலம்சிதை இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போல் தெளிந்து நலம் பெற்றாள்
நல்லெழில் மார்பனைச் சார்ந்து.

*வரைவிடைப் பிரிந்து நீட்டித்துழித் தலைவி பிரிவாற்ற இல்லாது நாணுவரையிறந்து கலங்கி மொழிந்து அறிவழித்துழி, அவன் வந்து சாரத் தெளிந்தமை கண்டோர் கூறியது.*

1. புல் — புணர்ச்சி; ஆரா — நிறையாத; மாத்திரை — கால அளவு. 2. அருகுவித்து — அரியராகும்படி செய்து. 6. திளைப்பினும் — மகிழ்ந்தாலும், 7. முள்நுனை — முள்போன்ற முனையையுடைய

பல். 8. பெண் — பெண் தன்மை. 10. மீஉயர் — மிகவும் வெளியே. 11. உயிர்த்தன்ன — மலர்ந்தது போன்ற. 13. அழிதகவு — கேடு. 16. நகாலிர் — சிரிக்க மாட்டீர். 19. சிதை — கேடு. 22. பைதலவாகி — நோயுடையவாகி. 24. பிறிது — வருவாரோ? வாராரோ என்றதை. 26. சூடிய — சூடுவதற்கு. 27. மிடறு — கழுத்து. 30. வள்ளியை ஆகு — கொடுத்து வள்ளலாகு. 31. உளைந்து — வருந்தி. 33. கடி கொண்ட — காவல் மேற்கொண்ட 34. தொடுத்தேன் — வளைத்துப் பிடித்துக் கொண்டேன். 39. தவிரும் — நீங்கும். 44. தேர்கு — தேடிப் பிடிக்க; 47. மாந்தளிரே — மாந்தளிர் நிறம் உள்ள மாலை வெய்யிலே! 52. கரப்பன் — மறைப்பேன். 55. களைந்தீமின் — நீக்குங்கள். 57. காவா — காவடித் தண்டு, தூங்கியாங்கு — தொங்கியதுபோல். 60. இனைந்து — வருந்தி 64. இல்லகத்துக்காழ் — தேற்றாங் கொட்டைக்காய்.

## 26

# இன் நகை எய்தினள்

பாண்டி நாட்டுப் பைங்கிளி அவள். அவள் காதலன் ஓர் இன்றியமையாக் கடமையை மேற்கொண்டு, ஆச்சா மரங்கள் வளர்ந்த அரிய நாட்டைக் கடந்து வெளிநாடு சென்றிருந்தான். அவள் அவன்பால் ஓருயிரும் ஈருடலும் போன்ற உயர்ந்த காதல் கொண்டிருந்தமையால், அவன் பிரிவை அவளால் தாங்கிக் கொள்வது அரிதாயிற்று. மேலும், பிரிந்து சென்றவன், வருவதாகக் குறித்துச் சென்ற காலத்தில் வாராமல் காலம் கடத்தினமையால், அவள் மனத்துயர் மலையென வளர்ந்தது. இறுதியில் அவள் மனநிலையே கெட்டுவிட்டது. மருள் கொண்டவள் போல் ஆகிவிட்டாள். அவள் அகத்துயர் புறத்தேயும் புலனாகத் தொடங்கிவிட்டது. இரவில் பரந்த வானில் பேரொளி வீசி இருளை அகற்றி வந்த முழு மதிபோல் காட்சி அளித்த அவள் அழகிய முகம், இப்போது பகற் காலத்தில் ஒளி இழந்து தோன்றும் மதிபோல் ஒளி இழந்து விட்டது. நெற்றிக்கு அழகும் சிறப்பும் தர இட்டு வந்த திலகத்தை

இப்போது இட மறந்து விட்டாள். நீல மணி வைத்திழைத்த பொன் தகடோ, மாந்தளிரோ எனப் பாராட்டதக்க நிறத்தைப் பெற்றிருந்த அவள் மேனி, பசலையால் மூடப் பெற்றுக், கோங்க மலரின் மகரந்தம் படிந்த மாந்துளிரோ என எண்ணும்படியாகி விட்டது. இவ்வாறு தன் பண்டை அழகையெல்லாம் இழந்துவிட்ட அப்பெண்ணினல்லாள், அம் மட்டோடும் அமையாது, காதல் வெறியூட்டும் பொருள்களைக் காணும் போதெல்லாம் நெஞ்சகம் வெறி கொள்ளவும் எக்காலமும் காதல் நினைவாகவே இருக்க வும் தலைப்பட்டாள்; மக்களைப் பார்க்க நாணி மண்ணையே பார்க்கத் தலைப்பட்டாள்; இந்நிலையால் தன் நாண் அழிந்து விடுமோ என எண்ணி அஞ்சத் தொடங்கினாள். அச்சம் உடனே அழுகையாக மாறிவிடும். சிறிது நாழிகைக்கெல்லாம் வாய்விட்டுப் புலம்பவும் தொடங்கி விடுவாள். இவள் நிலையை ஊரார் கண்டனர். அவள் நிலை குறித்து இரங்கினர். அவளைச் சூழ்ந்து கொண்டு, "இவள் படும் பாட்டைப் பார்த்தீர் களா?" எனப் பக்கத்தில் உள்ளாரைக் கேட்டும் உள்ளம் நொந்தனர். அவ்வாறு கேட்டவாறே அவளை வந்து சூழ்ந்தும் கொண்டனர்.

தன்னை வந்து சூழ்ந்து கொண்டவரை அவள் பார்த்தாள்; அவர்கள் தன் நிலை குறித்துத் தமக்குள்ளே பேசிக் கொள்வதையும் கேட்டாள். உடனே, " 'இவ ளொருத்தி என்ன காரியம் செய்து விட்டாள் பார்த்தீர் களா?' என்று கேட்டு நிற்கும் பெரியோர்களே! நான் ஒருவகையில் சிறந்ததொரு செயலையே செய்துள்ளேன். வேட்டுவர் காட்டிற்குச் சென்று, முன்னே யாழை மீட்டி இனிய இசையை எழுப்ப, இவ்வின்னிசை கேட்ட

அசுணும், அவ்வின்பத்தில் மயங்கி இருப்புழி, உடனே பறை போன்ற இன்னா இசைகளை எழுப்ப, அவ்விசை கேட்கப் பொறாது அது உயிர் இழக்க, அதைக் கைப்பற்றி வருவதுபோல், ஒருவன் முன்னே காதல் இன்பம் அளித்துப் பின்னர் அறவே கைவிட்டுச் சென்று விட்டான். அக்களவுக் காதலால் என் தோளை மெலிவித் தானையே விரும்பி, அவனிடம் சென்று, அங்கேயே நின்று விட்டது என நெஞ்சு. என்னைச் சூழ்ந்து நின்று என் நிலை குறித்து இரங்கும் நீங்கள், இவ்வாறு வீணே இரங்குவதை விடுத்து, நவகண்டம் என்று சொல்லப்படும் நாடுகளுள் எந்நாட்டில் இருப்பினும் அவனைத் தேடிவந்து தந்தால், நானும் உங்களைப் போலவே நிறையெனும் நற்குணத்தைக் குறைவறப் பெற்றவளாவேன்!" என்று கூறினாள்.

அதற்கு அவர்கள் ஏதும் விடை தந்திலர் ஆனால் அவளை விட்டுப் போவதோ, அவள் நிலை குறித்துப் பேசுவதைக் கைவிடுவதோ செய்திலர். அதனால் அவள் அவர்களை மீண்டும் நோக்கி, "என்றேனும் ஒரு நாள், இவள், இவள் காதலனைப் பெற்று மகிழ்வாள். அந் நிலையை நாமும் காணுதல் வேண்டும்!" என்ற கருத்தின ராய் என்னைப் பின்தொடர்ந்து வருகின்றீர்கள். அதே நிலையில், 'இவள் பெரிதும் வருந்தி விட்டாள்!' என்றும், 'இவளை இவ்வாறு வருந்த விட்ட அவன், சென்ற இடத்தில் ஏதும் துன்புறாமல் உள்ளானோ?' என்றும் உசாவுகின்றீர்கள். பிறகு, 'அந்தோ! இவள் அறிவு மயங்கி விட்டதே!' என்று மருளுகின்றீர்கள். இவ்வாறு என் நிலை குறித்து நீங்கள் சிறிதும் கலங்காதீர்கள். கலங்கப் பிறந்தவள் நான்!" என்று கூறி, அவர்களுக்கு ஆறுதல் உரைத்தாள்.

அவர்களுக்கு ஆறுதல் உரைத்தவள் உள்ளத்தில் ஓர் அச்சம் புகுந்து கொண்டது. 'இவளை வருந்தவிட்டவன் போன இடத்தில் கேடின்றி உள்ளானோ?' என்று அவர்கள் கேட்டது, பிரிந்து துயர் செய்த கொடுமையால் காதலனுக்குக் கேடு வந்துறுமோ என்ற அச்சத்தை உண்டாக்கி விட்டது. உடனே ஞாயிற்றைப் பார்த்தாள். "உலகக் கேடுகளை விழித்து உண்மையை நிலை நாட்டும் ஞாயிறே! உலகியல் அறியாத அறிவிலிகள்பால் நீ கடுஞ்சினம் உடையாய் என்று பிறர் கூறக் கேட்டுள்ளேன். அதனால் உன்னை வணங்கி வழிபட்டு ஒருவரம் கேட்டுக் கொள்ள வந்துள்ளேன். என் நெஞ்சம் கெட்டு அழியும்படி கைவிட்ட காதலனைச் சினக்கும் போது, என்னை மட்டும் விட்டு விடாதே! அவனை இல்லாமல் நான் உயிர் வாழ்தல் இயலாது. ஆதலின், அவனோடு என்னையும் சேர்ந்தே சினப்பாயாக!" என வேண்டிக் கொண்டாள்.

அவள் அவ்வாறு வேண்டிக் கொண்டிருக்கும் போதே, ஞாயிறு மறையத் தொடங்கி விட்டது. மாந்துளிர் நிறம் காட்டும் மாலை வெய்யில் காட்சி அளித்தது. அந்நிலையில் மகளிர் சிலர் தங்களை மாலை ஒப்பனை செய்துகொண்டு உலாவரத் தலைப்பட்டனர். அக்காட்சியைக் காணவே அவளுக்கு அவன் நினைவு வந்து விட்டது. உடனே, "மாலை வரக் கண்ட இவ்வூர் மகளிர், தங்களைப் போன்ற ஒருத்தி காதல் நோயால் கலங்குகிறாள் என்பதைக் கருத்தில் கொள்ளாமல், தம்மை அணிசெய்து கொண்டு, தம்மைத் தாமே புகழ்ந்து செல்கின்றனர். என்னே இவர்தம் செருக்கு! ஆச்சா மரங்கள் அடர்ந்த காட்டைக் கடந்து போயிருக்கும் என் காதலன் வந்து

சேர்ந்தால் யான் இவர்களைவிட அணி செய்து கொண்டு அகம் மகிழ்வேன்.

"என் காதலன் இவர்கள் கணவன்மாரினும் கைதேர்ந்தவன்; நெய்தல் மலரைப் பறித்து அதன் புற இதழை அகற்றி அணி செய்வதிலும் வல்லவன்; நீண்ட மெல்லிய என் தோள்கள் மீது கரும்பு முதலாம் ஓவியங்களைத் தீட்டுவதிலும் வல்லவன்; என் கொங்கைகள் மீது தொய்யில் எழுதுவதினும் வல்லவன்; காதல் கைத்திறமையில் கரும்பு வில்லேந்திய காமனுக்கு நிகராவான்; என் தோளை அடிமை கொண்ட அவன் அறிவுடைமையால், அக் காமன் கல்லாத கலைகள் பலவற்றைக் கரை கண்டவனுமாவான். அத்தகையான் வந்தால் நான் இம்மகளிரைக் காட்டிலும் பெருமகிழ்ச்சி கொள்ளேனோ?" எனக் கூறி அமைதி கண்டாள்.

அவள் அவ்வாறு கூறிக் கொண்டிருக்கும் போதே, மாலைப் பொழுது வந்து விட்டது. கழியில் நெய்தல் மலரைக் கண்டாள். அது கூம்பத் தொடங்கி விட்டது. அது, காதலன் ஒருவனையே நினைவதல்லது, பிற உயர்ந்த பொருள்கள் எதனையும் நினையாது கூம்பிய அவள் உள்ளத்தை அவளுக்குக் காட்டிற்று. ஆயர் ஊதும் குழலோசை வந்து அவள் காதில் புகுந்தது. அவ்வோசை அவளுக்கு அழுகுரல் போல் கேட்டது. அது காதலனை நினைந்து நினைந்து அழும் அவள் நெஞ்சின் அழு குரலையே நினைவூட்டிவிட்டது. மாடங்களில் மகளிர் மாலைக்குரிய செவ்வழிப் பண்ணை இசைத்தனர். அது, தளர்ந்து பொருட்செறிவு இழந்து புறப்படும் தன் சொற்களையே நினைவூட்டிற்று. ஞாயிறு மறைந்து விட்டது. அது, அவளைவிட்டு மறைந்து போன அவள்

உடல் அழகை நினைவூட்டிற்று. இவ்வாறு எல்லாவற்றையும் இழந்து வாழ்வதினும் இறந்துவிடுவதே நலம் என நினைத்தாள். அந்நிலையில் மாலை இருள் மெல்லத் தலை காட்டிற்று. அது அவள் உள்ளம் அறிந்து அவள் உயிரைக் கவர்ந்து செல்ல வந்த காலன் போல் காட்சி அளித்தது. உடனே அவள் உள்ளத்தில் தோன்றிய அவ்வுணர்ச்சிகள் உரையாக வெளிப்பட்டன. வாய் விட்டுப் புலம்பினாள்.

தன் துயரத்திற்குத் தன் காதலன் ஒரு காரணம் என்றாலும், மாலை மறைய வரும் இரவே அதற்குச் சிறந்த காரணமாம். ஆதலின் அவ்விரவை வரவிட்டு ஓடி ஒளிந்து கொண்ட ஞாயிற்றின்பால் அவள் சினம் சென்றது. உடனே அதை நினைந்து, "நான் இருளோடு போராடி இன்னல் உறும்படி என்னை இங்கே தனியே விடுத்து மறைந்துவிட்ட ஞாயிறே! நீ அருளற்ற அறக்கொடியோன் ஆகுவை!" எனக் கூறிப் பழித்தாள்.

இவ்வாறு இனி ஏதும் செய்வது இயலாது என்ற செயலற்ற நிலை வந்தவுடனே, அவளுக்கு ஒரு துணிவு உண்டாயிற்று. இறந்து போவதற்கு மேலும் ஒரு இன்னாமை நமக்கு உண்டாகுமோ? உண்டாகாது என்ற எண்ணம் வரவே, "கடல் சூழ்ந்த இப்பேருலகில் தன் காதலன் இல்லை என்றால் அதனால் வரும் கேடு என்ன? நான் இறந்து போவேன்! இறந்தால்தான் என்ன? இவ்வுலகப் பற்றோ பாசமோ இல்லாத அவ் வீட்டுலகத்தில் விரும்பும் இன்பங்கள் அனைத்தையும் வேண்டியவாறே பெற்று நுகர்ந்து பேரின்பம் பெறுவர் என்பது உண்மையாயின், நானும் அவ்வின்பத்தை

அடைவேன். அதனால் நான் எங்கே இருப்பினும் எனக்குச் சிறப்பே!" எனப் பிதற்றினாள்.

அவ்வாறு கூறியவள் தன்னை ஒருமுறை நோக்கிக் கொண்டாள். காதல் நோயால் தன் மேனி பெற்றிருக்கும் கேட்டைக் கண்டாள். உடனே, "நீரில் மலரும் நீல மலர்கள் உன் கருவிழிகள்!" என்று கூறிப் பாராட்டும்படி, அன்று அவர்க்குக் காதல் துன்பம் அளித்த என் கண்கள், ஊரார் தூற்றும் இவ் வலர் உரைகளைக் கேட்டு அழுது அழுது, பீர்க்கம் பூப்போல் பசந்து ஒளி இழந்து விட்டனவே!" என வாய்விட்டுப் புலம்பினாள்.

அவ்வாறு புலம்புவாளுக்கு ஓர் அறிவு விளக்கம் உண்டாயிற்று போலும். தன் நாட்டில் வாழும் குடிகளைக் குறை நேராவாறு காப்பாற்றுவது அரசன் கடமை. அவன் அக் கடமையில் நின்றிருந்தால், நான் இவ்வாறு கலங்க வேண்டி நேர்ந்திராதே என நினைத்தாள். உடனே அவள் சினமெல்லாம் நாடாளும் அரசன்போல் சென்றது. "தன் உயிர்போல மன்னுயிரைக் காக்க வேண்டிய இந்நாட்டுக் காவலன் என் உயிர்போன்ற என் காதலனைத் தேடிக் கொண்டு வந்து என்னுடன் கொடுத்து என் உயிரைக் காவாதது ஏனோ?" எனக் கேட்டுக் காவலனைக் கடிந்து கொண்டாள்.

அந்நிலையில், மலைபல கடந்து, மாற்றார் நாட்டிடை சென்று வாழ்ந்திருந்த அவள் காதலன் வந்து சேர்ந்தான். காதல் நோயில் கரை காணாது வீழ்ந்து, மனம் மருள் கொண்டு திரிந்தவள், பாண்டியன் நல்லாட்சிக்கீழ் வந்த நாட்டு மக்கள் போல் மனம் தெளிந்து, இழந்த தன் நலங்களை யெல்லாம் பெற்றுப் பெருமகிழ்ச்சி கொண்டு

*பெருவாழ்வு பெற்றாள். அவள் பெற்ற அப்பெரு வாழ்வை, அவ்வூர்வாழ் பெரியோர் போற்றி வாழ்த்துங் கூறினார்கள்.*

“அகலாங்கண் இருள்நீங்கி அணிநிலாத் திகழ்ந்தபின்
பகலாங்கண் பைஎன்ற மதியம்போல் நகல் இன்று
நன்னுதல் நீத்த திலகத்தள் மின்னி
மணிபொரு பசும்பொன் கொல்? மாஈன்ற தளிரின்மேல்
கணிகாரம் கொட்டும்கொல்? என்றாங்கு அணிசெல
மேனி மறைத்த பசலையள், ஆனாது
நெஞ்சம் வெறியா நினையா நிலநோக்கா
அஞ்சா; அழாஅ, அரற்றா இஃதுஒத்தி
என்செய்தாள் கொல்! என்பீர்! கேட்டீமின், பொன்செய்தேன்

மறையில் தன்யாழ்கேட்ட மானை அருளாது
அறைகொன்று மற்றுஅதன் ஆருயிர் எஞ்சப்
பறைஅறைந்தாங்கு ஒருவன் நீத்தான்; அவனை
அறைநவ நாட்டில்நீர் கொண்டுதரின், யானும்
நிறைஉடையேன் ஆகுவேன் மன்ற; மறையின் என்
மென்தோள் நெகிழ்த்தானை மேஎய் அவனாங்கண்
சென்று சேண்பட்டது என்நெஞ்சு.

ஒன்றி முயங்கும் என்று என்பின் வருதிர்; மற்று ஆங்கே
உயங்கினாள் என்று உசாதிர்; மற்று அந்தோ!
மயங்கினாள் என்று மருள்திர்; கலங்கன்மின்;

இன்உயிர் அன்னார்க்கு எனைத்தொன்றும்
என் உயிர் காட்டாதோ மற்று?

பழிதபு ஞாயிறே! பாடறி யாதார்கண்
கழியக் கதழ்வை எனக்கேட்டு நின்னை
வழிபட்டு இரக்குவேன் வந்தனென்; நெஞ்சம்

அழியத் துறந்தானைச் சீறுங்கால் என்னை
ஒழிய விடாதீமோ என்று.

அழிதக மாஅந்தளிர்கொண்ட போழ்தினான்; இவ்வூரார்
தாஅம் தளிர்சூடித் தம்நலம் பாடுப;
வாஅம் தளிர்க்கும் இடைச்சென்றார் மீள்தரின்
யாஅம் தளிர்க்குவேம் மன்.

நெய்தல் நெறிக்கவும் வல்லன்; நெடுமென் தோள்
பெய்கரும்பு ஈர்க்கவும் வல்லன்; இளமுலைமேல்
தொய்யில் எழுதவும் வல்லன்; தன்கையில்
சிலைவல்லான் போலும் செறிவினான்; நல்ல
பலவல்லன் தோளாள் பவன்.

நினையும்என் உள்ளம்போல் நெடுங்கழி மலர்கூம்ப
இனையும்என் நெஞ்சம்போல் இனம்காப்பார்குழல்தோன்றச்,
சாயஎன் கிளவிபோல் செவ்வழியாழ்இசைநிற்பப்
போயஎன் ஒளியேபோல் ஒருநிலையே பகல்மாயக்
காலன்போல் வந்த கலக்கத்தோடு என்தலை
மாலையும் வந்தன்று இனி,

இருளொடு யான் ஈங்குழப்ப, என்இன்றிப் பட்டாய்,
அருள் இலை; வாழி சுடர்!
ஈண்டு நீர் ஞாலத்துள் எங்கேள்வர் இல்லாயின்
மாண்ட மனம்பெற்றார் மாசில் துறக்கத்து
வேண்டிய வேண்டியாங்கு எய்துதல் வாய் எனின்,
யாண்டும் உடையேன் இசை.

ஊர்அலர் தூற்றும் இவ்வுய்யா விழுமத்துப்
பீர்அலர் போலப் பெரிய பசந்தன.

நீர்அலர் நீலம்என அவர்க்கு அஞ்ஞான்று
பேரஞர் செய்த என்கண்.

தன்உயிர் போலத் தழீஇ உலகத்து
மன்னுயிர் காக்கும் இம்மன்னனும் என்கொலோ
இன்உயிர் அன்னானைக் காட்டி, எனைத்தொன்றும்
என் உயிர் காவாதது?

எனவாங்கு,
மன்னிய நோயொடு மருள்கொண்ட மனத்தவன்,
பன்மலை இறந்தவன் பணிந்துவந்து அடிசேரத்,
தென்னவன் தெளித்த தேஎம்போல
இன்நகை எய்தினள், இழந்த தன் நலனே.

*வரைவிடைப் பிரிந்து நீட்டித்துழித் தலைவி பிரிவாற்ற கில்லாது, நாணுவரை இறந்து, கலங்கி மொழிந்து அறிவழிந்துழி, அவன் வந்து சாரத் தெளிந்தமை கண்டார் கூறியது.*

1. அகலாங்கண் – பரந்த வானம்; அணி – அழகிய. 2. பை என்ற – ஒளி இழந்த. நகல் – ஒளி 5. கணிகாரம் – கோங்கமலர்; கொட்கும் – சொரியும். 8. அரற்றா – வாய் விட்டுப் புலம்பி. 10. மான் – அசுணம் என்ற ஒரு விலங்கு; பறவை என்றும் கூறுவர். இனிய இசை கேட்பின் மகிழும்; இன்னா இசை கேட்பின் உயிர் இழக்கும்; 13. அறை – சொல்லப் படுகின்ற. 14. மறையின் – அளவில். 22. பாடு – உலகியல். 23. கதழ்வை–சினப்பாய். 27. மாந்தளிர் கொண்ட போழ்து – மாலை 29. வாம் – ஆச்சா மரம். 31. நெறிக்கவும் – பறிக்கவும். 32. ஈர்க்க – எழுத. 34. சிலைவல்லான் – காமன். 37. இனம் காப்பார் – மாடு மேய்க்கும் ஆயர். 38. சாய – தளர்ந்த 46. வாய் – உண்மை. 48. உய்யா – பிழைக்க முடியாத; விழுமம் – துன்பம். 52. அஞர் – துன்பம். 59. தென்னவன் – பாண்டியன்.

# 27

## அல்லல் களைவார் இலேன்

இளைஞன் ஒருவன், நற்குடிப் பிறந்த நங்கை யொருத்தியைக் காதலித்தான். அவன் பண்பும் பெருமையும் உணர்ந்து அவளும் அவனைக் காதலித்தாள். இருவரும் கடற்கரை மணலிலும், கானற் சோலைகளிலும், பிறர் காணாவாறு கண்டு களித்து வந்தனர். ஒருநாள் அவன் கலம் ஏறிக் கடல் கடந்த நாட்டிற்குச் சென்று விட்டான். சென்றவன், அவளிடம் ஏதும் கூறவில்லை. அதனால் அவள் கலக்கம் பெரிதாயிற்று. கன்னியர்க்குக் காதலும் கற்புமே உயிர். தன் காதலைப் பெற்று அதன் வழியே தன் கற்பையும் கொள்ளை கொண்ட அவன் தன்னை மறந்து கைவிட்டால் தன் வாழ்வு பாழாகிவிடுமே என்ற எண்ணம் எழவே அவள் அறிவு பிறழ்ந்து விட்டது. வீட்டை விட்டு வெளிவராதவள், ஊரெங்கும் சுற்றித் திரியத் தலைப்பட்டாள்; வாய்க்கு வந்தனவெல்லாம் வழங்கத் தலைப்பட்டாள்.

ஒருநாள் ஊர்ப் பொதுவிடத்தில் இருந்த அவளைச் சிலர் சூழ்ந்து கொண்டனர். சூழ்ந்து கொண்டவர்கள் வாய் மூடிக் கிடக்காமல், “இந்நன்னுதலாளைக் காணுங்கள். எதையெதையோ எண்ணி நெடுமூச்செறியும் இவள் என்ன துயர் உற்றாளோ? பார்ப்பாரையெல்லாம் பார்த்து நகைக்கிறாள்; தன் நாணையும் மறந்து நடுத் தெருவில் திரிகிறாள்; சொரியும் கண்ணீரைக் கையால் துடைத்துக் கொண்டு தலை கவிழ்ந்து நிலத்தையே வெறித்துப் பார்க்கிறாள். இவ்வாறு துயர் உறும் இவள் தன்னை அணுகித் தன்னைக் குறித்துக் கேட்பவர்க்குத் தாறுமாறான விடைகளை அளிக்கிறாள். கனவு காண்பவள்போல் சிறிது நேரம் தெளிவாகக் காணு கிறாள்; மறுகணமே மருள் கொண்டவள் போல் விழிக் கிறாள். இவள் செல்லும் இடங்கள் தோறும் தொடர்ந்து சென்று இவள் கூறுவனவற்றைக் கேட்போம், வாருங்கள்!” எனத் தமக்குள்ளே உரையாடிக் கொண்டேயிருந்தனர்.

அவருள் ஒருத்தி, அப்பெண்ணை அணுகி, “ஏடி! நீ என்ன துயர் உற்றாய்? இத்துயரை உனக்குச் செய்தவர் யாவர்? உனக்கு நேர்ந்த கேட்டினை நாங்கள் கேட்கக் கூறு!” எனக் கேட்டு விட்டாள். அவ்வளவே. அப்பெண் அவர்களைப் பார்த்து “என் நலன் குறித்துக் கவலை காட்டும் பெண்டிர்காள்! தெளிவாகக் கூறுகிறேன், கேளுங்கள். ஓர் இளைஞன் என் அருகில் வந்து, ‘தழைத்து நீண்ட கூந்தலை உடையவளே! நான் படும் இக்காதல் துன்பத்தை உனக்கு வந்து உரைக்கும் வரை என் உயிர் என்னை விட்டுப் போகாமல் இருந்ததே, அதுவே போதும்!’ என்பன போலும் காதல் மொழிகளைப் பேசிக் காதல் வெறியூட்டி விட்டான். அதுமுதல் என் நெஞ்சம்

*காதற் பித்தங் கொண்டு பிதற்றத் தொடங்கி விட்டது!" என்று கூறினாள்.*

*அவ்வாறு அவர்களை நோக்கி உரையாடிக் கொண்டிருந்தவள், "நன்று! நீங்கள் நில்லுங்கள். என் காதலன் இருக்கும் இடத்தை எப்படியாவது தேடிப் பிடித்தல் வேண்டும்!" என்று கூறிவிட்டு, அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே வானத்து மதியை நோக்கினாள். "மதியிடையே வாழ்ந்து, பரந்த கடல் சூழ்ந்த இந்நிலவுலகனைத்தையும் இருந்த இடத்தில் இருந்தவாறே பார்க்கும் பேறு பெற்ற முயலே! என் காதலன், இந்நிலவுலகில் வாழும் இடத்தை அருள் கூர்ந்து எனக்குக் காட்டுவாயாக! காட்ட மாட்டாயேல், வேட்டை நாயை உன்மீது ஏவி விடுவேன். வேட்டுவர்க்கு நீ இருக்கும் இடத்தைக் காட்டிக் கொடுத்து விடுவேன். அறிவு திரிந்து அலையும் என் அல்லலைத் தீர்க்காவிட்டால், உன்னை யும், உனக்கு இடம் அளித்திருக்கும் மதியையும் விழுங்கி விடுமாறு பாம்பைத் துரத்தி விடுவேன்!" எனப் பிதற்றினாள்.*

*அவள் அவ்வாறு பிதற்றித் தன் மனத் துயரை வெளிப்படுத்திக் கொண்டிருக்கும்போது, திங்கள் வெண் மேகத்தின் இடையே சென்று மறைந்தது. அது கண்ட அவள், தன் வேண்டுகோளை ஏற்றுக் கொண்ட முயல், மதியையும் துணைக்கு அழைத்துக் கொண்டு, தன் காதலனைத் தேடிச் செல்வதாகக் கருதினாள். உடனே, மீண்டும் அம்முயலை நோக்கி, "நன்று முயலே! என்பால் நீ சிறிதே அருள் உள்ளம் கொண்டாய் போலும்!" எனக் கூறி ஆறுதல் கொண்டாள்.*

காதலனைத் தேடிப் பிடிக்கும் பொறுப்பை முயலிடத்தில் ஒப்படைத்தவள், அதன் ஆற்றலில், அதன் நல்லெண்ணத்தில் நம்பிக்கைக் கொண்டிலள் போலும்! அதனால் அவனைத் தேடிப் பிடிக்கத் தானும் முனைந்தாள். முனைந்தவள், “முயலே நீ ஒருபால் தேடு; நானும் எனக்குத் தெரிந்த இடங்களில் தேடிப் பார்க்கிறேன். நீண்ட இலைகளைக் கொண்ட தாழைகள் வளர்ந்து, மணல் பரந்த கானற் சோலைக்கு ஓடிப் பார்க்கிறேன். ஆங்கே ஓடி ஒளிந்திருந்து பார்க்கிறேன். அக் கடற்கரையில் உள்ள வேறு பிற பூஞ்சோலையிலும் புகுந்து தேடுகிறேன். என் காதலைக் கொள்ளை கொண்ட கள்வன் அங்கெல்லாம் ஒளிந்திருப்பினும் இருப்பன்!” என்று கூறினாள்.

அவ்வாறு கூறினவள், உடனே ஒன்றை நினைத்துக் கொண்டாள். தேடும் பொறுப்பை ஒப்படைத்த முயலுக்கு, அவனைக் காணக்கூடிய இடங்கள் சிலவற்றைக் குறிப்பிடல் நலம் என எண்ணிக், “காதலன், அழகிய அடும்ப மலர்களைப் பறித்து வந்து அழகிய மாலை புனைந்த இடம் அதோ பார்! குணக் கேடனாகிய அவன் பசலை பண்ணுதற்கு உதவும் தண்டாங் கோரையையும், அப்பாவைக்குச் சூட்டுதற்குரிய மலர்களையும் எங்களுக்குக் காட்டி ஏமாற்றி விட்டு, எங்கள் ஆடற் பாவையை எடுத்துக் கொண்டு ஓடிய இடம் இதோ பார்! அறவுணர்வு அற்ற அவன், ‘தையால்! உன்னைக் கைவிடேன்; கலங்காதே!’ என்று கூறி மனக் கலக்கத்தை மாற்றி என்னை முயங்கி மகிழ்ந்த இடம் இதுதான்! இங்கெல்லாம் அவன் ஒளிந்திருக்கவும் கூடும்!” என்று கூறித் துணை புரிந்தாள்.

வானத்து முயலுக்கு அவள் அவ்வாறு விளக்கம் கூறிக் கொண்டிருக்கும்போது காற்று வந்து அவள்மீது மெல்ல வீசிற்று. அவ்வளவே. அவள் கருத்து காற்றின்மீது சென்றது. காதலனைத் தேடிப் பிடிக்கக் காற்றை ஏவல் கொள்ளக் கருதினாள். உடனே அதைப் பார்த்துக், "காற்றுக் கடவுளே! துன்பமாகிய தேர் ஊர்ந்து வந்து, அளிக்கத்தக்க என் உள்ளத்தில், கெடாத காதல் நோயைச் செய்து கை விட்டுப் போன அவ்வன்பற்றவனைத் தேடிப் பிடிக்கப் பல கோடிக் கதிர்களைப் பெற்ற ஞாயிற்றின் ஒளி, வானத்திலும், ஞாலத்திலும் பரந்து சென்றுளது. அது சென்றுள்ள இடத்திற்கெல்லாம் நீயும் சென்று, என் நலத்தை நுகர்ந்து என்னைக் கைவிட்டுச் சென்று ஒளிந்து திரிவானைத் தேடிப் பிடித்து வந்து எனக்குக் காட்டு. அவ்வாறு காட்டாது போனால், இந்நிலவுலகம் எங்கும் என் கண்ணீரைத் தெளித்து, அதிலிருந்து தோன்றும் அழலால் உன்னை அறவே சுட்டு விடுவேன்!" என அச்சம் ஊட்டும் ஆணையை அதன்மீது ஏவினாள்.

காற்றோடு பேசிக் கொண்டிருந்தவள் கண்முன் கடல் தென்பட்டது. உடனே அதைப் பார்த்துக் "கடலே! காதலன் உனக்கு அப்பால் உள்ள நாட்டில் வாழ்கிறான் என்று கூறுகிறார்கள். ஆங்குச் சென்று அவனைத் தேடுதல் வேண்டும். ஆகவே, ஆங்குச் செல்ல எனக்குச் சிறிதே வழிவிடு; ஒதுங்கி வழி விடாயானால், நீ வெறும் மணலாகி விடும்படி, உன் நீரை எல்லாம் என் புறங்காலினாலேயே இறைந்து விடுவேன்! நான் மேற்கொண்டிருப்பது, காதலனைத் தேடிப் பிடிக்கும் நல்ல தொண்டு ஆதலின், எனக்கு அறக்கடவுள் துணையாக உவந்து வெற்றியைத் தேடித் தருவன்! இதை அறிந்து என் ஆணைக்கு அடங்கி வழிவிடு!" என்றாள்.

அவ்வாறு கடுஞ்சொல் கூறிக் கொண்டிருக்கும் போதே அவள் சினம் ஆறிவிட்டது. அதனால், "கடலே! என்னைக் கைவிட்டவனைத் தேடிக் கொடுத்தால், என் உள்ளத் துயரை யெல்லாம் உணர்த்தி, உன்னைப் பாக்களால் பாடிப் பாராட்டுவேன்!" என இன்னுரை வழங்கினாள்.

பாடிப் பாராட்டுவேன் என்றவள் பாடவும் தொடங்கி விட்டாள். "காதல் காட்டிக் கட்டிப் பிடித்த அவர், மீண்டும் வந்து என்னைக் கூடும் காலம் இது என அறியேன்! அவன் இரவில் வருவான் என்று எண்ணும் என் நெஞ்சம். உடனே, 'பகலே! நீ இரவாகி விடு!' என்று கூறிப் பகலை வெறுப்பேன்; இரவும் வந்து விடும்; ஆனால் இரவிலும் அவன் வாரான்; உடனே அவ்விரவையும் வெறுக்கத் துணிவேன். அந்தோ! என் அல்லலைக் களைவார் ஒருவரும் இலரே! என் செய்வேன்?

"கடலே! அறநெறி அறியா என் காதலன், திடுமென என கண்ணுள்ளே தோன்றுவன்; இமைகளைத் திறந்து அவனைக் கைப்பற்ற விரைந்து விழிப்பேன்; உடனே அவன் என் நெஞ்சுள் ஓடி ஒளிந்து கொள்வான்; ஒளிந்து கொள்வதோடு நில்லாது, மாளாத் துயரமுந் தருவன்.

"கடலே! ஊரை வளைத்துக் கொண்டு ஓங்கி எரியும் பெரு நெருப்பில் நீர் ஊற்றியவுடனே, அந்நெருப்பின் சினம் தணியும். ஆனால், இரக்கம் அற்ற அரக்கனாகிய என் காதலன் தந்த காமத் தீ, தண்ணீருள் புகுந்தாலும் சுடுகின்றது! இதற்கு என் செய்வேன்!

"கடலே! காதல் நோய் பெற்று, அந்நோயின் கொடுமை அறியாதவர், "இவளோர் உள்ளுறுதி இல்லா தவள். அதனாலேயே இவ்வாறு காதற் பித்தேறினாள்!'

*என்று இகழ்ந்து கூறி, என்னை நகைக்கினும் நகைக்கட்டும். இவ்வாறு நான் காதல் நோய் பெற்று, உயிரிழந்து போகும் நிலைக்கு என்னைக் கொண்டு போய் விட்டவன் மார்பு, இத்தகைய கொடுமையுடையது என்பதை, அவன் என்னை முதன் முதலாகக் கண்டு காதல் கொண்ட அன்று அறிந்திருப்பேனாகில், நான் அவன் காதலை ஏற்று, அவன் மார்பைத் தழுவியிருக்க மாட்டேன்! அந்தோ! அதை அன்று அறிந்திலேன்! என் செய்வேன்!”*

*இவ்வாறு அவள் கடலோடு புலம்பிக் கொண்டிருக்கும் போது, அவளை வருத்தும் அக் காதல் நோய் அழியும்படி அழியாப் பெருங்காதல் உடைய அவள் காதலன் விரைந்து வந்து சேர்ந்தான். உடனே, அறவழி அறிந்து வாழும் நல்லோன் ஒருவன் குறித்துத் தீயோர் கூறிய பழிச்சொற்கள் எல்லாம், நல்லோர் கூடியிருக்கும் அவையில் நின்று ஆராயத் தொடங்கியதும் அழிந்து போவது போல், அவள் நெற்றியில் படிந்திருந்த பசலை பறந்து போய்விட்டது.*

“நன்னுதால் காண்டை! நினையா, நெடிது உயிரா,
என் உற்றாள்கொல்லோ இஃதொத்தி; பன்மாண்
நகுதரும்; தன் நாணுக் கைவிட்டு, இகுதரும்
கண்ணீர் துடையாக், கவிழ்ந்து நிலன் நோக்கி,
அன்ன இடும்பை பல செய்து, தன்னை
வினவுவார்க்கு ஏதில சொல்லிக் கனவுபோல்
தெருளும்; மருளும்; மயங்கி வருபவள்
கூறுப கேளாமோ சென்று.
‘எல்லா! நீ என் அணங்கு உற்றனை? யார் நின் இது
செய்தார்?

நின் உற்ற அல்லல் உரை' என என்னை
வினவுவீர்! தெற்றெனக் கேண்மின்; ஒருவன்
'குரல் கூந்தால்! என் உற்ற எவ்வம் நினக்கு யான்
உரைப்பனைத் தங்கிற்று என் இன்னுயிர்' என்று
மருவூட்டி மாறியதற்கொண்டு எனக்கு
மருவுழிப்பட்டது என் நெஞ்சு.
எங்கும் தெரிந்தது கொள்வேன் அவன் உள் வழி

பொங்கிரும் முந்நீர் அகம் எல்லாம் நோக்கினை,
திங்களுள் தோன்றி யிருந்த குன்முயால்!
எம்கேள் இதனகத்து உள்வழிக் காட்டீமோ,
காட்டீயாயாயின், கதநாய் கொளுவுவேன்;
வேட்டுவர் உள்வழிச் செப்புவேன்; ஆட்டி
மதியொடு பாம்பு மடுப்பேன்; மதி திரிந்த
என் அல்லல் தீராய் எனின்.

என்றாங்கே, உள்நின்ற எவ்வம் உரைப்ப மதியொடு
வெண்மழை ஓடிப் புகுதி, சிறிது என்னைக்
கண்ணோடினாய் போறி நீ.
நீடிலைத் தாழைத் துவர்மணல் கானலுள்
ஓடுவேன்; ஓடி ஒளிப்பேன்; பொழில்தொறும்
நாடுவேன்; கள்வன் கரந்திருக்கற்பாலன் கொல்?
ஆய்பூ அடும்பின் அலர்கொண்டு, உதுக்காண் எம்
கோதை புனைந்த வழி.

உதுக்காண், சாஅய் மலர்காட்டிச் சால்பிலான் யாம் ஆடும்
பாவை கொண்டு ஓடியுழி
உதுக்காண், அம்தொய்யில் பொறித்த வழி.

உதுக்காண், 'தையால்! தேன்' எனத் தேற்றி, அறன் இல்லான்
பையமுயங்கி உழி.

அளிய என் உள்ளத்து உயவுத்தேர் ஊர்ந்து
விளியா நோய்செய்து இறந்த அன்பிலவனைத்,
தெளிய விசும்பினும், ஞாலத்தகத்தும்
வளியே! எதிர்போம் பலகதிர் ஞாயிற்று
ஒளிஉன் வழியெல்லாம் சென்று, முனிபு எம்மை
உண்மை நலன் உண்டு ஒளித்தானைக் காட்டீமோ;
காட்டாயேல், மண்ணகம் எல்லாம் ஒருங்கு சுடுவேன் என்
கண்ணீர் அழலால் தெளித்து,

பேணான் துறந்தானை நாடும் இடம் விடாயாயின்,
பிறங்கிரும் முந்நீர்! வெறு மணலாகப்
புறங்காலின் போக இறைப்பேன்; முயலின்
அறம் புணையாகலும் உண்டு.

துறந்தானை நாடித் தருகிற்பாயாயின், நினக்கொன்று
பாடுவேன் என்நோய் உரைத்து

புல்லிய கேளிர் புணரும்பொழுது உணரேன்.
'எல்லி ஆடு எல்லை!' என்று ஆங்கே பகல் முனிவன்;
எல்லியகாலை இராமுனிவன்; யான் உற்ற
அல்லல் களைவார் இலேன்.

ஒஒ கடலே! தெற்றெனக் கண்ணுள்ளே தோன்ற இமை எடுத்துப்
பற்றுவேன் என்றுயான் விழிக்குங்கால், மற்றும் என்
நெஞ்சத்துள் ஒடி ஒளித்து, ஆங்கே துஞ்சாநோய்
செய்யும் அறன் இல்லவன்.

ஒஒ கடலே! ஊர்தலைக்கொண்டு கனலும் கடும்தீயுள்
நீர் பெய்தக் காலே சினம் தணியும்; மற்றிஃதோ,
ஈரம் இல்கேள்வன் உறீஇய காமத்தீ
நீருள் புகினும் சுடும்.

ஒஒ கடலே! 'எற்றமிலாட்டி, என் ஏமுற்றாள்?' என்று
இந்நோய்
உற்றறி யாதாரோ நகுக; நயந்து ஆங்கே
இற்றா அறியின், முயங்கலேன், மற்று என்னை
அற்றத்து இட்டு ஆற்றறுப்பான் மார்பு.
ஆங்கு
கடலொடு புலம்புவோள் கலங்கஞர் தீரக்,
கெடலரும் காதலர் துனைதரப், பிணி நீங்கி,
அறன் அறிந்து ஒழுகும் அங்கணாளனைத்
திறன் இலார் எடுத்த தீமொழி எல்லாம்
நல்லவையுட்படக் கெட்டாங்கு,
இல்லாகின்று அவள் ஆய்றுதல் பசப்பே."

*வரைவிடைப் பரிந்து நீட்டித்துழித், தலைவி பிரிவாற்ற கில்லாது நாணுவரை இறந்து கலங்கி மொழிந்து அறி வழிந்துழி, அவன் வந்து சாரத் தெளிந்தமை கண்டார் கூறியது.*

3. இருதரும் – சொரியும். 5. அன்ன – அதுபோன்ற. 7. தெருளும் – தெளிவாள். 9. அணங்குற்றனை – வருந்தினாய் 12. குரல் – அடர்ந்த. 13. உரைப்பனை – உரைக்கும்வரை. 4. மருவூட்டி – மயக்கி. 16. தெரிந்து – தேடி. 19. இதனகம் – உலகம். 20. கதநாய் – வேட்டை நாய்; கொளுவுவேன் – ஏவுவேன். 22. மடுப்பேன் – ஏவுவேன். 32. சாஅய் – தண்டாங் கோரைப்புல் 35. தேறு – தெளிவாயாக. 37. உயவு – வருத்தம்.

# 28

## மாயவன் மார்தல் திரு

காதலன் வருவான்; தன் களவுக் காதல் வெளிப்படுவதற்கு முன்பே வந்து மணந்து கொள்வான் என எண்ணிக் காதலன் வருகையை ஆர்வத்தோடு எதிர் நோக்கியிருந்தாள் ஓர் இளம் பெண். ஆனால் அவன் வந்திலன். வருவான் என எதிர்நோக்கி இருப்பது இனிப் பயனில்லை என எண்ணும்படியாகி விட்டது. அவன் தன்னை அறவே மறந்து விட்டான்; இனி என்றும் வாரான் என எண்ணி விட்டாள் அவள். அவ்வெண்ணம் அவளை ஆழ்துயரில் ஆழ்த்தி விட்டது. தன் எண்ணம்போல் ஆகிவிட்டால் தன் காதல் என்னாவது? தன் கற்பு என்னாவது? தன் குடிப்புகழ் என்னாவது?- என்ற கலக்கம் இடம் பெற்று விட்டது அவள் அகத்தில். அவ்வளவே; அவள் அறிவு பிறழ்ந்து விட்டது; பித்தம் கொண்டு விட்டாள்; பிறகு கூறுவானேன்! மடமையைக் கைவிட்டாள். மானத்தை இழந்தாள்; குடிப்பெருமையைக் குறிக்கொண்டாள்; வாயிலை விட்டு வெளி வராதவள்,

வீதி யெல்லாம் சுற்றி அலைந்தாள்; வாயில் வந்தன எல்லாம் பிதற்றினாள். வம்பர்கள் சூழ்ந்து வர, ஊர் மன்றம், ஊர்ப்புறம் எங்கும் திரியத் தலைப்பட்டாள்.

ஒரு நாள் ஊர்ப் பெண்டிர் சிலர் அவளைச் சுற்றி நின்று அவள் செய்யும் சிறு செயல்களைப் பார்த்துப் பரிகசித்துக் கொண்டிருந்தனர். உடனே அவள் அவர் களைப் பார்த்து, “மக்களால் விரைந்து விரும்பப்படும் காமம், காணும் நள்ளிரவில் பயன் அளித்து, நனவில் பயன் அளிக்க மறுத்து மாறுபடும் கனவுபோல் நிலை யற்றது. இதோ பாருங்கள், அக் காமத்திற்கு அடிமைப் பட்ட ஒருத்தி, அது கைகூடப் பெறாமையால் நெட்டுயிர்ப்புக் கொள்வாள்; தன் காதல், அதை அளித்த காதலன் என இவை குறித்துக் காண்பாரையெல்லாம் வினவுவாள்; மனம் மருளுவாள்; கயல் மீன் போன்ற கண்களில் நீர் முத்து முத்தாய் வெளிப்பட, அவ்வாறு வெளிப்படும் நீர் ஒழுக, மழையிடையே தோன்றும் முழுமதி போல், முகம் தோன்ற நின்று ஓயாது அழுவாள். நீண்டு வளர்ந்த கூந்தலையுடைய இவள், தன் பெண்மைப் பண்புகள் அவ்வளவையும் கைப்பற்றிக் கொண்டு கைவிட்டுச் சென்றவனை நினைந்து வருந்துவாள்; சிறிது நாழிகை சென்றதும், அவனை மறந்தவள் போல், விலா வலிக்க வாய் திறந்து நகைப்பாள். மருள் கொண்டு திரிவாள். ‘தன் உயிரினும் சிறந்த நாணையும், பிற பெண்மை நலங்களையும் பொருட்படுத்தாமல், காமம் ஒன்றைக் கருத்தில் இருத்தி அலைகின்றாள்!’ என்று கூறி என்னைப் பழித்து நகைக்காதீர்கள். என் நிலை கண்டு இரங்காது எள்ளி நகைக்கும் மாக்களே! சுருக்கமாகக் கூறுகிறேன், கேளுங்கள். மகளிர் தோளை மணந்த காதலர்,

அம் மகளிர் வருந்துமாறு அவரைப் பிரிந்து போவதும், நீண்ட காட்டு வழியைக் கடந்து போன அக் காதலர், விரைந்து வந்து அம் மகளிர்க்கு இன்பம் ஊட்டலும், ஆகிய இவ்விரண்டும், இரவும் பகலும் போல முறையே மாறி மாறிக், காதலின்பால் மாறாக் காதல் கொள்வா ரிடத்தில் வந்து தோன்றும். இன்பமும் துன்பமுமாய் மாறி மாறி வரும் இத் தடுமாற்ற நிலை, உலகில் வாழ்வார் அனைவர் மாட்டும் வரும். இதை நீங்கள் அறிந்திருந்தால் என்னைக் கண்டு எள்ளி நகைக்க மாட்டீர்கள்!" என்று கூறிச் சிறிதே வாய் ஓய்ந்தாள்.

வாய் ஓய்ந்து வானத்தை நிமிர்ந்து நோக்கியவள், ஆங்கே வெண்மேகக் கூட்டத்தைக் கண்டாள். உடனே மேகத்திடையே மழை நீர் இன்மையால் அது மழை பெய்திராது; மழை பெறாமையால் காதலன் சென்றிருக்கும் காட்டு வழி வெம்மை மிகுந்து அவனை வருத்துமே என நினைத்தாள். உடனே அம் மேகத்தைப் பார்த்து, "மேகமே! தொடக்கத்தில் எம்பால் பணிவாக இருந்து விட்டு, இப்போது என்னைக் கைவிட்டுக் கைவளைகள் கழன்று போகும்படி கொடுமை செய்தான் எனினும், அவன் என் காதலன் என்பதை மறவாதே! அவன் சென்ற காட்டு வழியில் அழல் மிகுந்து வருத்தாதபடி பரந்து ஓடிச் சென்று, இடித்து முழங்கிப் பெய்வதை விடுத்து, வீணே வறண்டு என்ன கொடுமை செய்து விட்டாய்! வறட்சியால் கடல் நீர் வற்றிப் போக, உன் மேகங்கள் குடிக்க நீர் நிலை காணாது கலங்கு கின்றனவையோ? இதோ என் கண்ணீர் கடல் எனத் தேங்கியுளது! உன் மேகங்களெல்லாம் கூடி வந்து வேண்டுமளவு குடித்து விரைந்தோடிச் சென்று, அவன்

செல்லும் காட்டு வழியில் பெருமழை பெய்வீராக!” என வேண்டிக் கொண்டாள்.

வெண் மேகத்தை நோக்கி அவ்வாறு வேண்டிக் கொண்டவள், கடும் பகல் ஞாயிற்றின் வெம்மை தன்னைத் தாக்குவதை உணர்ந்தாள். உடனே தன்னைச் சூழ்ந்து வரும் ஊரராரைப் பார்த்து, “ஊர்ப் பெண்களே! என் கண்களின் உறக்கத்தைக் கவர்ந்து கொண்டு, என்னை மறந்து கை விட்ட காதலன், என் பெண்மைப் பண்புகள் எல்லாம் கெட்டு அழியும்படி எனக்களித்த காதல் நோய், குளிர் போக வேது கொள்வது போல், தோன்றுகிறது, இக்கடும்பகல் ஞாயிற்றின் வெம்மை. அது உமக்கு எவ்வாறு உளதோ? கூறுங்கள்.” எனக் கேட்டு நின்றாள்.

அவள் அவ்வாறு கேட்டு நிற்கும்போதே ஞாயிறு மெல்ல மறையத் தொடங்கியது. உடனே அஞ்ஞாயிறைப் பார்த்து, “ஞாயிறே! உன் கதிர்கள் எல்லாவற்றையும் பரப்பிக் காய்ந்துவிட்டு, இப்பகற் காலத்தோடே உன் கடமையை முடித்துக் கொண்டு சென்று விடாது, நின்று காயுமாறு உன்னை வேண்டிக் கொள்கிறேன். நீ சென்று விட்டால் தனிமை யுணர்ச்சி ஊட்டும் பொல்லாத மாலைக் காலம் வந்து என்னைக் கொல்லாமல் போகாது. அதனோடு நான் உயிரிழந்து போகாது நிற்றல் இயலாது!” என்று கூறி வேண்டிக் கொண்டாள்.

ஆனால் ஞாயிறு அவள் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டிலது. மலையிடையே புகுந்து மறையத் தொடங்கி விட்டது. அதைக் கண்ட அவள் மீண்டும் அதைப் பார்த்து, “ஞாயிறே! செல்லாது நிற்றல் உன்னால் இயலாது என்றால், இதையாவது செய். இன்று மறைந்து, நாளைக் காலையில் கடலிடையே தோன்றும் போது, என்

காதலனை அழைத்துக் கொண்டு வருக. நீ அழைத்துக் கொண்டு வருவதாயிருந்தால், மாலையோடு மறைந்து போகும் என் உயிரைப் போகாவாறு தடுத்து நிறுத்தி, முன்பனியும், மாலைப் பொழுதும் தரும் கொடுமைகளை ஒருவாறு தாங்கிக் காத்திருக்கின்றேன். அருள் கூர்ந்து இதையாவது செய்வாயாக. கை விட்டுப் போன கொடியன் அவன்; அவனைக் காண்பது கூடாது என நெஞ்சு வெறுக்கினும், அவன் இனியன் என்பதை அது ஏற்கும் வகை கூறி, அதை அமைதிப்படுத்தியிருப்பேன்!" என்று கூறினாள்.

இவ்வாறு ஞாயிறோடு தான் கூறிக் கொண்டிருக்கும் பொழுது, தன் நெஞ்சு தன் காதலன்பால் சென்று அலைவதைக் கண்டாள். உடனே, "என் கைவளைகள் கழன்று ஓடுமபடி என்னைக் கைவிட்டுக் கொடுமை செய்த கள்வன்பால் சென்று அன்று ஒளிந்து கொண்டு, இன்று, காதல் நோயுற்றுக் கலங்கும் என்னை நினைந்து, கடல் ஒலி அவிந்து அழகிழக்க, கானற் சோலைகள் தனித்துக் கிடந்து துயர் உற, பெரிய கழியில் மலர்ந்த நெய்தல் மலர்கள் இதழ் குவிந்து இரக்கம் காட்ட, வெண்ணிலா தன் தண்ணொளி பரப்பி ஒளி காட்டும் இம் மாலைப் போதில், சிறிதும் ஓய்வு கொள்ளாமல், வானுலகிலும், மண்ணுலகிலும், பிற உலகங்களிலும் புகுந்து புகுந்து அவனைத் தேடி அங்கெல்லாம் காணாது பெருந்துயர் உறும் என் பேதை நெஞ்சு, இந்நேரம், நான் விரும்பும் ஒருவனும், எனக்குக் காதல் நோயை அளித்தவனும், தன்னால் விரும்பப் படுவோனுமாய, அக்காதலனோடு துயில் கொள்ளும் கொல்லோ?" என்று கூறித் தன் நெஞ்சைத் தானே வெறுத்துக் கொண்டாள்.

தன் நெஞ்சோடு புலந்து கொண்டிருக்கும் போதே, மாலை மறைய, முழுமதி தோன்றிவிட்டது. உடனே அதை நோக்கி, “வெண்ணிலவு பொழியும் வெண் திங்களே! இவ்வூரார் எல்லாம் பார்த்துச் சிரிக்கும்படி, என் உயிர் என்னை விட்டுப் பிரிய நேர்ந்து விட்டது. என் அழகிய கை வளைகள் கழன்று போகும்படி, தன் அன்பை மறந்து, அருளையும் நினையாமல் என்னைக் கைவிட்டுப் போய் விட்ட என் காதலன் செய்த, உடலையும் உள்ளத்தையும் ஒருசேரக் கலக்கும் இக்காம நோய்க்கு, என்னைப் பார்த்து நகைக்கும் இவ்வூரார் மருந்தறிய மாட்டார்கள். அம் மருந்தறிந்து அளித்து நீக்க வல்லவன் நீ ஒருவனே! ஆகவே என்பால் அருள் கொண்டு, அம் மருந்திருக்கும் என் காதலன்பால் சென்று வருவாயாக!” என வேண்டிக் கொண்டாள்.

ஆனால், அவள் வேண்டுகோளை நின்று கேட்க விரும்பாதது போல், அவ் வெண்திங்கள் விரைந்து நகர்ந்து கொண்டேயிருந்தது. அதனால், அதை விடுத்தாள். தனக்கு அண்மையில் தன்னைச் சூழ்ந்து நிற்கும் ஊராரைப் பார்த்தாள். சேய்மைக்கண் உள்ள ஞாயிறும் திங்களும் தன் துயர் தீர்க்க மாட்டா; இவரே தீர்ப்பர் எனத் துணிந்தாள் போலும். உடனே, “என் காமநோயை நீக்குவதையே உம் கடமையாகக் கொண்டு நிற்கும் ஊர்ப் பெரியோர்களே! நீங்கள் எவ்வளவுதான், என் காமவெறி கண்டு என்னை எள்ளி நகைத்தாலும், என் காதலன் என்னைச் சிறிதும் இகழான். நான் நினைத்தால், என் நெஞ்சு நினைக்கும் விரைவிலும், அதிகமாக விரைந்து வந்து என் கண்ணுள்ளே புகுந்து காட்சி தருவான். அது ஒன்றைக் கொண்டே என் நெஞ்சு ஆறுதல் கொள்ள வேண்டும். ஆனால் அது ஆறுதல் கொள்வதில்லை.

ஆகவே குறை நெஞ்சிற்கு உளதே அல்லது, அவனுக்கு இல்லை. இதை நீங்கள் அறிதல் வேண்டும்!" என்று கூறினாள்.

அந்நிலையில் வானத்தைக் கருமேகம் வந்து மூடிக் கொள்வதைக் கண்டாள். உடனே அவள் கருத்து ஊராரை விட்டுக் கார் முகில் மேல் சென்றது. "கருத்துக் கனத்துத் திரண்டு வரும் கார்மேகமே! என் கையில் நிறைந்து கிடந்த என் கை வளைகளைக் கழலப் பண்ணிய கொடியேன் அளித்த காமநோயால் மூண்ட தீ, என் மயிர்க் கால் தோறும் நின்று எரிகிறது. ஆகவே, அவ்வெம்மை தணியும்படி, ஒரு சேரச் சென்று கடல் நீரை முகந்து வந்து என் மேல் ஒருங்கே பெய்யுமாறு உங்களை வேண்டிக் கொள்கிறேன்!" என்று கூறிப் புலம்பினாள்.

இவ்வாறு பலப்பல பிதற்றிப் புலம்பி வருந்தும் நெஞ் சோடு வாடி, 'என் கணவனை யாரேனும் கண்டீரோ?' என வழிவருவார்களை யெல்லாம் வினவித் திரியுங்கால், ஊரை ஒன்று கூட்டும் அவள் நோயைக் களைய அறக் கடவுளே திருவுளம் கொண்டாற் போல், அவள் காதலன் வந்து சேர்ந்தான். உறக்கத்தைக் கவர்ந்து கொண்டு, பின்னர் ஒரு போதும் நினைக்காமல் நீங்கி விட்டவன் வரக் கண்டதும், திருமால் மார்பில் பிரிவறச் சேர்ந்து நிற்கும் திருமகள் போல், அவள் அவன் மார்பை அணைத்துக் கொண்டாள். உடனே, ஞாயிறு வரக் கண்டதும், நில்லாது ஓடி மறையும் இருள்போல், அவளைப் பற்றி வருத்திய பித்தமும் அவளை விட்டு அகன்றது.

"துனையுநர் விழைதக்க சிறப்புப்போல், கண்டார்க்கு
நனவினுள் உதவாது நள்ளிருள் வேறாகும்

கனவின் நிலையின்றால் காமம்; ஒருத்தி
உயிர்க்கும்; உசாஅம்; உலம்வரும்; ஒவாள்;
கயல்புரை உண்கண் அரிப்ப அரிவாரப்
பெயல்சேர் மதிபோல வாள்முகம் தோன்றப்,
பலஒலி கூந்தலாள் பண்பெல்லாம் துய்த்துத்
துறந்தாள்போல் ஆலிநகூஉம்; மருளும்;
மறந்தானை உள்ளி அழூஉம்; அவனை

சிறந்ததன் நாணும் நலனும் நினையாது
காமம் முனைஇயாள் அலந்தாள் என்று எனைக்காண
நகான்மின்; கூறுவேன் மாக்காள்! மிகாஅது,
மகளிர், தோள்சேர்ந்த மாந்தர் துயர்கூர நீத்தலும்,
நீள்சுரம் போகியார் வல்லைவந்து அளித்தலும்
ஊழ்செய்து இரவும் பகலும் போல் வேறாகி
வீழ்வார்கண் தோன்றும் தடுமாற்றம், ஞாலத்துள்
வாழ்வார்கட்கு எல்லாம் வரும்.

தாழ்பு துறந்து தொடிநெகிழ்த்தான் போகிய கானம்
இறந்து எரிநையாமல் பாஅய் முழங்கி,
வறந்து என்னை செய்தியோ? வானம்! சிறந்த என்
கண்ணீர்க் கடலால் கனைதுளி வீசாயோ,
கொண்மூக் குழீஇ முகந்து.

நுமக்கு எவன்போலும்? ஊரீர்! எமக்கு, எம்
கண்பாயல்கொண்டு உள்ளாக் காதலவன் செய்த
பண்புதர வந்த என்தொடர்நோய் வேது
கொள்வதுபோலும் கடும்பகல்; ஞாயிறே!
எல்லாக் கதிரும் பரப்பிப் பகலொடு
செல்லாது நின்றீயல் வேண்டுவல்; நீ செல்லின்

புல்லென் மருள்மாலைப்போழ்து இன்றுவந்து என்னைக்
கொல்லாதுபோதல் அரிதால்; அதனோடு யான்
செல்லாது நிற்றல் இலேன்.

ஒல்லைஎம் காதலர்க்கொண்டு கடல்ஊர்ந்து காலைநாள்
போதரின், காண்குவேன் மன்னோ! பனியொடு
மாலைப்பகை தாங்கி யான்,
இனியன் என்று ஓம்படுப்பல் ஞாயிறு! இனி.

ஒள்வளை ஓடத்துறந்து துயர்செய்த
கள்வன்பாற்பட்டு அன்று ஒளித்து, என்னை உள்ளிப்
பெருங்கடல் புல்எனக், கானல் புலம்ப,
இருங்கழிநெய்தல் இதழ்பொதிந்து தோன்ற,
விரிந்துஇலங்கு வெண்ணிலா வீசும் பொழுதினான்,
யான்வேண்டு ஒருவன், என்அல்லல் உறீஇயான்,
தான் வேண்டுபவரொடு துஞ்சும்கொல்? துஞ்சாது
வானும் நிலனும் திசையும் துழாவும்–என்
ஆனாப் படர்மிக்க நெஞ்சு.

ஊரவர்க் கெல்லாம் பெருநகை யாகிஎன்
ஆருயிர் எஞ்சும்மன்; அங்குநீ சென்றீ!
நிலவுஉமிழ் வான்திங்காள்! ஆய்தொடி கொட்ப,
அளிபுறம்மாறி, அருளான் துறந்த அக்
காதலன் செய்த கலக்குறு நோய்க்கு, ஏதிலார்
எல்லாரும் தேற்றார், மருந்து.

வினைக்கொண்டு என்காமநோய் நீக்கிய ஊரீர்!
எனைத்தானும் எள்ளினும், எள்ளலன் கேள்வன்;
நினைப்பினும் கண்ணுள்ளே தோன்றும்; அனைத்தற்கே
ஏமராது ஏமராவாறு.

கனைஇருள் வானம்! கடல்முகந்து என்மேல்
உறையொடு நின்றீயல் வேண்டும் ஒருங்கே;
நிறைவளை கொட்பித்தான் செய்த துயரால்
இறைஇறை பொத்திற்றுத் தீ.
எனப்பாடி,

நோயுடை நெஞ்சத்து எறியா, இனைபு, ஏங்கி,
யாவிரும் எம்கேள்வ ற்காணீரோ? என்பவட்கு
ஆர்வுற்ற பூசற்கு அறம்போல எய்தந்தார்;
பாயல்கொண்டு உள்ளாதவரை வரக்கண்டு
மாயவன் மார்பில் திருப்போல்பவள் சேர,
ஞாயிற்று முன்னர் இருள்போல மாய்ந்தது என்
ஆயிழை உற்ற துயர்.

*வரைவிடைப் பிரிந்து நீட்டித்துழித், தலைவி பிரிவாற்றகில்லாது, நாணுவரை பிறந்து கலங்கி மொழிந்து அறிவழிந்துழி, அவன் வந்து சாரத் தெளிந்தமை கண்டார் கூறிற்று.*

1. துனையுநர் — விரைவார். 4. உயிர்க்கும் — பெருமூச்சு விடுவாள்; உலம் வரும் — மனம் மருளுவாள்; 5. அரிப்ப — நீர்துளிக்க. 7. ஒலி — தழைத்த; துய்த்து — நுகர்ந்து. 8. உள்ளி — நினைந்து, 9. ஆலி — ஆரவாரம் செய்து. 13. கூர் — மிக். 14. சுரம் — காட்டுவழி; வல்லை — விரைந்து. 15. ஊழ் — முறையாக. 16. வீழ்வார் — விரும்புவார்; ஞாலம் — உலகம். 18. தாழ்பு — பணிந்து. 19. நைதல் — எரித்தல்; பாஅய் — பரந்து. 22. கொண்மூ — மேகம். 23. வேது கொள்வது — நோய் நீங்க வெப்பம் ஊட்டுதல். (ஒத்தடம் கொடுத்தல்.) 28. நின்றீயல் — நிற்றல். 33. போதரின் — வந்தால். 36. ஒள் — ஒளி. 37. உள்ளி — நினைத்து. 42. துஞ்சாது — சோம்பி இராமல். 43. துழாவும் — தேடும். 44. ஆனா — குறையாத 46. எஞ்சும் — பிரியும். 47. கொட்ப — கழல. 52. எனைத்தானும் — சிறிதும். 36. உறை — மழை. 58. இறை — மயிர்க்கால்; பொத்திற்று — மூண்டது.

# 29

## யாமம்! நீ துஞ்சலை மன்

தம் காதலைப் பெற்ற தாயும் பிற உற்றாரும் உணர்ந்து கொள்வதற்கு முன்பாகவே வந்து வரைந்து கொள்ளுமாறு தன் காதலனை வேண்டிக் கொண்டாள் ஒரு பெண். அவனும் அதற்கு இசைந்திருந்தான். ஆனால், அவன் அவளிடமும் சொல்லிக் கொள்ளாமல் வெளிநாடு செல்ல நேர்ந்து விட்டது. அவன் போய் விட்டான். திருமணத்திற்குரிய ஏற்பாடுகளோடு அவன் வருவான் வருவான் என எதிர் நோக்கியிருந்தாள் அவள். நாள் பல ஆகியும் அவன் வந்திலன். அதனால், ஒருவேளை அவன் தன்னைக் கைவிட்டானோ என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் மெல்லத் தலை தூக்கிற்று. அவ்வளவே. மானமே உயிர் என மதிக்கும் அம்மங்கை நல்லாள் மருள்கொண்டு விட்டாள். வீட்டில் அடைபட்டிருப்பதை வெறுத்தாள். தன் மனம் போனபடியெல்லாம் திரியவும் பிதற்றவும் தொடங்கினாள்.

அவளை ஒரு நாள் ஊரார் சிலர் கண்டனர். உடனே தன் புகழ் ஓங்குமாறு உயர்ந்த செயல்களையே செய்து துணைபுரிந்த அமைச்சர்களையும், அவர்கள் தன் உயர்விற்கு உழைத்தவராயிற்றே என்று எண்ணாமல், கடுஞ்சொல் கூறிக் கொன்று அழிக்கும் அரசனைக் காட்டிலும், காமம் மிக மிகக் கொடிது! அதற்கு அன்பு என்பதே சிறிதும் கிடையாது. இதோ பாருங்கள், அன்னத் தூவி பரப்பி ஆக்கிய அழகிய படுக்கையில் ஆரத்தழுவி இன்பம் ஊட்டியவன் கைவிட்டு அகன்று விடவே, அணிகளை யெல்லாம் துறந்து, நாணையும், நிறையையும் காக்க வேண்டுமே என்று கருதாமல், தோள் தளர்ந்து, கண்கள் நீரால் நிறைந்து வழிய, வழியும் அந்நீர், கூரிய பற்கள் நிறைந்த வாய் வழியே ஒழுகிக், குவிந்த கொங்கைகள் மீது சொரியத் தேரோடும் தெருவில் நின்று, மனம் மருள்கின்றாள். அவள்பால் சென்று அவள் கூறுவதைக் கேட்போம், வாருங்கள்," என்று கூறி, உடன் இருப்பாரையும் அழைத்துக் கொண்டு சென்று, அவளை வளைத்துக் கொண்டனர்.

தன்னை வளைத்துக் கொண்டவர்களை அவள் உற்று நோக்கினாள். அவர் தன்னைப் பார்க்கும் பார்வை "ஒள்ளிய இழை அணிந்தவளே! பிரியேன் என்று கூறிப் பிரிந்து போனவனைப் பிரியான் என்று நம்பி, இப்பேதைப் பெண் இப்போது தன் நாணையும் மறந்து விட்டதைப் பாரேன்!" என்று தங்களுக்குள்ளே கூறிக் கொண்டு, தன்பால் அன்பு கொண்டவர்போல் வந்து தன் நலன் குறித்துக் கேட்டுக் கவலை கொள்வார் போல் தோன்றிற்று. தோன்றவே, "எல்லோரும் வாருங்கள், என் குறையைக் கூறுகிறேன்," எனக் கூறத் தொடங்கினாள்.

“என் உயிரினும் சிறந்த என் காதலன் என் ஆற்றல் எல்லாம் அழியும்படி என்னைக் கைவிட்டுச் சென்றமையால் பெருகி வந்து என்னிடமே குடி கொண்டுவிட்ட காம நோய், என்னைச் சுட்டுப் பொசுக்குவதில், உலகத்தில் வறட்சி நிலை பெறும்படி, பெய்யாது பொய்த்த மேகத்தை ஒக்கும். என்னை முழுக்க முழுக்க ஆழ்த்தி அமிழ்த்தி விடுவதில், நிறைந்து இந்நிலவுலகையே மாய்க்கும் ஊழிப் பெரு வெள்ளத்தை ஒக்கும்.

“நாணையும் நலனையும் இழக்காத உயர்ந்தோர் போல், ‘இவள் காதலனோடு அன்பு கொண்டு, பண்டு தன் நாணை இழந்ததோடு இன்று தன் நலனையும் இழந்தாள்!’ என்று கூறி நகைப்போரே! நான் அவற்றை இழந்திலேன்; என் நாணும், நலனும், உள்ளமும் அவனைக் கண்டு காதல் கொண்ட அன்றே அவன்பால் சென்று தங்கிவிட்டன. ஆகவே இன்று அவற்றைப் புதிதாக இழக்க வேண்டியதில்லை. காதலால் அழியும் என் உடம்பிற்கும், அவ்வுடம்பை விட்டு ஓடப் பார்க்கும் உயிர்க்கும் உறுதியாகும்படி, சிவந்த புள்ளிகளையும், தேர் உருள் போன்ற உருவினையும் உடைய நண்டோடு, அவனுடைய மாண்பு மிக்க பல குணங்களையும் கூறி நினைந்து எள்ளி நகையாடிய இடம் அதோ உள்ளது, காணுங்கள்.

“என்னைப் போல், கரை காணமாட்டாக் கொடுமை யுடையதான காமநோயில் அழுந்தி வருந்தாத என் காதலனின் பெருமையும் புகழும் கெடும்படி, அவள்பால் கொடுமையேற்றிக் குறை கூறுவோரே! என்னை வரையக் கருதி உள்ள அவன் என்னை விட்டுச் சேணெடுந்தூரம் சென்றுவிட்டான். அவனை, அலை வீசும் கடல் சூழ்ந்த இவ்வுலகமெல்லாம் தேடிப்

பார்க்கும்படி, நிரை கதிர் ஞாயிற்றினிடம் கூறியுள்ளேன். நானும், அவனைப் பற்றிய பேச்சு எழும் இடங்களுக் கெல்லாம் சென்று தேடுவேன். காதலை மறந்த கொடுமையால் சிறிதே புகழ் குறைந்து போன அவன் என் கண்ணில் அகப்படாமல் எங்கே சென்று ஒளிந்து கொள்வான்?”

இவ்வாறு ஊராரோடு உரையாடிக் கொண் டிருக்கும் போதே, மாலையும் இரவும் வரத் தொடங்கின. அதைப் பார்த்துவிட்ட அவள், “நான் மருண்ட மான்பிணைபோல் மயங்கும்படி கொடிய நோயைத் தரும் மாலையும் வந்து, அதற்குமேல் நெருப்பை வாரிக் கொட்டி னாற் போலும் கொடிய இரவும் வந்து சேருமாயின், நான் என்னைப் போல் வருந்தும் பிற மகளிரோடு சென்று, என் நோயை எடுத்துக் கூறுவேன்,” எனப் பிதற்றினாள்.

பிதற்றியதோடு நில்லாது, இரவைப் பார்த்து, “இரவே! நான் படும் துயரை எடுத்து உரைத்தால், கேட்ட பலரும் மயங்கி உறக்கம் கொள்வர். ஆனால் அதைக் கேட்ட நீ மட்டும் உறக்கம் கொள்ளாது என்னை உறுதுயர் செய்கின்றாய்!” என நொந்து கொண்டாள்.

இரவோடு நொந்து கொண்டிருப்பவள் முழுமதியின் தோற்றத்தைப் பார்த்து விட்டாள். ஆனால் அதுவும் தன் துணைக்கு வாராது என்பதை உணர்ந்தாள். உணரவே “பிறையாய் இருந்த பருவத்தில் உலகத்தவரால் வணங்கி வரவேற்கப்படும் இத்திங்கள், துயில் கொள்ளப் பெறாமல் வருந்தி, என்னைப் பற்றி வருந்தும் கொடிய காமநோயை உரைத்தால், அதை நின்று கேட்க வேண்டும் என்றும் கருதாமல், கதிர்களால் நிறைந்து முழு மதியாகி, என்னைப் பார்க்கவும் விரும்பாதது போல், ஒளி மழுங்கி நடுங்கி

ஓடுவது போல், உலகைச் சுழன்று சுழன்று வரும். ஆகவே, என் நோயை அதன்பால் உரைத்தும் பயன் இல்லை!" எனக் கூறி மனம் உடைந்தாள்.

அவ்வாறு மனம் உடைந்தவள் கண்களில், பேரூர்த் தெருக்களில், ஆண்டு முதிர்ந்த பெரியோர்கள் படுத்து உறங்குவதைக் கண்டாள். தான் வருந்த, அவர் துயில்வதைக் காண, அவள் உள்ளம் பொறுக்கவில்லை. உடனே அவர்களைத் தட்டி எழுப்பிப், "பெரியோர்களே! நீருண்ட மேகம் எல்லாம் ஒன்று திரண்டு வந்து நின்று பெய்யினும், என் மேனியைப் பற்றி வருத்தும் காமத் தீ அவியாது போல் தோன்றுகிறது. ஆகவே, உலகில் உள்ள நீரை எல்லாம் ஓரிடத்தே தேக்கி வைத்து, என்னை அதில் இட்டு அழுத்தி என் உயிரை ஓம்புவது உங்கள் கடன்" எனக் கூறி வேண்டிக் கொண்டாள்.

அவர் கடமையை அவர்களுக்கு நினைவூட்டியவள், தன் நோயின் தன்மையை அவர்க்குத் தெளிவாக உணர்த்த விரும்பிக், "காதலன் பிரியாது என் அண்மையில் இருப்பினும், அவன் அளிக்கும் இன்பத்தை ஆர நுகர வேண்டும் என அமைதி யிழந்து அலையும்; அவன் பிரிந்து போய் விட்டாலோ, இவ்வுடல் என்னை வாட்டி வருத்தும். இவ்வாறு இரு நிலையிலும் வருந்துவதை நான் ஆற்றேன். என்னைப் பற்றி வருத்தும் இக்காம நோய், படைக்கலங்களால் பாழாக்க முடியாத பெரிய கோட்டை போல் அழியாவரம் பெற்றது. அக்காம நோயால் வருந்தும் நான் பொறியால் இயங்கும் பாவை போல், உலாவி நடை பிணமாகி விட்டேன்!"

என்று பலப்பல கூறி அவள் புலம்ப, வறண்ட வானத்தில் பறந்து, மழைத்துளியைப் பெற வேண்டி மனம்

*சுழலும் வானம்பாடிக்கு அம்மழைத் துளி கிடைத்தது போல், நல்ல அழகு வாய்ந்த மார்பையுடைய அவள் காதலன் வந்து அவளை அணைத்துக் கொள்ள, அவளைப் பற்றி வருத்திய அல்லல் அனைத்தும் அப்போதே அகன்று விட்டது.*

"உரைசெல உயர்ந்தோங்கிச் சேர்ந்தாரை ஒருநிலையே
வரைநில்லா விழுமம் உறீஇ நடுக்கு உறைத்துத்
தெறல்மாலை
அரைசினும் அன்பு இன்றாம் காமம்; புரைதீர
அன்னமென் சேக்கையுள் ஆராது அளித்தவன்
துன்னி அகலத், துறந்த அணியளாய்,
நாணும் நிறையும் உணர்கல்லாள், தோள்நெகிழ்பு
பேரமர் உண்கண் நிறைமல்க, அந்நீர்தன்
கூர்எயிறுஆடிக், குவிமுலைமேல் வார்தரத்,
தேர்வழி நின்று தெருமரும்; ஆயிழை
கூறுப கேளாமோ சென்று.

எல்இழாய்! எற்றி வரைந்தானை நாணு மறந்தாள் என்று
உற்றனிர் போல வினவுதிர்; மற்றது
கேட்டீமின் எல்லீரும் வந்து.

வறம்தெற மாற்றிய வானமும் போலும்;
நிறைந்து என்னை மாய்ப்பதோர் வெள்ளமும் போலும்
சிறந்தவன் தூவறநீப்பப் பிறங்கி வந்து
என்மேல் நிலைஇய நோய்.

நக்கு நலனும் இழந்தாள் இவள் என்னும்
தக்கவிர் போலும் இழந்திலேன் மன்னோ;
மிக்க என் நாணும் நலனும் என்உள்ளமும்

அக்கால் அவனுழை ஆங்கே ஒழிந்தன;
உக்காண் இஃதோ, உடம்பு உயிர்க்கு ஊற்றாகச்
செக்கரம் புள்ளித் திகிரி அலவனொடு யான்
நக்கது பன்மாண் நினைந்து.

கரைகாணா நோயுள் அழுந்தாதவனைப்
புரைதவக் கூறிக் கொடுமை நுவல்வீர்!
வரைபவன் என்னின் அகலான்; அவனைத்
திரைதரு முந்நீர் வளாஅகம் எல்லாம்
நிரைகதிர் ஞாயிற்றை நாடுஎன்றேன்; யானும்
உரைகேட் புழியெல்லாம் செல்வேன்; புரைதீர்ந்தோன்
யாண்டு ஒளிப்பான் கொல்லோ மற்று?
மருள்கூர் பிணைபோல் மயங்க வெந்நோய் செய்யும்
மாலையும் வந்து மயங்கி எரிநுதி
யாமம் தலைவந்தன்றாயின், அதற்கு என்நோய்
பாடுவேன் பல்லாருள் சென்று.
யான் உற்ற எவ்வம் உரைப்பில் பலர்த் துயிற்றும்
யாமம்! நீ துஞ்சலை மன்.

எதிர்கொள்ளூஉம் ஞாலம்துயிலாராது ஆங்கண்
முதிர்பு என்மேல் முற்றிய வெந்நோய் உரைப்பின்
கதிர்கள் மழுங்கி மதியும் அதிர்வதுபோல்
ஓடிச் சுழல்வது மன்.

பேரூர் மறுகில் பெருந்துயில் சான்றீரே!
நீரைச் செறுத்து நிறைபுற ஓம்புமின்;
கார்தலைக்கொண்டு பொழியினும் தீர்வது
போலாது என்மெய்க்கனலும் நோய்.

இருப்பினும் நெஞ்சம் கனலும்; செலினே
வருத்துறும் யாக்கை வருந்துதல் ஆற்றேன்;
அருப்பம் உடைத்து என்உள் எவ்வம்; பொருத்திப்
பொறிசெய் புனைபாவை போல வறிது உயங்கிச்
செல்வேன் விழுமம் உழந்து.

என ஆங்குப் பாட அருளுற்று,
வறங்கூர் வானத்து வள்உறைக்கு அலமரும்
புள்ளிற்கு அதுபொழிந்தாங்கு மற்றுத்தன்
நல்லெழில் மார்பன் முயங்கலின்
அல்லல் தீர்ந்தன்று ஆயிழை பண்பே.

*வரைவிடைப் பிரிந்து நீட்டித்துழித் தலைவி பிரிவாற்ற கில்லாது, நாணு வரையிறந்து கலங்கி மொழிந்து அறிவு அழிந்துழி, அவன் வந்து சாரத் தெளிந்தமை கண்டார் கூறியது.*

1. உரை – புகழ்; செல – உயர; விழுமம் – கொடுமை. 2. தெறல் மாலை – அழிக்கும் இயல்புடைய. 3. புரை தீர – புகழ்கெட. 4. ஆராது – நிறையாது. 8. வார்தர – ஒழுக. 14. வாரம் – கோடை; நெற – அழிக்க. 16. தூவற – வலி கெடும்படி; நீப்ப – பிரிய; பிறங்கி – திரண்டு. 23. செக்கரம் – சிவப்பு 26. புரைதவ – புகழ்கெட. 28. வளாகம் – உலகம். 32. பிணை – பெண்மான். 38. துயில் ஆராது – உறங்காது.

# 30

# தகையாகத் தையலாள் சேர்ந்தாள்

ஒளிவீசும் நெற்றி, வேல் போன்ற விழி ஆகிய உருவ நலம் கொண்டாள் ஒருத்தி, நாணம் மடம் ஆகிய உள்ள நலங்களையும் குறைவறப் பெற்றிருந்தாள். அத்தகையாள், உள்ளத்தில் காதல் வெறியூட்டி அவளைத், தன் காதலுக்கு அடிமையாக்கிக் கொண்டான் ஓர் இளைஞன். இருவரும் தம் காதலைத் திரை மறைவில் வளர்த்து வந்தனர். ஆனால் தன் காதல் திருவிளையாடல்களைத் தன் பெற்றோர் அறியாவாறு நடத்தி வருவது அரிது என்பதை அறிந்து கொண்டாள் அப்பெண். அதனால் ஊர் அறிய மணர்ந்து வாழும் மனையற வாழ்வில் அவள் மனம் ஆழப்பதிந்தது. அவள் மனத்திற்கேற்ற மணாளானாகிய அவனும் அதற்கு இசைந்தான். விரைவில் வந்து மணந்து கொள்வதாக வாக்களித்தான். அந் நிலையில், இன்றி யமையாக் கடமை யொன்று வந்து அவன் வாழ்க்கையில் குறுக்கிட்டது. அந்நாட்டு ஏனைய இளைஞர்களைப் போலவே, அவனும் நாட்டெல்லையைக் காக்க விரைந்து

செல்ல வேண்டிய தாயிற்று. காதலியைக் கண்டு, நிலைமையைக் கூறி விடை பெற்றுச் செல்வதற்கும் ஊர்க்காவலன் வாய்ப்பளித்திலன். அதனால் அவளிடம் கூறிக் கொள்ளாமலே சென்று விட்டான் இதை யெல்லாம் அவள் அறிவாள். அவன் இன்று வருவான், நாளை வருவான், என ஒவ்வொரு நாளும் எதிர்நோக்கி ஏமாந்தாள். அது தொடர்ந்து நிகழவே அவள் அவன் அன்பையே ஐயங்கொள்ள வேண்டியதாயிற்று. காதலித்தவன் உண்மையிலேயே கைவிட்டிருந்தால் தன் கற்பு என்னாவது என நினைத்தாள். தாயினும் சிறந்தது நாண் என்றால், கற்பு உயிரினும் சிறந்தது அல்லவோ! அதை இழந்து உயிர் வாழ்வது கூடுமோ என எண்ணம் எழவே, அவள் அறிவு மயங்கிவிட்டது. பித்தம் கொண்டு பிதற்றித் திரியத் தலைப் பட்டாள். சிலம்பு ஒலியும் மெல்லக் கேட்கும்படி, பைய அடியெடுத்து வைத்தவள் அலைந்து திரிந்தாள். அவள் அழகு அழிந்து விட்டது. உணவை வெறுத்தது அவள் உள்ளம். நாணை மறந்து நடுத்தெருவில் நின்று, நாலுபேர் பார்க்க நகைத்தாள். பெண்மை இழந்து பிதற்றினாள். அழுவாள் சிறிது நேரம், சிரிப்பாள் சிறிது நேரம். வீட்டின் தலைவாயிலைத் தாண்டி அறியாதவள், ஊரெல்லாம் சுற்றி அலைந்தாள்.

ஒரு நாள் மாலை, அவள் வழக்கம்போல் வீதியில் பிதற்றியவாறே சென்று கொண்டிருந்தாள். அந்நிலையில் அவளைச் சிலர் பார்த்து விட்டார்கள். அவளைக் காணவே, அவர்களுக்குக் காதல் மீது இருந்த உயர்ந்த எண்ணமே போய்விட்டது. "தெளிந்த மதுவையும் கள்ளையும் உண்டவர் அறிவு மயங்கும்; நல்ல சொற்களே அவர் வாயினின்றும் வெளிப்படா; அவர் செய்வன

எல்லாம் அறத்திற்கு அப்பாற் பட்டனவாகவே அமையும். காணவும், கேட்கவும் இன்பம் தரும் இறவாப் புகழ் வாய்ந்தது எனப் பாராட்டப் பெறும் காதலும், ஒரு வகையில் அக் கள்ளைப் போல் கொடியதுதானோ? இதோ அலைந்து திரிகிறாளே, இவளா, முன்பு காற்சிலம்பொலி கேட்பதற்கும் அஞ்சி நடந்தவள்? இவள் அழகெல்லாம் அழிந்து போகத் தனிமையுணர்வு பெற்றுத் தளர்கிறாள். வேல் போன்ற விழிகளால் நிமிர்ந்து நோக்குவதை விடுத்துக் குறுக்குப் பார்வை செலுத்தக் கற்றுக் கொண்டுள்ளாள். வெய்யில், தன் தோலை உரிப்பதையும் உணராது, நின்று உருகுகிறாள். தன் தோளை அணைந்து இன்பம் கண்ட தன் காதலனை இழந்தவள்போல், தெருவில் திரிந்து, சிறிது உணவும் உட்கொள்ளாது, உயிரைக் காட்டிலும் சிறந்ததாகக் கருதிக் காக்க வேண்டிய நாணையும் இழந்து நகைக்கின்றாள். அச்சம் மடம் முதலாம் பெண்மைப் பண்புகளை யெல்லாம் இழந்தவள் போல் அழுகின்றாள். தோழி மார்களே! வாருங்கள். அவள் அருகிற் சென்று, அவளுக்கு உற்ற துயர் யாது எனக் கேட்டு அறிந்து கொள்வோம்," எனக் கூறியவாறே வந்து அவளை வளைத்துக் கொண்டார்கள்.

தன்னை வந்து சூழ்ந்து கொண்டவர்களை அப் பெண் பார்த்தாள். அவர்கள் வருவதற்கு முன்பே, வேறு சிலர் வந்து சூழ்ந்து கொண்டதையே உள்ளம் வெறுத்தது. அந்நிலையில் மேலும் சிலர் வந்து சேரவே, அவள் சினம் கொண்டாள். அதனால் வந்தவர்களைப் பார்த்து, "இதோ, உமக்கு முன்னே வந்து என்னைச் சூழ்ந்து கொண்டு, என் நிலைக்காக வருந்தும் இவர்களைப் பார்த்தீர்களா?

இவர்களே போதும்; நீங்கள் வேறு என்னை வளைத்துக் கொண்டு வேடிக்கை பார்க்க வேண்டாம்; நான் பெற்று வருந்தும் இக்காம நோயை, நீங்கள் பெற்று வருந்தாதவர் போலும்! உங்களுக்கு ஓர் உண்மை கூறுகிறேன், கேளுங்கள். காதல் நோயால் கருத்திழந்து இவ்வாறு அலைந்து திரிவதும், காதல் வகையுள் ஒன்று என்று அற நூல்களும் ஏற்றுக் கொண்டுள்ளன. காதலித்தவர், காதலியரின் மதிகெட்டு மருள் கொள்ளும்படி கைவிட்டுச் சென்றால், அக்காதலி யரின் நிலை, மலர்கள் தம் மணத்தையும், மனங்கவர் நிறத்தையும், தம் மென்மை இயல்பையும், இனிய மதுவையும் இழந்து மாண்பு கெட்ட நிலைக்கு நிகராம் - இவ்வுண்மை உணர்ந்து அடங்கி யிராமல், ஓடிவந்து, என்னை வளைத்துக் கொண்டு, என்னை விழுங்கி விடுபவர் போல் பார்க்காதீர்கள். என்னை விட்டுப் போய் விடுங்கள்," என்று கூறிச் சினந்து கொண்டாள்.

சிறிது நாழிகை சென்றது. அவள் சினமும் சிறிதே குறைந்தது. உடனே அவர்களை அணுகி, "என்பால் உறவுடையார் போல் என்னிடம் வந்து என் நிலை கண்டு வருந்துவோரே! நீங்கள் நெடிது வாழுங்கள். காதலன் கண்களோடு கலந்துவிடும் என் கண்ணின் புருவம், பருத்த தோள்கள், சிறுத்த இடை, அழகிய சிறு கருமேகம் போல், கருத்து நீண்ட கூந்தல் ஆகிய என் செல்வங்களை, அவற்றிற்குரிய விலை கூறி விற்கத் தெரியாமல், எவனோ ஒருவனுக்கு விற்று விட்டு, அவன் விரித்த மாயவலைக்குள் அகப்பட்டுக் கொண்டு வருந்துகிறது என் நெஞ்சு. நான் என்ன செய்வேன்!" என்று கூறி ஏங்கினாள்.

அவ்வேக்கம் சிறிதே குறைந்ததும், தனக்குற்ற அவல நிலைக்குத் தான் மட்டும் குற்றவாளி அன்று என்பதை அவர்க்குத் தெரிவிக்க விரும்பினாள். அதனால் மீண்டும் அவர்களை அணுகிப் "பெரியோர்களே! ஒருவன் என்னைக் காதலித்தான். நான் அவன் காதலை எளிதில் ஏற்றுக் கொண்டிலேன். "கைவிடமாட்டேன்! கைவிட மாட்டேன்!" என்று ஒரு முறை அல்ல, பலமுறை சூள் உரைத்து என் காதலை வேண்டினான். அதனால் 'இவன் நல்லவன்' என்று நம்பிற்று என் உள்ளம். அவன் காதலை ஏற்றுக் கொண்டேன். அவ்வளவே. அவன் என்னை ஆரத்தழுவிப் பேரின்பம் ஊட்டினான். இவ்வாறு இன்பம் ஊட்டிய அவன் ஒருநாள் என்னைப் பிரிந்து விட்டான். அன்று பிரிந்தவன்தான். இன்றுவரை அவனைக் கண்டிலேன். அத்தகைய பெருங் கொலையாளியை நான் இனிப் பார்ப்பேனோ கூறுங்கள். அவனைப் பார்க்கும் வாய்ப்பு மட்டும் எனக்குக் கிடைத்து விட்டால், பிறகு என்னை உங்களால் கண்டு கொள்ளவே முடியாது. அவ்வளவு பெருத்துவிடும் என் உடல்!" என்று கூறிப் பெருமிதங் கொண்டாள்.

காதலனைக் கண்டுபிடித்தல் வேண்டும் என்ற வேட்கை எழுந்து விடவே, அவனைத் தேடும் பணியை அப்போதே மேற்கொண்டாள். காதலனைப் இப்பரந்த பேருலகில் தேடிக் காண்பது அவ்வளவு எளிது அன்று, அதற்குத் தனக்கு ஒரு துணை கிடைத்தால் நன்று என நினைத்தாள். அந்நிலையில், வானத்தில் ஞாயிறு விளங்குவது அவள் கண்ணில் பட்டது; ஞாயிறை நோக்கினாள். "ஞாயிறே! உன் கதிர்களைப் பற்றி ஏறி வானத்தில் நின்று, என் காதலன் எங்கே உள்ளான்

என்பதை நானே கண்டுபிடித்துக் கொள்வேன். ஆனால் நீ இருக்கும் போது நானே அதைச் செய்தல் நன்றன்று என்று அந் நினைப்பைக் கைவிட்டு விட்டேன். என் காதலன் எங்கே ஒளிந்து கொண்டிருப்பினும் அவனை எனக்கு நீயே காட்டிவிடு. காட்டுவது உன் கடமை. இல்லையேல் வானத்தில் உனக்கு என்ன வேலை?" என்று பிதற்றினாள்.

ஞாயிற்றினிடத்திலிருந்து எவ்வித விடையும் வந்திலது. அதனால் அண்ணாந்து வானத்தை நோக்கி யவள் தலையைத் தாழ்த்திக் கொண்டாள். அதனால் அவள் பார்வை அருகே இருந்த நீர்நிலையில் சென்றது. நீர்நிலை, அலை ஓய்ந்து, அமைதியாகக் காட்சி அளித்தது. அதில் ஞாயிற்றின் நிழல், வானத்து வெண்மதிபோல் தோன்றுவதைக் கண்டாள். உடனே அவளுக்கு அருள் சுரந்து விட்டது. நீர்நிலையில் தேரைகள் வாழ்கின்றன. நீரில் வீழ்ந்த உடல்களைத் தின்று வாழும் இயல்புடைய அவற்றால், அந்நீருள் வந்து வீழ்ந்து விட்ட செஞ் ஞாயிற்றுக்குக் கேடுண்டாகி விடுமே என அஞ்சினாள். "ஞாயிறே! நீ வந்து புகுந்திருக்கும் நீருள் தேரைகள் உள்ளன. அவற்றின் வாய்க்குள் அகப்படாமல் விழிப்பாயிரு!" என நினைவூட்டினாள்.

அவள் அவ்வாறு கூறிக் கொண்டிருக்கும் போதே, ஞாயிறு மறையத் தொடங்கினான். அவன் மறைந்து விட்டால், இருள் சூழ்ந்து கொள்ளும்; காதலனைத் தேடிக் காண்பது தடையுறும் என அஞ்சினாள். அதனால் மீண்டும் ஞாயிற்றைப் பார்த்து, "எனக்குத் தன் அன்பைத் தர மறந்தவனும், ஆனால் என்னால் அன்பு செய்யப் பட்டவனுமாய என் காதலனை நான் தேடி அடைதல்

வேண்டும். தேடித் தருதல் உன்னால் ஆகாது. ஆகும் என்றாலும் உனக்கு அவ்விருப்பம் இல்லை. அது செய்ய வேண்டாம். கதிர்களோடு மலையிடையே சென்று மறையும் நீ, நான் அவனைத் தேடத் துணை புரியும்படி, உன் கதிர்களில் பெரும் பகுதியை இங்கேயே விடுத்து, ஒரு சில கதிர்களோடு மட்டுமே சென்று மறைவாயாக! என் பொருட்டு இச்சிறு உதவியையாவது செய்வாயாக!" என வேண்டிக் கொண்டாள்.

அந்நிலையில் மாலைக் காலம் மெல்லக் காட்சி அளிக்கத் தொடங்கிவிட்டது. அதைப் பார்த்தாள் அவள். அதன் வரவால் தன் காமநோய் மேலும் கைகடந்து பெருகி விடுமே என அஞ்சினாள். அதனால் மீண்டும் ஞாயிறுபாலே அடைக்கலம் புகுந்தாள். "வேண்டுவார் வேண்டும் வரங்களை யெல்லாம் மறுக்காமல் அளிக்கும் கடவுளே! உன் மாலைப் பொழுது வந்து விட்டது. 'மெத்தென்ற மயிர் முளைத்த என் முன் கையில் கிடந்து ஒலிக்கும் வளைகளால் அழகு பெற்ற என் கைகளைப் பற்றிக் காதல் காட்டி என்னைப் புணர்ந்த என் காதலன், கறந்து பயன்படாத, காட்டெருமைகள் வாழும் பாலைக் காட்டைக் கடந்து வெளிநாடு சென்று விட்டானோ? அல்லது, இவ்வூரில் இருந்து கொண்டே என்னை வந்து காணாதே கொடுமை செய்கின்றானோ, அறியேன். அவன் இவ்வூரிலேயே உள்ளாயின், அவன் செய்த கொடுமைக்கு அவனைச் சினவாமல் ஏற்றுக் கொள்வேன். அவனை அடையாமல், நான் ஆறாத் துயர் அடைகின்றேன். ஆகவே, அவனை எனக்குக் காட்டி அருள் புரிவாயாக!" என வேண்டிக் கொண்டாள்.

ஞாயிறு அவள் கூறிய எதையும் கேளாமலே சென்று மறைந்து விட்டான். அதனால் காதல் நோய் பெருகிக் கொடுமை செய்தது. உடனே, அவரவர் செய்யும் நன்மை தீமைகளுக்கேற்ப நடுநின்று தண்டம் அளிக்கும் கூற்றுவனை அழைத்தாள். அவன் வந்து தன் முன் நிற்பதாகக் கனவு கண்டு, "நீதியை மறந்து, ஒருவர்க்காகப் பரிந்து பாவச் செயல் புரியாத பெரியோனே; சுறாமீன் கொடியேந்திய கொடியவனாகிய இக்காமன் செய்யும் கொடுமைகளை, உன் ஓலைச்சுவடியில் குறித்து வைத்துக் கொள்வாயாக!" எனப் பிதற்றிப் பெரிதும் வேண்டிக் கொண்டாள்.

காலக் கடவுளை வேண்டிக் கொண்டவள். அவனை மறந்து, காமனை நினைந்து கொண்டாள். "ஏ காமனே தன்மீது அன்பிலாதான் ஒருவனுக்காகத் தன் நெஞ்சை நொந்து கொள்ளும்படி மகளிரை வாட்டும் இக் கொடுஞ் செயலில், உன் மலர்க்கணைகள், மகளிர் எல்லோரிடத்துப் ஒரே தன்மையாய் நடந்து கொள்ளுமோ, அல்லது என்னிடம் மட்டும்தான் அவ்வாறு நடந்து கொள்ளுமோ கூறு," எனக் கேட்டு அவனை வெறுத்தாள்.

பிறகு, "உடல் தளர்ச்சியால் என் கண்கள் சிறிதே உறக்கம் கொள்ளும் காலம் அறிந்து, என்னைச் செயல் இழக்கச் செய்து கொடுமை செய்த அவன் வந்து தோன்று வனாயின், கலங்கிய என் கண்களால் காண மெல்லக் கண் விழிப்பேன். வந்தவன் மீண்டும் ஓடி மறைந்து விடாதபடி அவன் மேலாடையைப் பற்றிக் கொள்வேன். காதலித்த அன்று நான் பெற்றிருந்த பேரழகைப் பிரிவுத் துயரால் இழந்து பெரிதும் வேறுபட்டிருக்கும் என்னைக் காணும் அவன், என்னைத் தன் காதலிதானோ அல்லது வேறு

ஒருத்தியோ என ஐயங்கொண்டு, அகன்று செல்லக் கருதுவானானால், உடனே அவனை உண்மையாகவே கள்வன் என்று கருதிக், "கள்ளன்! கள்ளன்!" என்று கூறிக் கூச்சல் எழுப்பி ஊரைக் கூட்டி விடுவேன்!" என்று தனக்குத் தானே பேசிப் பிதற்றிக் கொண்டாள்.

இவ்வாறு தனக்குத் தானே பிதற்றிக் கொள்பவள், சிறிது நாழிகை கழித்துத் தன்னைச் சூழ்ந்து நின்றவர்களைப் பார்த்து, "ஊர்ப் பெரியோர்களே! 'ஏடி பெண்ணே! ஞாயிற்றையும், கூற்றுவனையும் காமனையும் அழைத்துக் குறை கூறுகின்றாயே, அவையெல்லாம் உன் குறையைப் போக்குமோ?' என்று என்னை ஏதும் வினவாதீர்கள். மைதீட்டிய என் கண்கள் உறக்கத்தை மறந்து போகும்படி கொடுமை செய்தவனோடு நான் கொண்டிருக்கும் காதல் உறவு, மதுவுண்டவர் மதிகெட்டு மருள்வதுபோல், என்னை என்றென்றும் மருளப் பண்ணி, என் உயிரை விடாது பற்றிக் கொண்டு விட்டது. அதன் பிடியிலிருந்து விடுதலை பெற்றுப் பிழைப்பது என்னால் இயலாதே! நான் என்ன செய்வேன்?" என்று கூறி வருந்தினாள்.

பிறகு மீண்டும் ஞாயிற்றை நோக்கினாள்: "ஞாயிறே! மாலை கழித்து வரும் இரவில், அவனைக் கனவில் கண்டு களிப்பதற்கு வாய்ப்புக் கிட்டாதபடி என் கண்களும் உறங்கலாயின், அவனை நனவில் கண்டு மகிழும்படி நீயும் கொண்டு வந்து காட்டாயாயின், காமக் கடவுள்பால் செல்வேன். சென்று, என் மேனியில் நைந்து என்னைக் காம நோயால் வீழ்த்தித் துன்புறுத்தும் உன் மலர்க் கணைகளில், ஒரு சிலவற்றைத் தா. என்னை வருத்தும் என் காதலன் என்னைப் போலவே காம நோயால் வருந்தி,

அது தீரப் பனைமடலால் ஆன குதிரை ஏறி என் ஊர் மன்றம் அடைந்து வருந்தும்படி அவன்மீது ஏவ வேண்டும் என்று கேட்டுக் காமன் கால்களைப் பற்றி வேண்டிக் கொள்வேன்!" என்று உள்ளம் நொந்து உளறினாள்.

—என்றெல்லாம் பிதற்றிப் பெருந்துன்பம் உற்றுக் கண்கலங்கி அழுதாள். தோள்கள் மெலிய வளைகள் கழன் றோட வாய்விட்டுப் புலம்பினாள். அவளை, இப்போது பாருங்கள் மடப்பமும், மென்னடையும் வாய்ந்த அன்னப்பேடு, தன் காதற் சேவலைக் காணாது விரைய, அந்நிலையில், அதை அடைந்த அன்னச் சேவலைக் கண்டு, களிகூர்ந்து கூடியதுபோல், காதலன் வரக்கண்ட இவ்வொண்ணுதலாள் தன் ஆழ்ந்த துயரத்தை எல்லாம் மறந்து, பித்தம்கொண்டு, பிறர்காணப் பெருகச் சிரிப்பதை யெல்லாம் கைவிட்டு, நாண் மிக்க நங்கையாய்ப், புதியோரைக் கண்டதும் தலை தாழ்க்கும் தகைமை உடையளாய்ப்; பேரின்பம் பெருகும்படி காதலன் மார்பில் கண் புதைந்து அடங்கினாள். என்னே அவள் காதல் மாண்பு!

"ஆறல்ல மொழிதோற்றி அறவினை கலக்கிய
தேறுகள் நறவு உண்டார் மயக்கம்போல், காமம்
வேறு ஒருபாற்று ஆனது கொல்லோ? சீறடிச்
சிலம்பு ஆர்ப்ப இயலியாள் இவள் மன்னோ? இனிமன்னும்

புலம்பு ஊரப் புல்என்ற வனப்பினாள், விலங்காக
வேல்நுதி உறநோக்கி வெயில்உற உருகும்; தன்
தோள் நலம் உண்டானைக் கெடுத்தாள் போல் தெருவில்பட்டு
ஊண்யாதும் இலளாகி நகுதலும் நகூஉம்; ஆங்கே

பெண்மையும் இலளாகி அழுதலும் அழூஉம்;
தோழியோர்!
ஒண்ணுதல் உற்றது உழைச்சென்று கேளாமோ!

இவர் யாவர் ஏமுற்றார்? கண்டீரே, ஒஓ!
அமையும் தவறிலீர் மற்கொலோ? நகையின்
மிக்கதன் காமமும் ஒன்று என்ப; அம்மா!
புது நலம் பூவாடியற்று, தாம்வீழ்வார்
மதிமருள நீத்தக் கடை.

என்னையே மூசிக் கதுமென நோக்கன்மின் வந்து;

கலைஇயகண்புருவம், தோள், நுசுப்பு, ஏஎர்
சிலமழைபோல் தாழ்ந்து இருண்ட கூந்தல் அவற்றை
விலைவள மாற்ற அறியாது, ஒருவன்
வலையகப்பட்டது என்நெஞ்சு.

வாழிய கேளிர்

பலவும் சூள் தேற்றித் தெளித்தவன் என்னை
முலையிடை வாங்கி முயங்கினன் நீத்த
கொலைவனைக் காணேன்கொல் யான்

காணினும் என்னை அறிதிர்; கதிர்பற்றி
யாங்குளதிர் நோக்குவன்; ஞாயிறே! எங்கேள்வன்
யாங்குளனாயினும் காட்டீமோ; காட்டாயேல்
வானத்து எவன் செய்தி நீ.

ஆரிருள் நீக்கும் விசும்பின் மதிபோல
நீருள்ளும் தோன்றுதி, ஞாயிறே! அவ்வழித்
தேரைத் தினப்படல் ஓம்பு.

நல்கா ஒருவனை, நாடி யான் கொள்வினைப்,
பல்கதிர் சாம்பிப், பகல் ஒழியப் பட்டீமோ,
செல்கதிர் ஞாயிறே! நீ.

அறாஅலின்று அரிமுன்கைக் கொட்டும்
பறாஅப் பருந்தின்கண் பற்றிப் புணர்ந்தான்
கறாஅஎருமைய காடு இறந்தான் கொல்லோ?
உறாஅத்தகைசெய்து இவ்வூருள்ளான் கொல்லோ?

செறாஅது உளனாயின் கொள்வேன்; அவனைப்
பெறாஅது யான் நோவேன்; அவனை எற்காட்டி;
சுறாஅக்கொடியான் கொடுமையை நீயும்,
உறாஅ அரைச! நின்ஓலைக்கண் கொண்டீ;
மறாஅ அரைச! நின்மாலையும் வந்தன்று;
அறாஅது; அணிக இந்நோய்.

தன்நெஞ்சு ஒருவற்கு இனைவித்தல் யாவர்க்கும்
அன்னவோ காம! நின் அம்பு!
கையாறு செய்தானைக் காணின்; கலுழ்கண்ணால்
பைஎன நோக்குவேன்; தாழ்தானைப் பற்றுவேன்;
ஐயம்கொண்டு என்னை அறியான் விடுவானேல்
ஒய்எனப் பூசல் இடுவேன்மன், யான் அவனை
மெய்யாகக் கள்வனோஎன்று,

வினவன்மின் ஊரவிர்! என்னை; எஞ்ஞான்றும்
அடாஅ நறஉண்டார் கோல மருள
விடாஅது உயிரொடு கூடிற்று என் உண்கண்
படாஅமை செய்தான் தொடர்பு.

கனவினால் காணியகண் படாஆயின்,
நனவினால், ஞாயிறே! காட்டாய் நீஆயின்,

பனைஈன்ற மாஊர்ந்து அவன்வரக், காமன்
கணைஇரப்பேன் கால்புல்லிக் கொண்டு.

எனவாங்கு,
கண்இனைபு கலுழ்பு எங்கினள்;
தோள்ஞெகிழ்பு வளைநெகிழ்ந்தனள்;
அன்னையோ! எல்லீரும் காண்மின்; மடவரல்
மென் நடைப் பேடை துணைதரத், தற்சேர்ந்த
அன்ன வான்சேவல் புணர்ச்சிபோல், ஒண்ணுதல்
காதலன் மன்ற அவனை வரக்கண்டு, ஆங்கு
ஆழ்துயரம் எல்லாம் மறந்தனள்; பேதை
நகைஒழிந்து, நாணுமெய் நிற்ப இறைஞ்சித்,
தகையாகத் தையலாள் சேர்ந்தாள், நகையாக
நல் எழில் மார்பன் அகத்து.

*வரைவிடைப் பிரிந்து நீட்டித்துழித் தலைவி பிரிவாற்றகில்லாது நாணுவரை பிறந்து கலங்கி மொழிந்து அறிவழிந்துழி, அவன் வந்து சாரத் தெளிந்தமை கண்டார் கூறிற்று என்று கூறியது.*

1. ஆறு – நல்வழி; அறவினை – அறச்செயல்; 2. தேறு – தெளிந்த; நறவு – மதுவகை; 4. இயலியாள் – நடந்தவள். 5. புலம்பு ஊர – தன்மை மிக; விலங்காக – குறுக்காக, 7. கெடுத்தாள் – இழந்தவள். 11. உழை – அருகில். 12. ஏமுற்றார் – வருந்தினவர். 13. நகை – அன்பு; நகையின் மிக்க காமம் – பெருந்திணைக் காமம். 14. வீழ்வார் – விரும்புவார். 16. நீத்தக்கடை – பிரிந்தபோது. 17. மூசி – மொய்த்துக் கொண்டு. 18. கலைஇய – கலந்துவிட்ட; ஏளர் – அழகு, 32. ஓம்பு – உன்னைக் காப்பாற்றிக் கொள். 33. நல்கா – அன்பு காட்டாத. 34. சாம்பி – மழுங்கி; பட்டீமோ – மறைக. 36. அறா அவின்று – நீங்காமல்; அரி – மெல்லிய மயிர்; கொட்டும் – சுழலும். 37. பறா அப்பருந்து – கைவளை. 39. உறாஅத்தகை – என்னோடு

பொருந்தாத செயல்; உறாஅ — ஒரு பக்கம் சாயாத (நடுவுநிலைமையில் பிறழாத) கொண்டீ — கொள்வாயக. 44. மறாஅ — மறுக்கா; 45. அறாஅது — தணியாது; 46. இனைவித்தல் — வருந்துவித்தல். 49. தானை— ஆடை. 51. ஒய்யென — விரைவாக; பூசல் — பெருங்கூச்சல். 56. படா அமை — உறங்காமை. 57. காணிய — காண. 60. புல்லிக்கொண்டு — கட்டிக்கொண்டு. 62. ஏங்கினள் — அழுதாள். 65. துனைதர — விரைந்துவர. 68. பேதை நகை — பித்தம் கொண்டு சிரிக்கும் சிரிப்பு. 69. இறைஞ்சி — தலை வணங்கி, 70. தகை ஆக — அழகாக.

# 31

# வந்தனர் காதலர்

அவள் ஓர் அரசமாதேவி. அவள் கணவன் ஒரு குறுநில மன்னன். பேரரசன் ஒருவன் கீழ்ப் பணிபுரியும் பேறு பெற்றிருந்தான். தன் பேரரசிற்குப் பகை மன்னரால் கேடு வரும் போதெல்லாம் படை கொண்டு சென்று, பகைவரைக் கொன்று தன் அரசைக் காக்கும் அப்பெரும் பொறுப்பினை, மன்னன் அவன்பால் ஒப்படைத்திருந் தான். ஆற்றலில் சிறந்திருந்த அவன்பால் அருள் உள்ளமும் சிறக்க வாய்ந்திருந்தது. அகத்தில் அருள் நிறைந்திருந்தமை யால், அவன் முகம், முழுமதிபோல், எப்போதும் முறுவல் கொண்டிருக்கும். அத்தகையான் அன்பை ஆரப்பெற்றிருந் தாள் அவள். ஆற்றலும் அருளும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற ஒருவனைக் கணவனாகப் பெற்றேன் என்ற பெருமித வுணர்வால், பேரின்பம் அடைவாளை, அவள்பால் அவன் காட்டும் நிறையன்பு, மேலும் இன்புறப் பண்ணிற்று. அன்பால் பிணைப்புண்ட அவ்விருவரும், இன்பவுணர்வூட்டும் இடங்கள்தோறும் சென்று சென்று

இன்பம் நுகரும் இனிய வழக்கத்தை மேற்கொண் டிருந்தனர். அவ்வாறு இணைந்து செல்லும் அவர்க்கு, அவர் காணும் மாலைக் காட்சிகளின் மாண்புமிகு தோற்றம் மனம் நிறை மகிழ்ச்சியை அளிக்கும். இயல் பாகவே இன்பத்தில் ஆழ்ந்து கிடக்கும் அவர் உள்ளத்தை மேலும் இன்புறச் செய்யும். அவர் அகத்தில் உறையும் காதல் உணர்வை மேலும் உரம் ஊட்டி வளர்க்கும். இவ்வாறு இன்ப வெள்ளத்தில் ஈர்த்துச் செல்லப் பெற்று, இனிது நடைபெற்று வந்தது அவர் இல்வாழ்க்கை.

ஒருநாள் பேரரசனிடமிருந்து ஓலையொன்று வந்தது. தன் நாட்டின் மீது பாய்ந்து விட்ட பகைவர் படை யொன்றைப் பாழ் செய்து, நாட்டைக் காக்க, விரைந்து செல்லுமாறு பணித்திருந்தான் மன்னன். பேரரசன் ஏவிய பணி அது. மேலும் தன் நாட்டு மக்களின் வாழ்வைக் காக்க வேண்டிய விழுமிய பணி. அதனால், இளைஞன், வாளேந்தி உடனே புறப்பட்டு விட்டான். கணவன் மேற்கொண்டு செல்லும் கடமைச் சிறப்பினை உணர்ந் திருந்தமையால், அவளும் அவனை அன்போடு வழியனுப்பினாள்.

இளைஞன் சென்று நாட்கள் சில கழிந்தன. கணவன் விரைவில் வீடு திரும்பி விடுவன் எனக் கருதி அவள் ஆற்றியிருந்தாள். ஆனால் அவன் வந்திலன். பகைவர் பெரும் படையை முற்றிலும் முறியடித்த பின்னல்லது வருதல் முறையாகாது. ஆதலின், அவன் அப்படையை அறவே அழிப்பதிலேயே ஆர்வம் காட்டி ஆங்கேயே இருந்து விட்டான். அதனால் அவள் எதிர் நோக்கியவாறு விரைவில் வந்திலன். அவன் பிரிவை அவளால் தாங்கிக் கொள்ள இயலவில்லை; அவனையே நினைந்து நினைந்து

வருந்தினாள்; மனையகத்தே அடைபட்டுக் கிடப்பதால் துயர் கொள்ளும் மனம், மாலைக் காட்சிகளைக் காணின், அத் துயரை ஒருவாறு மறக்கவும் செய்யும் எனும் நினைவால், ஒருநாள் மனையை விட்டு வெளிப்போந்து மாலைக் காட்சிகளைக் கண்டு நின்றாள்.

உலகம் தோன்றிய தொல்லூழிக் காலம் முதலாக, இவ்வுலகத்து இருளைப் போக்கி ஒளி அளிக்கும் தொழிலைத் தவறாது மேற்கொண்டு திரியும் ஞாயிறு, உலகப் பொருள்கள் ஒவ்வொன்றையும் தன் ஆணைப்படி ஆட்டுவிக்க வல்லோனாய உலக முதல்வன் ஆணையைத் தலைமேல் தாங்கி ஆற்றுவான் வேண்டிக், கண்பெற்ற பயனை உலகத்து உயிர்கள் இழந்து போமாறு, உலகெங்கும் இருள் பரவும் வண்ணம் தன் கதிர்களைத் தன்பாலே ஒடுக்கிக் கொண்டு, மேலைத் திசை மலைகளுக்கு இடையே சென்று மறைந்து கொண்டிருந்தான். அழகுமிகு அக்காட்சியைக் கண்டாள் அவள். ஆனால், மனத்துயர் மறைய மாலைக் காட்சிகளைக் காண வந்தவள் உள்ளத்தை அக்காட்சி கண்ணீர் பெருகச் செய்துவிட்டது. நாடு காக்கும் பணியே பெரும் பணியாகக் கொண்ட பெருமைசால் குடியிற் பிறந்து, பேரரசன் ஆணையேற்றுப், பகைவரைப் பாழ் செய்யப் படைகொண்டு போயிருக்கும் கணவனையும், அவன் பிரிவால் பயனற்றுப் பாழுறும் தன் காதலையும், ஞாயிற்றின் மறைவு நினைப்பூட்டி விடவே நெடிது வருந்தினாள்.

மேலைத் திசை நோக்கி நின்று மறையும் ஞாயிற்றைக் கண்ணுற்றமையால் கலங்கிய அவள், அந்நினைவை மறக்கத் தன் பார்வையைக் கீழ்த்திசைப்பால் போக்கி னாள். நீல நிறக் கடற்பரப்பின் மீது, தண்ணொளி பரப்பி

எழும் வெண்ணிலவைக் கண்டாள். கண்கொள்ளாக் கவின் அளிக்கும் அக்காட்சியைக் கண்டு, சிறிதே தன்னை மறந்திருந்தவள், அக்காட்சிப் பகையைப் பாழ் செய்து புகழ் ஒளி பரப்பும் தன் கணவனின் அருள் ஒழுகும் அழகிய திருமுகக் காட்சியை, அவள் அகக் கண்முன் கொண்டுவந்து நிறத்திவிடவே, அவள் அவனை நினைந்து வருந்தினாள்.

மலை வாயிலில் சென்று மறையும் ஞாயிறும், திரையொலிக்கும் கடல்மீது எழும் திங்களும் காலன் நினைவையே நினைப்பூட்டக் கண்டு கலங்கியவள், தன் கண்களை அவற்றின்பாற் செல்ல விடாது, கழிநீரை நோக்கினாள்; கரிய கழியில் காலையில் மலர்ந்து மணம் நாறிய மலர்கள், ஞாயிறு மறைந்து மாலை வந்துற்றதும் வாடி வனப்பிழந்து போனதைக் கண்டாள். அவற்றின் நிலைக்கு இரங்கினாள். அந்நினைவு சிறிது பொழுதே. அவற்றின் நிலை கண்டு இரங்கியவள், அவையும், தன் துயர் நிலையையே நினைப்பூட்டுவது அறிந்து நெடிது வருந்தினாள். மலர்ச்சி ஊட்டும் ஞாயிற்றின் ஒளியை இழந்துவிட்டமையால், கூம்பிவிட்ட அம் மலர்கள், உடன் இருந்து இன்பம் ஊட்டும் கணவன் அண்டையில் இல்லாமையால், இன்பக் கிளர்ச்சியும் எழுச்சியும் அற்று அடங்கிக் கிடக்கும் தன் அகக்காட்சியைக் காட்டக் கண்டு கலங்கினாள்; தன்னை மறந்தாள்; வாய் விட்டுப் புலம்பினாள்; தன் அகத்துயர் புறத்தார்க்கும் புலனாகு மாறு அஃவாறு புலம்புவது, தன் பெண்மைக்குப் பெருமைக் கேடாம் என்பதையும் மறந்தாள்.

"ஏ மாலையே! கணவனோடு கூடிக் களிப்புற்று வாழ்ந்த காலத்தில் எம் இன்பத்தை மேலும் வளர்க்கும்

இனிய துணையாய் விளங்கிய நீ, அன்பு காட்டி அணைத்துக் கொள்ள வேண்டிய அக் கணவர், நான் அழுது அழுது அழிந்து போமாறு, பிரிந்து போய்விட்டதை எண்ணி வருந்தி நிற்கும் இப்போது, என்னை மேலும் வருத்துகின்றனையே, இது நின் தகுதிக்கு ஏற்றதோ?

"ஏ மாலையே! பண்டு கணவனோடு கூடி வாழ்ந்து களித்திருந்தபோது, எம் காதலை மேலும் மேலும் வளர்க்கும் நற்றொண்டினை நன்கு ஆற்றிய நீ, என்னால் மனம் நிறைந்த இன்பம் நுகர்ந்த என் கணவர், என்னை மறந்து, தாம் என்பால் பெற்ற அவ்வின்பத்தை, எனக்குத் தர எண்ணாது, என்னைத் தனியே விடுத்துச் சென்று, நனிமிகச் செய்மைக்கண் உள்ள நாட்டில், நீண்ட நாட்களாக வாழ்வதால் வருந்தி வாடும் என்னை, மேலும் வருத்துகின்றாய். இது நின் தகுதிக்குத் தக்கதோ?

"ஏ மாலையே! பிரிந்து போய் மறந்து வாழும் கணவனைத் தேடிக் கொண்டு வந்து தந்து துணைபுரியும் நல்லெண்ணம் நினக்கு இல்லை; மாறாகக், கணவனைப் பிரிந்து வாழும் என் கலக்கத்தை மேலும் வளர்த்து வருத்தம் தருகின்றாய். அம்மட்டோ? கணவனைப் பிரிந்து கலங்கும் என் போல்வார் கண்டு மேலும் கலங்குமாற், கணவனைப் புணர்ந்து களித்து வாழும் காரிகையர்க்குக், காதல் இன்பம் பெறப் பெருந்துணை புரிகின்றாய். முறை கெட்ட இக்காரியமல்லது, வேறு நல்லது புரிய நினக்குத் தெரியாதோ?" என வாய்விட்டுப் புலம்பி வருந்தினாள்.

இவ்வாறு வருந்துவாளின் வருத்த நிலையினை, அவ்வூரார் சிலர் கண்டு, தாமும் கண்ணீர் விட்டுக் கலங்கினர். அந்நிலையில், சேய் நாடு சென்றிருந்த அவள் கணவன், பகைவர் படையை அழித்து, அவரால் தன்

*நாட்டிற்கு வந்த கேட்டினைப் போக்கியதோடு நில்லாது, அப்பகைவர்க்குரிய நாட்டில், தன் பேரரசனின் ஆட்சி நிலவுமாறு பண்ணிய வெற்றிச் சிறப்புக்களோடும் விரைந்து வந்து சேர்ந்தான். வந்த கணவனைக் கண்டாள். அவள் கலக்கம் இருந்த இடம் தெரியாது எங்கோ சென்று மறைந்தது. பிரிந்து போன கணவன், மீண்டு வருங்கால், வறிதே வாராது, போற்றிப் புகழோடும் வந்தான் எனும் நினைவால், அவள் துயர் நில்லாது மறைந்தது. அவள் அகம் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்தது. அக்காட்சியைக் கண்ட அவ்வூரார், முன்னாள் மாலையில், மலைவாயில் வீழ்ந்து மறைந்த ஞாயிறு, மறுநாள் காலையில், தான் இல்லாக் காலத்தில், உலகில் பரவிய இருளைக் கெடுப்பதோடு, உயிர்களுக்கு உரம் ஊட்டும் ஒளியும் பெற்று வரக்கண்டு, அவ்வுலகத்து உயிர்கள் அடையும் மகிழ்ச்சியை நினைப்பூட்ட நினைந்து மகிழ்ந்து, அவள் காதற் சிறப்பினை வியந்து பாராட்டினர்.*

"தொல்லியல் ஞாலத்துத் தொழில் ஆற்றி ஞாயின்
வல்லவன் கூறிய வினைதலை வைத்தான் போல்
கல்அடைபு, கதிர் ஊன்றிக் கண்பயம் கெடப் பெயர
அல்லது கெடுப்பவன் அருள்கொண்ட முகம் போல
மல்லல் நீர்த் திரை ஊர்பு, மால்இருள் மதிசீப்ப,
இல்லவர் ஒழுக்கம்போல் இருங்கழி மலர்கூம்பச்
செல்லும் என் உயிர்ப்புறத்து இறுத்தந்த மருள் மாலை!

மாலைநீ,
இன்புற்றார்க்கு இறைச்சியாய் இயைவதே செய்தாய்மன்;
அன்புற்றார் அழநீத்த அல்லலுள் கலங்கிய
துன்புற்றார்த் துயர்செய்தல் தக்கதோ நினக்கு?

மாலை நீ,
கலந்தவர் காமத்தைக் கனற்றலோ செய்தாய்மன்;
நலம்கொண்டு நல்காதார் நனிநீத்த புலம்பின்கண்
அலந்தவர்க்கு அணங்காதல் தக்கதோ நினக்கு?

மாலைநீ,
எம் கேள்வன் தருதலும் தருகல்லாய்; துணையல்லை
பிரிந்தவர்க்கு நோயாகிப் புணர்ந்தவர்க்குப் புணையாகித்
திருந்தாத செயின் அல்லால் இல்லையோ நினக்கு?
எனவாங்கு,
ஆயிழை மடவரல் அவலம் அகலப்,
பாயிருள் பரப்பினைப் பகல் களைந்ததுபோலப்
போய் அவர் மண்வெளவி வந்தனர்
சேய்உறை காதலர் செய்வினை முடித்தே."

*வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த கணவனை நினைந்து புலம்பிய தலைவி, அவன் வெற்றிப் புகழோடு வீடு திரும்பக் கண்டு களித்தாளைக் கண்டு ஊரார் பாராட்டியது இது.*

1. தொல் இயல் — பழைய முறை; ஞாலம் — உலகம். 2. தலைவைத்தல் — ஏற்றுக் கொள்ளுதல். 3. கல் — மலை. அடைபு — அடைந்து; பெயர — மறைய. 5. மல்லல் — நிறைந்த; ஊர்பு — தோன்றி; மால் — மயக்கம் தரும்; சீப்பு — அழிக்க. 6. இல்லவர் — இல்லாதவர்; வாழ்க்கையில் பொருள் அற்றவர்; உள்ளத்தில் அன்பு அற்றவர்; இரும் — கரிய. 7. இறுத்தந்த — தங்கியிருக்கும். 9. இறைச்சி — துணை. 13. கனற்றல் — வளர்த்தல். 14. புலம்பு — தனிமை. 15. அலந்தவர் — வருந்தியவர்; அணங்கு — வருத்தம். 22. பகல் — ஞாயிறு. 23. அவர் — பகைவர். 24. சேய் — சேய்நாடு; காதலர், வினை முடித்து, மண்வெளவி, அவலம் அகல வந்தனர் என முடிக்க.

# 32

## வரையாமையின் வருந்தினள் பெரிதே

அரசகுடியிற் பிறந்தவன் அவன். கடல் வளத்தால் கவின் மிக்க நாட்டில் அரசோச்சியிருந்த நல்லோன் மகன் அவன். அரசன் மகனாய்ப் பிறந்திருந்தமையால், அவன் தன் நாட்டு நாற்படை முரசு முழங்கப் பகைவர் நாட்டின் மீது பாய்ந்து செல்லும் காட்சிச் சிறப்பைக் கண்டு களித் திருந்ததோடு, தன் பெரும்படை பகையரசனுக்குரிய அரணை முற்றி வளைத்துக் கொண்டாக்கால், அவ்வரணகத்து வாழும் அரசன் நெஞ்சம் எத்துணை நடுக்கத்திற்குள்ளாம் என்பதையும் அறிந்திருந்தான்.

அரசனுக்கு மகனாகப் பிறந்தான், அரசர்க்குரிய படையறிவு மட்டும் பெற்றிருத்தல் போதாது. தன்னாடும், மக்களும் நல்வாழ்வு வாழ வேண்டின், அவர்களை ஆளும் உரிமை கொண்ட தன்பால் ஒழுக்க நெறி மிக்க உயர்ந்த நிலையை உணர்த்தவல்ல உலகியல் அறிவும் நன்கு வாய்ந் திருத்தல் வேண்டும் என்பதையும் உணர்ந்திருந்தான். அதனால் அவ்வொழுக்க நெறிமை உணர்த்த வல்ல

நல்லாசிரியனைத் தேடி அடைந்து, அவர்பால் சுற்றம் பேணல், செய்ந்நன்றி மறவாமை, வாய்மை வழுவாமை முதலாம் உயர்ந்த உண்மைகளைக் கற்றுத் தேர்ந்திருந் தான்; ஆசிரியர்பால் அறிவு பெற விரும்பிய அவன், அறிவளிக்கும் ஆசிரியர்க்கு அவர் உள்ளம் மகிழுமாறு உற்றுழி உதவ வேண்டும், உறுபொருள் கொடுத்தல் வேண்டும். ஆளும் அரசன் தான் எனத் தன்னை உயர்வாக வும், தன் ஆட்சிக் கீழ் வாழும் ஒரு குடிமகன் என ஆசிரியரைத் தாழ்வாகவும் மதிக்கும் மடமை கூடாது என்ற கற்கு முறைகளை அறிந்து கற்றுத் தேர்ந்திருந்தான்.

நல்லாசிரியனை அடைந்து, நாடாள்வதற்கு வேண்டும் அரசியல் நூல்களோடு, நல்லொழுக்க நெறி கற்பிக்கும் அறிவியல் நூல்களையும், கற்றுத் துறைபோய அவன், ஒரு நாள் ஒரு பெண்ணைக் கண்டான். அவள் பால் தன் நிலைக்கு ஒத்த பண்புகள் பொருந்தியிருக்கக் கண்டு, அவள்பால் காதல் கொண்டான். அவன் அறிவும் ஆண்மையும் அறிந்து அவளும் அவனைக் காதலித்தாள். அன்று முதல் இருவரும் கலந்து பழகினர். ஆனால், அவர் காதலை இருவர் பெற்றோரும் அறியார். ஆதலின், அவ்விரு வரும் பலர் அறியப் பழக மாட்டாது களவொழுக்கம் மேற்கொண்டு களிக்கத் தலைப்பட்டனர். சில நாட்கள் சென்றன. கண்ட நாள் முதல் அன்று வரை, ஒரு நாளும் தவறாது வந்து கொண்டிருந்தவன் வருகை தடைப்பட்டது. இன்று வந்திலன்; நாளை நில்லான் எனும் நம்பிக்கையில் நாட்கள் சில சென்றன; பல நாள் கழியவும் அவன் வந்திலன்; அதனால் அவள் கவலை மிகுந்தது; உள்ளக் கவலை உடலை அழித்தது. அவள் உடல் நலக் கேட்டினைக் கண்ணுற்ற ஊர்ப் பெண்டிர், அவள்

குறித்துப் பலப்பல கூறிப் பழிக்கத் தலைப்பட்டனர். காதலனைக் காணாமையால் உண்டான கலக்கத்தோடு, ஊரார் அலர் உரைப்பதால் உண்டாம் கலக்கமும் கலந்து கொள்ளவே, அவள் துயர் அளவிறந்து பெருகிற்று. அத்துயர் தாங்க மாட்டாது துடித்தது அவள் உள்ளம். அவள் உயிருக்கு எந்த நேரத்திலும் கேடுவரக் காத்திருந்தது.

அந்நிலையை அறிந்தாள் தோழி. "பண்டு இவளைக் காதலித்துக் களிப்பூட்டிய அக்கட்டிளங் காளை, இன்று இவ்வாறு வருந்த விட்டனனே! ஆன்றோர் போற்றும் அறநெறி உணர்ந்தவன் என எண்ணி ஏமாந்தோமே! அறநெறி கற்ற அவன்பால் கற்ற வழி நிற்கவேண்டும் என்ற நேர்மை இல்லையே!" என இளைஞனை உள்ளுக்குள்ளே வெறுத்தாள். பின்னர், வாளா வெறுத்து வாய் மூடிக் கிடப்பதில் பயன் இல்லை; அவனைக் கண்டு, இவள் நிலையை எடுத்துக் கூறி, இவளை வரைந்து கொண்டு வாழும் விழுமிய வாழ்க்கை முறையினை விரைந்து மேற்கொள்ள வேண்டிய இன்றியமையாமையினை அவனுக்கு விளங்க உரைக்க வேண்டும் என உளம் கொண்டாள்.

உடனே, அவனைத் தேடி அவன் ஊர்க்குச் சென்றாள். சென்றவள், இளைஞன் கடற்கரையைச் சார்ந்த ஒரு பொழிலின் கண் இருந்தவாறே, கடற் காட்சி களைக் கண்டு கொண்டிருப்பதை அறிந்து, ஆங்கடைந்து அவனைக் கண்டாள். காதலன் வாழ்க்கையைத் தன் கற்பின் திறத்தால் அன்பும், அமைதியும், அறமும் மிக்க இனிய வாழ்க்கையாக வளப்படுத்துபவள் காதலி. அவ்வாறு தன் வாழ்வை வளப்படுத்தும் வாழ்க்கைத்

துணைவியின் வாழ்வு நலம் கெடாவாறு காக்க வேண்டுவது அக்காதலன் கடமை. அவன் அக்கடமையை மறந்து அவள் வாழ்வை நலம் இழக்கப் பண்ணுவது, அவ் வாழ்வைத் தானே அழித்துக் கொள்வது போலாம் என்ற உண்மையை, அவள் உளம் கொள்ளும் வகையில் உரைக்க விரும்பிற்று அவள் உள்ளம். ஆனால், அதை அவ்வாறே உரைக்காது, அவன் கண்டு மகிழும் கடற்காட்சிகளைக் கொண்டே உரைக்க வேண்டும் என்றது அவள் உள்ளுணர்வு. அதனால் அவனை அணுகி, "அன்ப! கரையை அடுத்த கடல் நீரில் மீன் படகுகள் வரிசை வரிசையாக வந்து நிற்கும் அழகை என்னென்பேன்! அவை நின்னாட்டு நாற்படையுள் நிமிர்ந்து செல்லும் களிற்றுப் படைக் காட்சியை நினைப்பூட்டுவது காணக் களிக்கிறது என் உள்ளம்; கரைகளில் கூட்டங் கூட்டமாய் அமர்ந்திருக்கும் கம்புட்கோழி, கனைக்குரல் நாரை, செங்கால் அன்னம், பைங்கால் கொக்கு, கானாங்கோழி, நீர்நிறக் காக்கை, உள்ளான், ஊரல், புள், போதா முதலாம் பறவைகளின் அழகை என்னென்பேன்! நாற்படையுள் வாட்படை யேந்தி வரிசை வரிசையாகச் செல்லும் வீரர்களை விழிமுன் கொணர்ந்து வியப்பூட்டுகின்றது அப்பறவைக் காட்சி; அதோ, ஓவென ஒலிக்கிறதே அலையொலி, அது நின் போர் முரசின் முழக்கத்தினை நினைப்பூட்டுவதை நின் காதுகள் உணரவில்லையோ? அன்ப! தன் நிலை பெயர்ந்து போகத் தன் பெயர் கெடாதவாறு தன்னை வளைத்து நின்று காத்துக் கிடக்கும் கரையை அழிவுறாமல் காக்க வேண்டுவது தன் கடமையாகவும், கடல் நீர் அதை மறந்து, பகைவர்மீது படைகொண்டு போக்கும் பேரரசர்போல், கரை நோக்கிப்

பாயும் இக்காட்சி என்னையே கவர்ந்து விட்டதே! அது வேந்தர் குலத்தில் வந்து உன்னைக் கவர்ந்து விட்டதில் வியப்பில்லையன்றோ? அத்தகு கடற்கரைச் செல்வம் மிக்க கடல் நாட்டுத் தலைவன் நீ!” எனக் கூறிப் பாராட்டினாள். பின்னர், அவன் நாட்டுக் கடல் வளத்தைத் தான் பாராட்டிய முறையால், ‘இவள் இவ்வாறு பாராட்டிய காரணம் யாது?’ என உளம் ஆராய, உரை யெழ மாட்டாது மயங்கி நின்ற அவனுக்குத் தான் வந்த காரியத்தை எடுத்துரைக்கத் தொடங்கினாள்.

“அன்ப! காதல் இன்பம் பெற மாட்டாது, அது பெறத் துடித்திருந்த காலத்தில் உனக்கு அவ்வின்பத்தைக் கொடுத்து, உன்னைப் பேரின்ப வெள்ளத்தில் திளைக்கச் செய்தவள் என் தோழி. அவள், இப்போது, நீ அளிக்கும் இன்பத்திற்கு ஏங்கி நிற்கிறாள். அது பெற மாட்டாமை யால் பெரிதும் வருந்தி அழுகிறாள். அவளுக்கு அவள் விரும்பும் அவ்வின்பத்தை அளித்துக் காக்க வேண்டும் என்ற கருத்துணர்ச்சி உன்பால் இல்லை. அன்ப! இது நினக்கு அறநெறியாகாது. அன்ப! தான் தளர்ந்திருந்த காலத்தில் தானே முன்வந்து தனக்கு உதவிய ஒருவன், பின்னொரு காலத்தில் வறுமையுற்று வாழ்விழந்து வருந்து வனாயின், அதை அறிந்து கொளலுமே விரைந்தோடிச் சென்று அவனைக் காக்க வேண்டுவது, அவன்பால் உதவி பெற்றோனின் உயிர்க் கடமையாதல் வேண்டும். அங்ஙனமின்றி அறிந்தும் அவன், அவனுக்கு உதவ முன்வாரானாயின், அத்தகைய அறக் கொடியோன் இவ்வுலக வாழ்விழந்து அழிந்து போவது உறுதி. செய்ந்நன்றி கொன்றதால் உண்டாய தீமையின் விளைவு, அவனை இவ்வுலகில் வாழ்விழக்கச் செய்வதோடு

நில்லாது, மறுமையிலும் சென்று, அவனை வருத்தும். இது உறுதி. அன்ப! தனக்கு அறிவூட்டி அறநெறியும், அரசியல் நெறியும் காட்டிய ஆசிரியனுக்கு அவன் உள்ளம் மகிழுமாறு உறுபொருள் கொடுக்க வேண்டுவது, கல்வி கற்ற ஒருவனுக்குக் கடமையாகும். அக்கடமையை அவன் மறப்பனாயின், அவன் தன் கைப்பொருளையும் இழந்து அழிவுறுவன் என்பதை நீ நன்கு அறிந்துள்ளனை. அவன் அழிவு எத்துணைப் பெரிதோ அத்துணைப் பெரிதாம் நன்றி கொன்றவன் அழிவும். அவன் அழிவு எத்துணை உறுதியுடைத்தோ, அத்துணை உறுதியுடைத்து இவன் அழிவும். அன்ப! இதை நீ உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

"அன்ப! எம்மை முதல் முதலாகக் கண்டு, என் தோழிபால் காதல் கொண்ட அன்று, நீ, 'பிரியேன்; பிரியின் உயிர் தரியேன்!' என, ஆங்குறையும் கடவுள் முன் ஆணையிட்டு உறுதி உரைத்தாய். அதை உண்மையென உளங்கொண்டே அவள் உன் காதலை ஏற்றுக் கொண்டாள். ஆனால், இன்று நீ அவ்வாணையைக் கைவிட்டு அவளை மறந்து வாழ்கின்றாய். அதனால் அவள் உயிர், அவள் உடலை விட்டுப் பிரியும் காலத்தை எதிர் நோக்கி நிற்கிறது. அத்துணை வருந்துகிறாள் அவள். அன்ப! இது நின் பெருந்தகைமைக்குப் பொருந்தாது. அன்ப! உரைத்த சூள் பொய்த்தவன் உயர்வாழ்வு வாழ்தல் உலகியல் நெறிக்குப் பொருந்தாது. அவன் தன் வாளாண்மை அளிக்கும் வெற்றிச் சிறப்பால், வானோர் உலகம் புகுந்து விழுமிய வாழ்வு பெற்றவிடத்தும், சூளுறவு பொய்த்ததால் வந்த கேடு, ஆங்கும் விடாது சென்று அவனை வருத்தும்; இது உறுதி. அன்ப! செல்வ வாழ்வில் சிறக்க வாழும் ஒருவன், தன்னைச் சார்ந்து வாழும்

கேளிர்க்கும் வழங்கித் தானும் வாழ்தல் வேண்டும். அதோடு, அச்செல்வ நிலையை உயர்த்த நாள்தோறும் ஊக்கம் காட்டி உழைத்தலும் வேண்டும். இவ்விரண்டும் செய்யாதவன் செல்வம், நாளடைவில் சிறிது சிறிதாக அழிந்து போக, அவன் மட்டும் தனியே நின்று அழிந்து போவன். அன்ப! அவன் அழிவு எத்துணை உறுதியும் விரைவும் உடைத்தோ, அத்துணை உறுதியும் விரைவும் உரைத்த சூள் பொய்த்தவன் அழிவிற்கும் உண்டாம்! அன்ப! இதையும் நீ மனங்கொள்ளல் வேண்டும்.

"அன்ப! செய்ந்நன்றிக் கேடு, சூளுரை பொய்த்தல் ஆயபெரும் பிழைகளால் உண்டாகும் கேடு எத்துணைப் பெரிதாம் என்பதை உணர்ந்து உளங்கொள்ளல் வேண்டும். நின் சூளுறவை நம்பி, நின்னை ஏற்று, நினக்குப் பேரின்பப் பெருவாழ்வு அளித்த என் தோழியின் துயரம் மிகமிகப் பெரிது. சினம் மிக்க பெருவேந்தன் ஒருவன் நாற்படையோடும் வந்து தன் அரணை முற்றி விட்டான் என்பதை அறிந்த அவ்வரணகத்தான் உள்ளம் எத்துணைப் பாடுபடுமோ அத்துணைப் பாடுபடுகிறது அவள் உள்ளம். தனக்குப் படைத்து வழங்கவல்ல நல்லோன் வரவைக் காண அவன் உள்ளம் எவ்வளவு துடிக்குமோ, அவ்வளவு துடிக்கிறது, உன் துணையைப் பெற என் தோழியின் உள்ளம். இதை உணர்ந்து, அவளை வரைந்து கொண்டு வாழ்வளிக்கும் முயற்சியினை விரைந்து மேற்கொள்ளும் வண்ணம் உன்னை வேண்டிக் கொள்கிறேன்," என்று கூறி வணங்கி விடைபெற்று மீண்டாள்.

"நிரை திமில் களிறாகத், திரையொலி பறையாகக்,
கரைசேர் புள்ளினத்து அஞ்சிறை படையாக,
அறைசு கால்கிளர்ந்தன்ன உரவுநீர்ச் சேர்ப்ப! கேள்;

கற்பித்தான் நெஞ்சு அழுங்கப் பகர்ந்து உண்ணான் விச்சைக்கண்
தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்,
ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான்; மற்றவன்
எச்சத்துள் ஆயினும் அஃது எறியாது விடாதே காண்.

கேளிர்கள் நெஞ்சு அழுங்கக் கெழுவுற்ற செல்வங்கள்
தாள் இலான் குடியேபோல் தமியவே தேயுமால்,
சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின், மற்றவன்
வாள்வாய் நன்றாயினும் அஃது எறியாது விடாதே காண்.

ஆங்கு;
அனைத்து; இனிப் பெரும!அதன் நிலை நினைத்துக் காண்;
சினைஇய வேந்தன் எயிற்புறத்து இறுத்த
வினைவரு பருவரல் போலத்
துனைவரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே.”

*தலைவன் வரைவு நீட்டித்துழி, தோழி, தலைவியது ஆற்றாமை கூறித் தலைவனை வரைவு கடாயது.*

1. நிரை – வரிசை; திமில் – மீன்படகு; 2. அம்சிறை – அழகிய தோகை; அம்சிறைப் புள்ளினம் என மாற்றுக. 3. கால்கிளர்த்தல் – படையெடுத்துப் போதல்; உரவுநீர் – ஆற்றல் மிக்க கடல் நீர். 4. அழுங்க – வருந்த. 5. தப்பித்தான் – பிழை செய்தவன். 6. ஒற்கம் – தளர்ச்சி; எச்சம் – இறந்து பெறும்நிலை; எறியாது – வருத்தாது. 8. கெழுவுற்ற – வந்து அடைந்த. 9. தாள் – முயற்சி; 11. வாள்வாய் – வாளின் கூர்மையால் பெற்ற பெருநிலை. 13. அனைத்து – அத்தன்மைத்து. 14. இறுத்த – வந்து தங்கிய. 15. விளைவரு – போர் வினையால் உண்டாம்; பருவரல் – வருத்தம். 16. துணை வரு – துடிக்கும்.

## 33

# கண்டனம் அல்லமோ?

இளவேனிற் பருவத்து மாலைக் காலம் அது. தமிழகத்துப் பேரூர் ஒன்றின் பெருமைசால் குடியினைச் சேர்ந்த பெண் ஒருத்தி, தன் மனையின் தலைவாயிற்கண் நின்றிருந்தாள். ஊரில் வேனில் விழா நடைபெற்றுக் கொண்டிருந்தது. விழாக் கொள்ளும் சிவன் கோயிலி னின்றும், இறைவன் திருவுருவம், ஆடை அணிகளாலும், அரிய மலர் மாலைகளாலும் நன்கு ஒப்பனை செய்யப் பெற்று உலா வந்து கொண்டிருந்தது. ஊர் மக்களெல்லாம் ஒன்று திரண்டு இறைவன் திருவுலாக் காட்சியைக் கண்டு களிப்புக் கடலில் ஆழ்ந்திருந்தனர். ஆனால், அப் பெண்ணின் கண்ணோ, கருத்தோ அவ்விழா நிகழ்ச்சி எதிலும் கலந்து கொள்ளவில்லை. நகர்க்கோடியில் வந்து கூடும் நீண்ட பெரிய சாலையிலேயே நிலைத்துக் கிடந்தன அவள் கண்கள். அக் கண்களினின்றும், நீர்த் துளிகள், கண்ணாடி முத்துக்களெனக் கசிந்து கொண்டேயிருந்தன.

அந்நிலையிலேயே அவள் நெடிது பொழுது அசைவற்றுக் கிடந்தாள்.

உலா வரும் இறைவன் திருவுருவக் காட்சியைக் கண்டு களித்தவாறே ஆங்கு வந்த அப்பெண்ணின் ஆருயிர்த் தோழி, அவளை அந்நிலையில் கண்டாள். கண்ட தோழியின் உள்ளம் துயர்க்குள்ளாகிவிட்டது. சற்று முன், விழாக் காட்சிகளைக் கண்டு அவள் பெற்ற பேரின்பம் அவள்பால் விடைபெற்றுச் சென்று விட்டது. கணவன் பிரிவால் கலங்கியிருக்கும் இவளை எவ்வாறு தேற்றுவேன் எனக் கவலையுற்றாள் அத் தோழி. பெண்ணைப் பைய அணுகினாள். "பெண்ணே! பொருளீட்டி வரப் போய் விட்டார் காதலர்; பிரிந்துறை வாழ்வை நான் பொறேன் என்பதை அவர் அறியா ராயினர்; என்னே அவர் அன்பு இருந்தவாறு!" என்றெல்லாம் எண்ணிக் கண்ணீர் விட்டுக் கலங்குகிறது உன் உள்ளம். பெண்ணே! வருந்தும் உன் உள்ளத்தின்பால் குறை கண்டிலேன். அது பருவத்தின் கோளாறு. இன்ப வாழ்வில் இடையீடின்றிக் கிடக்க வேண்டிய காலத்தில், அவ்வின்பத்தை அளிக்க வல்ல அவர் போய் விட்டாரே என எண்ணி அது வருந்துவது இயல்பே. ஆனால், நீ இப்போது பெற்றிருக்கும் புது நிலை உனக்களித்திருக்கும் புதிய பொறுப்பினையும் நீ உணர்தல் வேண்டும். உணர்ந் தால் உன் கவலை கணப் பொழுதில் மறைந்து போம்.

"பெண்ணே! பொருள் தேடிப் போயிருக்கும் உன் கணவர் உன் அன்பிற்கு அடிமைப் படாதவர் அல்லர். அவரை, உன்பால் ஈர்க்க வல்ல பேரழகு வாய்க்கப் பெறாதவள் அல்லள் நீயும். கங்கையைச் சடையில் கரந்து, காளை மீது ஊர்ந்து உலாவரும் இறைவனின் பொன்னார்

திருமேனியை வென்றது உன் மேனி. அவன் மார்பிற் கிடந்து அசையும் அழகிய அணிகளை நிகர்க்கும் தலைக் கோலங்களைத் தாங்கி நிற்கும் உன் கருநிறக் கூந்தலின் கவினுக்கும் ஓர் ஈடு உண்டாமோ? பொன்னிற மேனிப் பொலிவாலும், கருநிறக் கூந்தற் கவினாலும் நீ பெற்றிருக்கும் பேரழகை ஒரு முறை பார்த்தவர் உன்னைக் கணப் பொழுது பிரிந்திருக்கவும் கருதுவரோ? ஆனால் அத்தகு பேரழகுடையாய் நீ என்பதை அறிந்தும், அவ்வழகிற்கு அடிமைப்பட்டுப் போன தன் உள்ளத்தை ஒருவாறு தன் வயப்படுத்திக் கொண்டு போயுள்ளார் உன் கணவர்.

“பெண்ணே! அவ்வாறு போயிருக்கும் உன் காதலர், தாம் மேற்கொண்டு செல்லும் பணி எண்ணற்ற இடையூறுகளைக் கொண்டது என்பதை அறியாதவரோ, அவ்விடையூறுகளை அகற்றி அப்பணியில் வெற்றி கண்டு மீள்வது விரைவில் முடியக் கூடியது, எளிதில் இயலக் கூடியது என எண்ணி ஏமாறுபவரோ அல்லர். அப்பணி இடையூறும் இன்னலும் மிக்கது என்பதை அவர் நன்கு அறிவார். மரம் செடி கொடிகள் மண்டி வளர்ந்திருக்கும் மலைகளின் இடை இடையே நுழைந்து நுழைந்து செல்வதால், செல்வாரைச் செல்லும் வழி அறிய மாட்டாது மயங்க வைக்கும் அம்மலைக் காட்டு வழி, கோடை ஞாயிற்றின் கொடிய வெப்பத்தால் ஆங்காங் குள்ள மூங்கிற் புதர்கள் நெருப்புற்று ஒருபால் நின்று எரிய, மலையுச்சி மரங்களில் பற்றிக் கொண்ட பெருந்தீ மற்றொரு பால் பெருக, அவ்விரு பெரும் தீயும் ஒன்றோடொன்று போரிடுவது போல் ஒன்று கலந்து, வான் அளாவ எழுந்து பரந்து, அம்மலையிடை வழியை

அடைத்துக் கொள்ளும் கொடுமையைக் குறைவறக் கொண்டது. கோடை ஞாயிற்றின் வெப்பம் மிக்க கதிர்க் கொடுமையால் மரமும் செடியும் வெந்து கரியாக, மண்ணும் மலையும் உருக, நினைப்பவர் நெஞ்சையும் சுடும் கொடுமை மிக்கது தாம் கடந்து செல்ல வேண்டிய அக்காட்டு வழி என்பதை அவர் அறியாதவரோ? அதை அவர் அறிவார். அவ்வழிச் செல்வார் எத்துணை ஆற்றல் வாய்ந்தவரேனும், ஆண்டு அல்லல் அடைந்து அழுது அழிவர். அவ்வழியைக் கடக்க அவர் அரும் பாடுபட வேண்டி வரும். அரும் பாடுபடினும் அழிவுறாது கடந்து போய் மீண்டு வந்தடைதல் அரிதினும் அரிதாம் என்பதை அவர் நன்கு அறிவார். அறிந்தே, அவ்வழிச் செலவினை அவர் துணிந்து மேற்கொண்டுள்ளார். அம்மட்டோ! தாம் செல்லும் வழியின் அல்லல் எத்தகைத்து என்பதை நீ அறிவாய் என்பதையும் அவர் அறிவார். அருகிருந்து அன்பு காட்ட வேண்டிய கணவர் அகன்று வாழ எண்ணுகின்றனரே என்ற ஏக்கத்தால் இயல்பாகவே வருந்தி வாடும் உன் உள்ளம், அக்கணவர் கடந்து செல்ல வேண்டிய காட்டு வழியின் கொடுமையினை அறியு மாயின் எத்துணை வருந்தும் என்பதையும் அவர் அறிவார். அவ்வருத்த மிகுதியால் உன் உடல் நலன் எவ்வளவோ கெடும். உன் பொன்னிற மேனி ஒளி இழந்து மங்கும். உன் உருவமே வேறாம். தலைக்கோலம் தாழ்ந்து அழகு செய்யும் உன் கூந்தல் மாசு போக நீராடி, எண்ணெய் இட்டு அழகு பெறுதலை மறந்து காய்ந்து கருகும் என்பதையும் அவர் அறிவார். அறிந்தும், அவர் பிரிந்து போயுள்ளார். அம்மட்டோ! மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்த வேண்டிய மனைவியை மாளாத் துயர்க்கடலில்

ஆழவிடுவது மாண்பன்றே! பிரியேன் என ஆணையிட்டு அன்பு கொண்ட மனைவியை, அவ்வாணையைக் கை விட்டுப் பிரிந்து போவது அறநெறி ஆகாது என்பதையும் அவர் உள்ளம் அறியும். அறிந்தும் பிரிந்து போயுள்ளார்.

"பெண்ணே! இந்நிலையை எண்ணிப்பார். மனைவி பிரிதற்கரிய பேரன்பினள்; காணத் தெவிட்டாக் கவின் உடையள் என்பதை அறிந்தும், செல்லும் வழி செல்ல லாகாக் கொடுமை மிக்கது; அவ்வழிச் செல்வார் உயிர் கொண்டு மீள்தல் அரிதினும் அரிதாம் என்பதை அறிந்தும், கணவனைப் பிரிந்து வாழ நேர்ந்த தனிமை நினைவாலும், கணவன் கடந்து செல்லும் காட்டு வழியின் கொடுமை நினைவாலும் மனைவி மனத்துயர் மிகுந்து மாண்டு போவாள் என்பதை அறிந்தும், அவ்வாறு அவளை மாளாத் துயரில் ஆழவிட்டுப் போவது அறநெறி நிற்பார்க்கு அழகாகாது என்பதை அறிந்தும், அவர் பிரிந்து போயுள்ளார் என்றால், அவர் மேற்கொண்டு போயுள்ள பணி எத்துணைச் சிறந்ததாதல் வேண்டும் என்பதை, நீ சிறிது எண்ணிப் பார்ப்பாயாக. அன்புக் கேட்டினும் சிறந்தது அது, உயிரிழப்பினும் உயர்ந்தது அது, அறக் கேட்டினும் ஆக்கம் உடைத்து அது என உணர்ந்தமையால் அன்றோ, அவர் அது குறித்துப் பிரிந்து போயுள்ளார். பெண்ணே! அவர் தேடிப் போயிருக்கும் பொருள், உண்மையில் அத்துணைச் சிறப்பு வாய்ந்ததே. மதிப்பற்ற வரையும் மதிப்புள்ளவராக்கும் மாண்புடையது அப்பொருள். அறத்தையும் இன்பத்தையும் ஒருங்கே ஈட்டி அளிக்கவல்ல அத்துணைச் சிறப்புடையது அப்பொருள். ஈத்துவரும் இன்பத்தையும், ஈதலால் உளவாகும் இறவாப் புகழையும் அளிக்கவல்ல உயர்வுடையது அப்பொருள்.

தன்னையும் வாழ வைத்துத் தான் வாழும் உலகையும் வாழ வைக்கும் தனிச் சிறப்புடையது அப்பொருள். பொருளின் இவ்விழுச் சிறப்பினை அவர் விளங்க உணர்ந்ததினாலேயே, அவர் இவ்வளவு இடர்ப்பாடு களையும் எண்ணாது பிரிந்து போயுள்ளார். பெண்ணே! கணவன் கருத்தறிந்து நடப்பதே கற்புமிகு மனைவிக்குக் கவினாம். அதை மறந்து, நீ இவ்வாறு மனத்துயர் கொள்வது மாண்பாமோ? நிற்க.

"பெண்ணே! பிரிந்து போயிருக்கும் உன் கணவர் தம் பிரிவால் உன் பொன்னார் மேனி பொலிவு குன்றும் என்பதை அறிவார். அவர் அவ்வழகுக் கேட்டினைக் காணப் பெறார். ஆதலின் தாம் மேற்கொண்டு சென்றுள்ள பணி எத்துணை சிறந்ததேயாயினும், கடந்து செல்ல வேண்டிய காட்டு வழி எத்துணை இடையூறு மிகுந்ததே யாயினும், அதை எளிதிற் கடந்து போய், விரைந்து வினை முடித்துக் கொண்டு வீடு வந்து சேர்வர். குறித்துச் சென்ற காலம் கடந்து போகா முன்பே வந்து சேர்வர். அவர் வாய்மை வழுவாதவர். திருவாதிரைப் பேருடையானாய நம் பெருமான் உவந்து அணியும் இச் சண்பக மலர் பருவம் பொய்யாது மலர்தல் எவ்வளவு உண்மையும் உறுதியும் உடைத்தோ, அத்துணை உண்மையும் உறுதியும் உடைத்து, அவர் உரைத்துச் சென்ற உரை.

"பெண்ணே! மற்றொன்றையும் நீ மறந்து விட்டனை. உன் கணவர் சென்ற காட்டு வழி கொடுமைகள் மலிந்தது என்பதை நீ அறிவாய். அவ்வழி, தன்பால் வரும் நல்லோரையும் நாசம் பண்ணும்; அவ்வழியில் சென்றுள்ளார் உன் கணவர். அவர்க்கு ஆங்குக் கேடு

நேராதிருக்க வேண்டுமே என்ற கவலை உனக்கில்லை. அது குறித்து ஆதிரைப் பேருடைய அமரனை நினைந்து நெஞ்சுருக வேண்டும் நினக்கும். அறநெறி நிற்போரையும் அழிக்கும் அவ்வழியிற் சென்றிருக்கும் உன் கணவரோ அறம் பிழைத்த பழியுடையவராவர். பிரியேன் என ஆணையிட்டு உரைத்த உரையை அவர் அழித்து விட்டமையால் அறக் குற்றம் உடையராகி விட்டார். அதனால், அவர் ஆங்குக் கேடுறுவது உறுதியாகி விடுமே என எண்ணி அஞ்சுகிறது என் நெஞ்சு. இந்நிலையில் அவர் அறம் பிழைத்தமையால் துயர்க்கு உள்ளான நீ, அறக் கடவுளை நோக்கி, "அவர் அறம் பிழைத்தமையால் யான் கேடுறினும், ஏ, அறக்கடவுளே!- அவரை அழித்து விடாதே! அவர் அழிவு என் அழிவாம். ஆகவே அவரை அது குறித்து அல்லற் படுத்தாதே!" என வேண்டிக் கொண்டால் அவர்க்கு நேர இருக்கும் கேடு ஒருகால் நேராது பிழைப்பினும் பிழைப்பர். அதை மறந்து, அவர் நல்வாழ்வில் நாட்டம் உடைய நீயே, அவரைப் பெற்றுப் பேரின்பம் பெறத் துடித்து நிற்கும் நீயே, அவர் பிரிவு குறித்து, சூளுரை பொய்த்த அவர் தவறு குறித்து வருந்துவையாயின், அவரை அறக் கடவுள் அழிப்பது உறுதியாக விடுமே! அவர் அழிவிற்கு நீயே காரணமாகி விடுவையே! இதை எண்ணியாவது மனத்துயர் மறந்து மகிழ்ந்து காட்ட வேண்டாவோ?" எனப் பலப் பல கூறி அவளைத் தேற்றினாள்.

"அயம்திகழ் நறுங்கொன்றை அலங்கலம் தெரியலான்
இயங்குஎயில் எயப்பிறந்த எரிபோல எவ்வாயும்
கனைகதிர் தெறுதலின் கடுத்து எழுந்த காம்புத்தீ
மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்குஅழல்

மயங்குஅதர் மறுகலின் மலைதலைக் கொண்டென
விசும்புற நிவந்து அழலும் விலங்குஅரு வெஞ்சுரம்;

இறந்து தாம்எண்ணிய எய்துதல் வேட்கையால்
அறம்துறந்து ஆய்இழாய்! ஆக்கத்திற் பிரிந்தவர்
பிறங்குநீர் சடைக்கரந்தான் அணியன்ன நின்நிறம்
பசந்து, நீ இனையையாய் நீத்தலும் நீப்பவோ?

கரிகாய்ந்த கவலைத்தாய்க் கல்காய்ந்த காட்டகம்
வெருவந்த ஆறுஎன்னார் விழுப்பொருட்கு அகன்றவர்
உருவஏற்று ஊர்தியான் ஒள்ளணி நக்கன்ன, நின்
உருவிழந்து இனையாய் உள்ளலும் உள்ளுபவோ?

கொதித்து உராய்க் குன்றுஇவர்ந்து கொடிகொண்ட கொடையால்
ஒதுக்கரிய நெறியென்னார் ஒண்பொருட்கு அகன்றவர்
புதுத்திங்கட் கண்ணியான் பொற்பூண் ஞான்றன்னநின்
கதுப்புஉலறும் கவினையாய்க் காண்டலும் காண்பவோ?

ஆங்கு,

அரும்பெறல் ஆதிரையான் அணிபெற மலர்ந்த
பெரும்தண் சண்பகம் போல, ஒருங்கவர்
பொய்யா ராகுதல் தெளிந்தனம்
மையீர்ஓதி, மடமொழி யோயே!"

*பொருள்வயிற் பிரிந்த தலைவனை நினைந்து ஆற்றாத தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.*

1. அயம் — நீர்நிலை; தெரியல் — மாலை; 2. இயங்கு எயில் — திரிபுரம்; 3. கணைகதிர் — மிக்க கதிர்களையுடைய ஞாயிறு; தெறுதல் — காய்தல்; காம்புத்தீ — மூங்கில் நெருப்பு; தீயும் — அழலும், அதர்மறுகலின் என்க. 5. அதர் — வழி; மறுகலின் — அடைதலின்;

மலைதல் – போரிடல். 6. நிவந்து – உயர்ந்து; விலங்கு அரு – குறுக்கிட்டுக் கிடக்கும் கடத்தற்கு அருமை வாய்ந்த. 7. இறந்து– கடந்து 8. ஆக்கம் – ஆக்கம் அளிக்கும் பொருள். 9. பிறங்கு – விளங்கும். 10. நீத்தல் – கைவிடுதல். 11. கவலை – கவர்ந்த வழிகள், கல் – மலை. 12. வெருவந்த – அஞ்சத்தக்க. 13. ஏற்று ஊர்தி – காளை வாகனம். 15. கொடி – கீழ்த்திசை; குன்று – கீழ்த்திசைமலை; இவர்ந்து – தோன்றி, 17. ஞான்றன்ன – தொங்க விட்டாற் போன்ற – 18. கதுப்பு – கூந்தல். 20. ஆதிரையான் – சிவபெருமான்.

